அவன் அவருடைய மனைவிக்கு அக்கா பிள்ளை என்பது உண்மைதான். தாய் தகப்பன் கிடையாது. அவனுக்கு இருந்த உறவு தங்கவேலுவின் மனைவியான அவனுடைய சித்தியும், காஞ்சிபுரத்திலேயே உள்ள தாய்மாமன் ஒருவனுந்தான். அந்த ஊரில் தாய்மாமன் வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டு, ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடையில் தினக்கூலியாக ஒன்றரையும் இரண்டும் வாங்கிக்கொண்டு வேலைசெய்து வந்தானாம். வயிற்றுவலி வந்து ஆறேழு மாதங்களாக வேலை இல்லை. சம்பாத்தியமும் இல்லை. நோயும் வேறு. இந்த நிலையில் தாய்மாமன் வீட்டிலிருந்து அவனை ஒரு வழியாக விரட்டிவிட்டார்கள். அங்கிருந்து, சித்தியை நம்பிச் சென்னைக்கு வந்திருக்கிறான், வைத்தியம் பார்ப்பதற்கு.

இவ்வளவு கதையையும் தங்கவேலு சொல்லிக்கொண்டிருக்கும் போது அவன் தெருத் திண்ணையில்தான் இருந்தான். நாங்கள் பேசியது அவனுக்கு நன்றாகக் கேட்டிருக்கும். கேட்க வேண்டும் என்பதற்காகத்தான் தங்கவேலுவும் குரலைச் சற்று உயர்த்தியே பேசினார். அவர் வாயிலிருந்து வெளிப்படும் ஒவ்வொரு சொல்லும் அவனைக் குற்றம் சாட்டுவது போலவும், அவன் எதற்காக இங்கே வந்தான் என்று கேட்பதுபோலவும், அவன் வீட்டை விட்டு உடனே தொலைந்தால் நல்லது என்று கருதுவது போலவும் ஒலித்தது. எனக்கும் அது பிடித்திருந்தது.

தங்கவேலுவின் மனைவிக்கும் அவன் வந்திருப்பது பிடிக்கவில்லையாம்! என் மனைவி சொன்னதைப் பார்க்கும்போது, தங்கவேலுவை முந்திக்கொண்டு அவனை விரட்டுவதற்கு அவள் அவசரப்படுவதாகத் தெரிந்தது. எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

"தொலைகிற பீடை சீக்கிரமா தொலையட்டும்" என்று சொல்லி என் மனப் பாரத்தைச் சிறிது இறக்கி வைத்தேன்.

என் மனைவி அப்பொழுதும் அவனிடம் இரக்கம் காட்டிப் பேசினாள். "ஏன் இப்படிச் சொல்றீங்க? அவன் நம்மை என்ன செய்கிறான்? எதுக்கு ஓர் அனாதையைப் போய் இப்படிச் சொல்லணும்?" என்று என்னை இலேசாகக் கண்டிக்கவே ஆரம்பித்துவிட்டாள்.

நாளை நம் குழந்தைகளுக்கு ஏதாவது ஒண்ணுன்னா இவனா வந்து தாங்கப் போறான்?" என்று கோபத்தைக் காட்டிக்கொள்ளாமலே சொன்னேன்.

"அப்படி ஒண்ணும் வந்துடாது. இப்படிப் பயந்தால் உலகத்திலேயே வாழ முடியாது".

"சரி சரி, புத்திமதி நல்லாத்தான் இருக்கு. பேசாமல் போ" என்று அவள் வாயை அடைத்துவிட்டு, அவளோடு பேசப் பிடிக்காமல் வந்துவிட்டேன்.

ஏறக்குறையத் தினந்தோறும் இப்படி நாங்கள் முரண்படுவதும், நான் கவலையும் பயமும் கொள்ளுவதுமாக ஆகிவிட்டது.

மேலும் இரண்டு நாட்கள் கழிந்தன. ஒவ்வொரு நாள் இரவும் அவன் ஓலத்துடனும் என் கவலையுடனுந்தான் கழிந்தது. ஆறாம் நாள் தங்கவேலு நான் சற்றும் எதிர்பாராத விதத்தில் அவனை அழைத்துக்கொண்டு வெளியே கிளம்பினார். நான் போய் எட்டிப் பார்த்தேன். அவனைச் சர்க்கார் ஆஸ்பத்திரியில் சேர்த்துவிடப் போவதாகத் தங்கவேலு சொன்னார். எனக்கு அப்போது ஏற்பட்ட மகிழ்ச்சியையும் நிம்மதியையும் இவ்வளவு அவ்வளவு என்று கூறுவதற்கில்லை.

"அதுதான் நல்ல யோசனை, அங்கே நல்லா கவனிப்பாங்க" என்று ஒப்புக்குச் சொன்னேன். அவன் என்னைப் பார்த்து, என் பூரண ஆசீர்வாதத்தை வேண்டி, கை எடுத்துக் கும்பிட்டு, "நான் போய்ட்டு வர்றேன்" என்றான்.

"போய்ட்டு வாப்பா. கடவுள் கிருபையால் சீக்கிரம் குணமாகட்டும், போய்ட்டு வா" என்று வாழ்த்தினேன்.

மனத்தில் நஞ்சாக வெறுத்துக்கொண்டு அவனை இப்படிப் பொய்யாக வாழ்த்தி அனுப்பியதை இன்று நினைத்தாலும் எனக்கு வெட்கமாக இருக்கிறது. அவன் என்னையும் மதித்து என் ஆசீர்வாதத்திலும் நம்பிக்கை வைத்துக் கும்பிட்டதை நினைத்துவிட்டாலோ, நெஞ்சில் ஈட்டி பாய்வது போல் இருக்கிறது.

தங்கவேலுவும் அவனும் டாக்ஸியில் ஏறிக்கொண்டு போனார்கள்.

"ஒரு பெரிய பாரம் நீங்கியது" என்று தங்கவேலுவின் மனைவி என் மனைவியிடம் சொன்னதைக் கேட்டேன். நான் சொல்ல நினைத்த வார்த்தைகள் அவை. என் மனைவி ஒன்றும் சொல்லவில்லை.

தங்கவேலு சொன்னபடியே அவனுக்கு அப்புறம் ஆபரேஷன் செய்யப்பட்டது. அதற்கு முன்பு ஒரு நாள் என் மனப்போக்கை அடியோடு மாற்றி, என்னை நினைத்து நானே வெட்கப்படும்படியாகவும், அவனை நினைத்து நான் கண்ணீர்விடும்படியாகவும் ஒரு சம்பவம் நடந்தது.

அன்று இரண்டாவது சனிக்கிழமை. எனக்கு விடுமுறை. வீட்டிலேயே இருந்தேன். தங்கவேலு எங்கோ வெளியே போயிருந்தார். அவருடைய மனைவி தன் இரு குழந்தைகளோடு பகல் காட்சி சினிமா பார்க்கப் பதினொரு மணிக்கே கியூவில் நிற்கப் போய்விட்டாள் என்று கேள்விப்பட்டேன். மத்தியானம் ஒரு மணிக்கு ஒருவன் வந்து, "குப்புசாமி இருக்கிறாரா?" என்று கேட்டான். அவனுக்குச் சுமார் முப்பது வயது இருக்கும்.

"குப்புசாமியா? அப்படி இங்கே யாரும் இல்லையே! நீ யார்?" என்று நான் கேட்டேன்.

"காஞ்சிபுரம். அங்கிருந்துதான் குப்புசாமி இங்கே வந்தாரு. இது தங்கவேலு வூடுதானே?"

"ஆமாம், ஆனால் குப்புசாமின்னு யாரும் இல்லையே இங்கே!"

"இங்கேதான் வந்தாருங்க – வவுத்து வலிக்கு மருந்து சாப்புடணும்னு . . ."

இந்தச் சம்பாஷணையை உள்ளேயிருந்து கேட்ட என் மனைவி எழுந்து ஓடி வந்தாள்.

"குப்புசாமி அந்தப் பையன்தான்; ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கிற பையன்" என்றாள்.

"குப்புசாமியைப் பார்க்கத்தான் வந்தேங்க. ஊருக்கும் அவசரமா போகணும். அவங்க வர ரொம்ப நேரமாவுங்களா?. . . குப்புசாமி இங்கே வந்தாரா இல்லையா?" என்று கவலையோடு அவன் கேட்டான்.

அவன் குப்புசாமிக்கு நன்றாகத் தெரிந்தவனாம். முந்தின நாள் இரவு சென்னையில் உள்ள தன் சொந்தக்காரர் ஒருவரைப் பார்க்க வந்தவன், ஊர் திரும்பும் வழியில் அவசர அவசரமாகக் குப்புசாமியைப் பார்க்க வந்திருக்கிறான்.

குப்புசாமி வேலை செய்துவந்த சைக்கிள் கடைக்கு எதிரே ஒரு விறகுக் கடையில் அவன் கூலி வேலை செய்பவன். அவனுடைய பக்கத்து வீட்டுக்காரன் வீரப்பன் என்பவனும் குப்புசாமியும் ரொம்ப ரொம்பச் சிநேகமாம்.

குப்புசாமி நோய் காரணமாக வேலையை இழந்திருந்த சமயத்தில் தாய்மாமன் வீட்டில் துன்பப்பட்டுக்கொண்டிருந்தபோது வீரப்பன்தான் அவ்வப்போது அவனை அழைத்துவந்து சாப்பாடு போடுவானாம். வீரப்பன் வீடு கட்டுகிற ஒரு மேஸ்திரியிடம் சிப்பந்தியாக வேலை செய்பவன். சில நாட்கள் வேலையில்லாமல் போய், வரும்படியும் இல்லாமல் கஷ்டப்படுகிற ஏழையாக இருந்தாலும், கடன் வாங்கியாவது சிநேகிதனுக்கு உதவி செய்து வந்தானாம் வீரப்பன்.

காஞ்சிபுரத்துக்காரன் இதைச் சொல்லும்போது, 'இவனுக்கு (குப்புசாமிக்கு) இப்படி ஒரு நட்பா? இவன் உயிருக்கு இவ்வளவு மதிப்பு கொடுக்கிற ஓர் ஆத்மாவும் இந்த உலகத்தில் இருக்கிறதா?' என்று நான் வியந்துகொண்டிருந்தேன்.

காஞ்சிபுரத்தான் பேச்சை முடித்துக்கொண்டு, ஊருக்குப் புறப்படத் தயாரானான்.

"சரிங்க, அப்போ நான் போயிட்டு வர்ரேனுங்க. குப்புசாமி கிட்டக் குடுக்கச் சொல்லி வீரப்பன் ஒரு லெட்டர் குடுத்தான் இதைக் குடுத்துடுங்க. மூணு ரூபாயும் குடுத்தனுப்பினான். . ."

சட்டைப் பையிலிருந்து கடிதத்தையும் மூன்று ரூபாயையும் எடுத்து, "குப்புசாமிகிட்டே குடுத்துடுங்க. இல்லே, தங்கவேலு கிட்ட வேணும்னாலும் குடுத்துடுங்க. இன்னொரு சமயம் பட்டணம் வந்தா ஆசுபத்ரிலே போயி பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் கடிதத்தையும் ரூபாயையும் என்னிடம் கொடுத்தான். அப்புறம் ஒரு நிமிஷம் எதையோ யோசித்துப் பார்த்தான். மனசுக்குள் கணக்கு போடுகிறவன்போல் அவனுடைய முகபாவனையும் தலையசைப்பும் இருந்தன. மறு நிமிஷத்திலேயே, "இந்தாருங்க, இதையும் குப்புசாமிக்குக் குடுக்கச் சொல்லுங்க" என்று சொல்லித் தன் இடது கையில் தொங்கிய துணிப் பையிலிருந்து இரண்டு சாத்துக்குடிப் பழங்களை எடுத்துக் கொடுத்தான்.

"என் பசங்களுக்கு நாலு பழம் வாங்கினேன். போகட்டும். இவரு ஆசுபத்திரிலே இருக்கிறாரு. நாம்ப வேறு என்னத்தைச் செய்யப் போறோம்?"

இத்துடனும் அவன் நிறுத்தவில்லை! தன் உபயமாக ஒரு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து என்னிடம் கொடுத்து, குப்புசாமியிடமோ தங்கவேலுவிடமோ சேர்க்கச் சொன்னான். அவன் குப்புசாமிக்காகத்தான் கொடுத்தானோ, குப்புசாமிக்காகக் காஞ்சிபுரத்தில் இருந்துகொண்டு கண்ணீர் வடிக்கும் அந்த வீரப்பன், குப்புசாமியின் உயிருக்குக் கொடுக்கும் மதிப்பைக் கண்டுதான் கொடுத்தானோ?

என்னிடமும் என் மனைவியிடமும் விடைபெற்றுக்கொண்டு காஞ்சிபுரத்துக்காரன் போய்விட்டான்.



அவன் கொடுத்த கடிதத்தின் மடிப்பைப் பிரித்து வாசித்துப் பார்த்தேன். வீரப்பன் எழுதிய அந்தக் கடிதத்தில் எழுத்துப் பிழைகளையும் பிற தவறுகளையும் திருத்திக் கீழே கொடுக்கிறேன்.

"என் உயிர் நண்பன் குப்புசாமிக்கு எழுதிக்கொண்டது. நீ இங்கிருந்து போனதிலிருந்து என் உயிர் இங்கே இல்லை. சதா உன் ஞாபகமாகத்தான் இருக்கிறேன். கடவுள் அருளால் நீ உடம்பு சௌக்கியமாகி வரவேண்டும் என்று தினமும் ஒரு தடவை கோவிலுக்குப் போய்க் கும்பிடுகிறேன். எனக்கு இப்போது வேலை இல்லை. கொஞ்ச நாட்களாக வருமானம் இல்லாமல் இருக்கிறேன். நேற்று கட்டைத் தொட்டி ஆறுமுகம் பட்டணம் போவதாகச் சொன்னான். உடனே, ஓடி ஒருவரிடம் மூன்று ரூபாய் கடன் வாங்கி அவனிடம் கொடுத்தனுப்பியிருக்கிறேன். நானே வரலாம் என்று பார்த்தேன். வந்தால் இந்த மூன்று ரூபாயும் பஸ்ஸுக்குச் செலவாகிவிடும். உனக்குச் சமயத்தில் உதவியாக இருக்கும் என நினைத்து, நான் ரூபாயைச் செலவழித்துக்கொண்டு வராமல், ஆறுமுகத்திடம் கொடுத்தனுப்பி இருக்கிறேன். இன்னோர் இடத்திலும் பணம் கேட்டிருக்கிறேன். கிடைத்தால் நான் சீக்கிரம் உன்னைப் பார்க்க வருவேன். உன்னைப் பார்த்தால்தான் நான் தின்னும் சோறு, சோறாக இருக்கும்.

உன் நண்பன்
க. வீரப்பன்,
காஞ்சிபுரம்.

கடிதத்தைப் பார்த்துவிட்டு நிம்மதியோடு என்னால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. என் மனைவியின் எதிரே கண்ணீர்விடவும் வெட்கமாக இருந்தது. அவளிடம் கடிதத்தைக் கொடுத்து, "படித்துப் பார்" என்று அவசர அவசரமாகச் சொல்லிவிட்டு, குளிக்கும் அறைக்குள் போய் உண்மையிலேயே கண்ணீர் சிந்தி அழுதுவிட்டேன். முகத்தைக் கழுவிக் கொண்டு நான் வெளியே வந்தபோது, என் மனைவி வழக்கம்போல் இரக்கம் நிறைந்த குரலில், "பாவம்!" என்றாள். "ஏழைகள்தான் எவ்வளவு பிரியமாக

இருக்கிறார்கள்!" என்று பரவசத்துடனும் உணர்ச்சிப் பெருக்குடனும் சொன்னாள்.

"நாமும் தங்கவேலுவோடு இன்னிக்கு ஆசுபத்திரிக்குப் போகலாமா?" மனைவி ஆச்சரியப்பட்டாள் என்பதைவிட, என் சொற்களைக் கேட்டு ஆனந்தம் அடைந்தாள் என்றுதான் சொல்லவேண்டும்.

"போகலாமே. ஒரு டஜன் சாத்துக்குடி வாங்கிக் கொண்டால் நல்லது. சும்மாவா போவது?"

தனியாக உட்கார்ந்திருந்த நான் என்னை நினைத்தே வருந்தியதையும் வெட்கப் பட்டதையும் விவரிக்கவே முடியாது. காஞ்சிபுரத்தில் இருக்கும் வீரப்பனை, உலகமே வெறுத்து ஒதுக்கிய குப்புசாமியிடம் உயிரையே வைத்திருக்கும் அந்தப் புண்ணிய மூர்த்தியைப் பார்க்க வேண்டும்போல் இருந்தது. 'குப்புசாமிக்கும் ஒருவன் இருக்கிறான். குப்புசாமிக்கு மட்டுமா? எனக்குமே ஒருவனாக அவன் இருக்கிறான்.'

பழங்கள் வாங்கக் கடைத்தெருவுக்குப் போனேன்.

(*கலைமகள்*, பிப்ரவரி 1966)



**முன்தோன்றிய மூத்தகுடி**

*"ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து*
*அரசு பட அமர் உழக்கி"*

*மதுரைக்காஞ்சி, 127–130*

திருவாரூர் மாவட்டத்தின் ஆலங்கானம்

**நூல் வெளி**



ஒருவன் இருக்கிறான் கதை 'கு.அழகிரிசாமி சிறுகதைகள்' என்ற தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

கு.அழகிரிசாமி, அரசுப்பணியை உதறிவிட்டு முழுதாக எழுத்துப்பணியை மேற்கொண்டவர்; மென்மையான நகைச்சுவையும் சோக இழையும் ததும்பக் கதைகளைப் படைப்பதில் பெயர் பெற்றவர்; கரிசல் எழுத்தாளர்கள் வரிசையில் மூத்தவர் எனலாம். கி.ரா.வுக்கு இவர் எழுதிய கடிதங்கள் இலக்கியத்தரம் வாய்ந்தவை. படைப்பின் உயிரை முழுமையாக உணர்ந்திருந்த கு.அழகிரிசாமி பல இதழ்களில் பணியாற்றியவர்; மலேசியாவில் இருந்தபோது அங்குள்ள படைப்பாளர்களுக்குப் படைப்பு தொடர்பான பயிற்சி அளித்தவர். இவர் பதிப்புப் பணி, நாடகம் எனப் பலதுறைகளிலும் முத்திரை பதித்தவர். தமிழ் இலக்கியத்தில் ஆர்வம்கொண்டு திறனாய்வு நூல்களையும் படைத்தவர்.



## கற்பவை கற்றபின்...

1. சமூகத் தொண்டு செய்து உயர்ந்த விருதுகளைப் பெற்ற ஆளுமைகளைப் பட்டியலிட்டு அவர்கள் செய்த சமூகப்பணி குறித்துக் கலந்துரையாடுக.
2. "அகநக நட்பதே நட்பு" – என்ற தலைப்பில் நண்பர்களுக்கு உதவிய சூழல்களைச் சுவைபட எழுதுக.

மனிதம்

கூ

கற்கண்டு

# அணி




மக்களுக்கு அழகு சேர்ப்பன அணிகலன்கள். அது போன்று செய்யுள்களுக்கு அழகு செய்து சுவையை உண்டாக்குவன *அணிகள்*. அத்தகைய அணிகள் சிலவற்றைப் பற்றி இங்குக் காண்போம்.

### தற்குறிப்பேற்ற அணி

இயல்பாய் நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது *தற்குறிப்பேற்ற அணி* எனப்படும்.

எ.கா.

**'போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி**
**'வாரல்' என்பனபோல் மறித்துக்கை காட்ட'**

### பாடலின் பொருள்

கோட்டை மதில் மேல் இருந்த கொடியானது வரவேண்டாம் எனத் தடுப்பதுபோல, கை காட்டியது என்பது பொருள்.

### அணிப்பொருத்தம்

கோவலனும், கண்ணகியும் மதுரை மாநகருக்குள் சென்றபோது மதிலின் மேலிருந்த கொடிகள் காற்றில் இயற்கையாக அசைந்தன. ஆனால் இளங்கோவடிகள், கோவலன் மதுரையில் கொலை செய்யப்படுவான் எனக்கருதி அக்கொடிகள் கையை அசைத்து, 'இம்மதுரைக்குள் வரவேண்டா' என்று தெரிவிப்பது போலக் காற்றில் அசைவதாகத் தம் குறிப்பைக் கொடியின் மீது ஏற்றிக் கூறுகிறார். இவ்வாறு இயல்பாக நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது *தற்குறிப்பேற்ற அணி* எனப்படும்.

### தீவக அணி

தீவகம் என்னும் சொல்லுக்கு 'விளக்கு' என்று பொருள். ஓர் அறையில், ஓர் இடத்தில் வைக்கப்பட்ட விளக்கானது அவ்வறையில் பல இடங்களிலும் உள்ள பொருள்களுக்கு வெளிச்சம் தந்து விளக்குதல் போல, செய்யுளின் ஓரிடத்தில்நின்ற ஒரு சொல் அச்செய்யுளின் பல இடங்களிலும் உள்ள சொற்களோடு சென்று பொருந்திப் பொருளை விளக்குவதால் இவ்வணி தீவக அணி எனப்பட்டது.

இது முதல்நிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம் என்னும் மூன்று வகையாக வரும்.

எ.கா.

**சேந்தன வேந்தன் திருநெடுங்கண், தெவ்வேந்தர்**
**ஏந்து தடந்தோள், இழிகுருதி – பாய்ந்து**
**திசைஅனைத்தும், வீரச் சிலைபொழிந்த அம்பும்,**
**மிசைஅனைத்தும் புள்குலமும் வீழ்ந்து**

(*சேந்தன*–சிவந்தன; *தெவ்*–பகைமை; *சிலை*–வில்; *மிசை*–மேலே; *புள்*–பறவை;)

### பாடலின் பொருள்

அரசனுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன; அவை சிவந்த அளவில் பகை மன்னர்களுடைய பெரிய தோள்கள்சிவந்தன; குருதி பாய்ந்து திசைகள் அனைத்தும் சிவந்தன;வலிய வில்லால் எய்யப்பட்ட அம்புகளும் சிவந்தன; குருதி மேலே வீழ்தலால் பறவைக் கூட்டங்கள் யாவும் சிவந்தன.

### அணிப் பொருத்தம்

**வேந்தன் கண் சேந்தன**
**தெவ்வேந்தர் தோள் சேந்தன**
**குருதி பாய்ந்து திசை அனைத்தும் சேந்தன**
**அம்பும் சேந்தன**

**புள் குலம் வீழ்ந்து**

**மிசைஅனைத்தும் சேந்தன**

இவ்வாறாக முதலில் நிற்கும் 'சேந்தன' (சிவந்தன) என்ற சொல் பாடலில் வருகின்ற கண்கள், தோள்கள், திசைகள், அம்புகள், பறவைகள் ஆகிய அனைத்தோடும் பொருந்திப் பொருள் தருகிறது. அதனால் இது தீவக அணி ஆயிற்று.

### நிரல்நிறை அணி

*நிரல்* = வரிசை; *நிறை* = நிறுத்துதல்.

சொல்லையும் பொருளையும் வரிசையாக நிறுத்தி அவ்வரிசைப்படியே இணைத்துப் பொருள் கொள்வது நிரல்நிறை அணி எனப்படும்.

**எ.கா.**

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**

**பண்பும் பயனும் அது. –குறள்: 45**

### பாடலின் பொருள்

இல்வாழ்க்கை அன்பும் அறமும் உடையதாக விளங்குமானால், அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் அதுவே ஆகும்.

### அணிப்பொருத்தம்

இக்குறளில் அன்பும் அறனும் என்ற சொற்களை வரிசையாக நிறுத்தி, பண்பும் பயனும் என்ற சொற்களை முறைபடக் கூறியுள்ளமையால் இது நிரல் நிறை அணி ஆகும்.

### தன்மையணி

எவ்வகைப்பட்ட பொருளாக இருந்தாலும் இயற்கையில் அமைந்த அதன் உண்மையான இயல்புத் தன்மையினைக் கேட்பவர்களின் மனம் மகிழுமாறு உரிய சொற்களை அமைத்துப் பாடுவது தன்மையணியாகும். இதனைத் தன்மை நவிற்சி அணி என்றும் கூறுவர். இவ்வணி நான்கு வகைப்படும். பொருள் தன்மையணி, குணத் தன்மையணி, சாதித் தன்மையணி, தொழிற் தன்மையணி என்பனவாகும்.

**எ.கா.**

**மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்**

**கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும் – வையைக்**

**கோன்**

**கண்டளவே தோற்றான், அக்காரிகைதன்**

**சொற்செவியில்**

**உண்டளவே தோற்றான் உயிர்.**

*சிலம்பு* – வழக்குரை காதை வெண்பா

### பாடலின் பொருள்

உடம்பு முழுக்கத் தூசியும் விரித்த கருமையான தலைமுடியும் கையில் ஒற்றைச் சிலம்போடு வந்த தோற்றமும் அவளது கண்ணீரும் கண்ட அளவிலேயே வையை நதி பாயும் கூடல் நகரத்து அரசனான பாண்டியன் தோற்றான். அவளது சொல், தன் செவியில் கேட்டவுடன் உயிரை நீத்தான்.

### அணிப்பொருத்தம்

கண்ணகியின் துயர் நிறைந்த தோற்றத்தினை இயல்பாக உரிய சொற்களின் மூலம் கூறியமையால் இது தன்மை நவிற்சியணி எனப்படும்.

"எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்குஞ்

சொன்முறை தொடுப்பது தன்மை யாகும்"

– தண்டியலங்காரம்: 27



## கற்பவை கற்றபின்...

1. முன் வகுப்புகளில் கற்ற அணிகளை எடுத்துக்காட்டுகளுடன் தொகுத்து ஒப்படைவு ஒன்றை உருவாக்குக.
2. பாடப்பகுதியில் உள்ள திருக்குறளில் பயின்றுவரும் அணிகளைக் கண்டறிந்து வகுப்பறையில் விளக்குக.



# திறன் அறிவோம்




**பலவுள் தெரிக.**

1. "இவள் தலையில் எழுதியதோ
கற்காலம்தான் எப்போதும் ..." – இவ்வடிகளில் கற்காலம் என்பது

அ) தலைவிதி ஆ) பழைய காலம் இ) ஏழ்மை ஈ) தலையில் கல் சுமப்பது

2. சுதந்திர இந்தியாவின் மகத்தான சாதனையும் சவாலுமாக ஜெயகாந்தன் கருதுவது

அ) அரசின் நலத்திட்டங்களைச் செயல்படுத்தல் ஆ) பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காத்தல்

இ) அறிவியல் முன்னேற்றம் ஈ) வெளிநாட்டு முதலீடுகள்

3. பூக்கையைக் குவித்துப் பூவே புரிவொடு காக்க என்று ....................................... வேண்டினார்.

அ) கருணையன், எலிசபெத்துக்காக ஆ) எலிசபெத், தமக்காக

இ) கருணையன், பூக்களுக்காக ஈ) எலிசபெத், பூமிக்காக

4. வாய்மையே மழைநீராகி – இத் தொடரில் வெளிப்படும் அணி

அ) உவமை ஆ) தற்குறிப்பேற்றம் இ) உருவகம் ஈ) தீவகம்

5. கலையின் கணவனாகவும் சமுதாயத்தின் புதல்வனாகவும் இருந்து எழுதுகிறேன் – இக்கூற்றிலிருந்து நாம் புரிந்துகொள்வது:

அ) தம் வாழ்க்கையில் பெற்ற விளைவுகளைக் கலையாக்கினார்

ஆ) சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே எழுதினார்

இ) அறத்தைக் கூறுவதற்காக எழுதினார்

ஈ) அழகியலுடன் இலக்கியம் படைத்தார்

**குறுவினா**

1. தீவக அணியின் வகைகள் யாவை?

2. நான் எழுதுவதற்கு ஒரு தூண்டுதலும் அதற்குரிய காரணமும் உண்டு – இத்தொடரை இரு தொடர்களாக்குக.

3. "காய்மணி யாகு முன்னர்க் காய்ந்தெனக் காய்ந்தேன்" – உவமை உணர்த்தும் கருத்து யாது?

4. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது – இக்குறளில் பயின்று வந்துள்ள அணியின் இலக்கணம் யாது?



5. 'வாழ்வில் தலைக்கனம்', 'தலைக்கனமே வாழ்வு' என்று நாகூர்ரூமி யாருடைய வாழ்வைக் குறித்துக் கூறுகிறார்?

## சிறுவினா

1. "சித்தாளின் மனச்சுமைகள்
   செங்கற்கள் அறியாது" – இடஞ்சுட்டிப் பொருள் தருக.

2. ஜெயகாந்தன் தம் கதைமாந்தர்களின் சிறந்த கூறுகளைக் குறிப்பிடத் தவறுவதில்லை என்று அசோகமித்திரன் கூறுகிறார். இக்கூற்றை மெய்ப்பிக்கும் செயல் ஒன்றைத் 'தர்க்கத்திற்கு அப்பால்' கதை மாந்தர் வாயிலாக விளக்குக.

3. எவையெல்லாம் அறியேன் என்று கருணையன் கூறுகிறார்?

4. கவிஞர் தாம் கூறவிரும்பும் கருத்திற்கு ஏற்றவாறு தற்குறிப்பேற்ற அணி அமைவதை எடுத்துக்காட்டுக.

## நெடுவினா

1. கருணையனின் தாய் மறைவுக்கு, வீரமாமுனிவர் பூக்கள் போன்ற உவமைகளாலும் உருவக மலர்களாலும் நிகழ்த்திய கவிதாஞ்சலியை விவரிக்க.

2. ஜெயகாந்தன் நினைவுச் சிறப்பிதழை, வார இதழ் ஒன்று வெளியிட இருக்கிறது. அதற்கான ஒரு சுவரொட்டியை வடிவமைத்து அளிக்க.

3. 'அழகிரிசாமியின் 'ஒருவன் இருக்கிறான்' சிறுகதையில் மனிதத்தை வெளிப்படுத்தும் கதை மாந்தர் குறித்து எழுதுக.



## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

"எழுத்தால், பேச்சால், ஆற்றலால், அறிவால், தொண்டால், பண்பால், பணியால், கனிவால் தமிழக வரலாற்றில் குறிக்கப்படும்படியான அந்த அறிஞர் பெருமகனாரின் அருமைத் திருமுகத்தைக் கடைசியாகத் தரிசிக்க வழியெல்லாம் விழியெல்லாம் நீர்தேக்கி ஊர்வலத்தைப் பார்க்கக் காத்திருந்த மக்கள் எத்தனை லட்சம் பேர்! அண்ணாவின் பொன்னுடலை நன்றாகத் தாங்கி வந்த பீரங்கி வண்டி தூரத்தில் வந்தபோதே பொங்கிப் பொருமித் துடித்த உள்ளங்கள் எத்தனை எத்தனை லட்சம்! தமது வாழ்வுக் காலத்தையே ஒரு சகாப்தமாக்கி முடித்துவிட்டுச் சென்ற அந்தப் பேரறிஞர் திருமுகத்தைக் கண்டதும் குவிந்த கரங்கள் எத்தனை எத்தனை லட்சம்! கண்ணீரை அருவியாய்க் கொட்டிய கண்கள் எத்தனை எத்தனை லட்சம்! கண்ணுக்கு ஒளியாய்த் தமிழுக்குச் சுவையாய் மக்களுக்கு வாழ்வாய் அமைந்துவிட்ட அந்தத் தலைவரின் இறுதிப் பயணம் சென்ற வழியெல்லாம் மலர் தூவி மாலைகளை வீசிய கரங்கள் எத்தனை எத்தனை லட்சம்! அந்த அறிவுக் களஞ்சியத்தைத் தாங்கிய வண்டி தங்களை விட்டு முன்னோக்கி நகர்ந்தபோது இதயத்தையே, உயிர்மூச்சையே இழந்துவிட்டது போலக் கதறித் துடித்துத் தரையில் புரண்டு புரண்டு புழுவாய்த் துடித்தவர்கள் எத்தனை லட்சம் பேர்கள்!"

### மொழிபெயர்க்க.

1. *Education is what remains after one has forgotten what one has learned in School.* – ***Albert Einstein***
2. *Tomorrow is often the busiest day of the week.* – ***Spanish Proverb***
3. *It is during our darkest moments that we must focus to see the light.* – ***Aristotle***
4. *Success is not final, failure is not fatal. It is the courage to continue that counts.* – ***Winston Churchill.***

### உவமையைப் பயன்படுத்திச் சொற்றொடர் உருவாக்குக.

1. தாமரை இலை நீர்போல
2. மழைமுகம் காணாப் பயிர்போல
3. கண்ணினைக் காக்கும் இமை போல
4. சிலை மேல் எழுத்து போல

### பொருத்தமான நிறுத்தக் குறியிடுக.

சேரர்களின் பட்டப் பெயர்களில் கொல்லி வெற்பன் மலையமான் போன்றவை குறிப்பிடத்தக்கவை கொல்லி மலையை வென்றவன் கொல்லி வெற்பன் எனவும் பிற மலைப்பகுதிகளை வென்றவர்கள் மலையமான் எனவும் பெயர் சூட்டிக்கொண்டனர் இதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன.

### வாழ்த்துரை எழுதுக

உங்கள் பள்ளியில் நடைபெறும் நாட்டுநலப்பணித்திட்ட முகாமின் தொடக்க விழாவில் மாணவர்களுக்கு வாழ்த்துரை வழங்க உரை ஒன்றை உருவாக்கித் தருக.

## குறுக்கெழுத்துப் போட்டி

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 2 | | | | | | |
| | | | | | | | | 3 | |
| | | | | 4 | | | | | |
| | | | | | 5 | | | | |
| | | | | | 7 | | | | 6 |
| | 8 | | | | | 9 | | | |
| 10 | | | | | 11 | | | | 12 |
| | | 13 | | | | | | | |
| 14 | | | | | | 15 | | | |
| | | | | 16 | | | 17 | 18 | |

### இடமிருந்து வலம்

1. சிறுபொழுதின் வகைகளுள் ஒன்று (2)

2. நேர் நேர் – வாய்பாடு (2)

11. எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று (5)

14. மக்களே போல்வர் ___________ (4)

### மேலிருந்து கீழ்

1. முல்லைத் திணைக்குரிய பெரும்பொழுது (5)

2. மொழிஞாயிறு (9)

3. நல்ல என்னும் அடைமொழி கொண்ட தொகைநூல்………(5)

4. கழை என்பதன் பொருள் (4)

7. மதியின் மறுபெயர், இது நிலவையும் குறிக்கும்(4)

10. குறிஞ்சித் திணைக்குரிய விலங்கு……..(4)

12……………என்பது புறத்திணைகளுள் ஒன்று(4)

### வலமிருந்து இடம்

15. மருந்தே ஆயினும் விருந்தோடு உண் – ஆசிரியர் (4)

16. மதிமுகம் உவமை எனில் முகமதி …………..(5)

### கீழிருந்து மேல்

5. விடையின் வகைகள் (3)

6. வீரமாமுனிவர் இயற்றிய நூல் (5)

8. பிள்ளைத்தமிழின் இரண்டாம் பருவம் (4)

9. முப்பால் பகுப்பு கொண்ட நூல்களுள் ஒன்று(6)

13. மன்னனது உண்மையான புகழை எடுத்துக் கூறுவது (7)

17. 96 வகைச் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று (7)

18. செய்தவம் – இலக்கணக்குறிப்பு (5)

**பாடலில் இடம்பெற்றுள்ள தமிழ்ப் புலவர்களின் பெயர்களைக் கண்டறிந்து எழுதுக.**

*கம்பனும் கண்டேத்தும் உமறுப் புலவரை எந்தக்*
*கொம்பனும் பணியும் அறம்பாடுஞ் ஜவாது ஆசுகவியை*
*காசிம்புலவரை, குணங்குடியாரை சேகனாப் புலவரை*
*செய்குதம்பிப் பாவலரைச் சீர்தமிழ் மறக்காதன்றோ*

**விண்ணப்பப் படிவத்தை நிரப்புக.**

**மேல்நிலை வகுப்பு – சேர்க்கை விண்ணப்பம்**

சேர்க்கை எண்: நாள்: வகுப்பும் பிரிவும்:

1. மாணவ / மாணவியின் பெயர் :
2. பிறந்த நாள் :
3. தேசிய இனம் :
4. பெற்றோர் / பாதுகாவலர் பெயர் :
5. வீட்டு முகவரி :
6. இறுதியாகப் படித்து முடித்த வகுப்பு :
7. பயின்ற மொழி :
8. பெற்ற மதிப்பெண்கள் :
9. இறுதியாகப் படித்த பள்ளியின் முகவரி :

| தேர்வின் பெயர் | பதிவு எண் – ஆண்டு | பாடம் | மதிப்பெண் (100) |
|---|---|---|---|
| | | தமிழ் | |
| | | ஆங்கிலம் | |
| | | கணிதம் | |
| | | அறிவியல் | |
| | | சமூக அறிவியல் | |
| | | மொத்தம் | |

10. மாற்றுச் சான்றிதழ் இணைக்கப்பட்டுள்ளதா? :
11. தாய்மொழி :
12. சேர விரும்பும் பாடப் பிரிவும் பயிற்று மொழியும் :

மாணவ / மாணவியின் கையெழுத்து

**நன்றியுரை எழுதுக.**

பள்ளி வளாகத்தில் நடைபெற்ற 'மரம் நடுவிழாவுக்கு' வந்திருந்த சிறப்பு விருந்தினருக்கும் பெற்றோருக்கும் பள்ளியின் 'பசுமைப் பாதுகாப்புப் படை' சார்பாக நன்றியுரை எழுதுக.



## மொழியோடு விளையாடு

**விளம்பரத்தை நாளிதழுக்கான செய்தியாக மாற்றியமைக்க.**

"சாலைப் பாதுகாப்பு" தொடர் அன்று – அது தொடரும் வாழ்க்கைமுறை

**சாலைப் பாதுகாப்பு விழிப்புணர்வு**

போக்குவரத்துக் காவல் துறை,

__________ மாவட்டம்

**கீழ்க்காணும் நாள்காட்டியில் புதன் கிழமையை ஒன்றாம் தேதியாகக் கொண்டு தமிழெண்களால் நிரப்புக.**

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| | | | க | உ | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |

**அகராதியில் காண்க.**

குணதரன், செவ்வை, நகல், பூட்கை

## செயல் திட்டம்

விளையாட்டு உலகில் உங்களுக்குப் பிடித்த ஆளுமைத்திறன் மிக்க விளையாட்டு வீரர் பற்றிய செய்திகளைப் படத்துடன் தொகுப்பேடாக உருவாக்குக.

**காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**





## நிற்க அதற்குத் தக...

ஒவ்வொரு சூழலிலும் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்தபடி இருக்கிறார்கள்; உதவி பெற்றபடியும் இருக்கிறார்கள்; சில உதவிகள் அவர்கள் மீதுள்ள அன்பினால் செய்கிறோம்; சில உதவிகள் இரக்கத்தால் செய்கிறோம். தொடர்வண்டியில் பாட்டுப் பாடிவரும் ஒருவருக்கு நம்மையறியாமல் பிச்சை போடுகிறோம். தொல்லை வேண்டாம் என்று கருதி, வேண்டாவெறுப்போடு சில இடங்களில் உதவி செய்கிறோம்!

நீங்கள் செய்த, பார்த்த உதவிகளால் எய்திய மனநிலை...

| உதவி | மனநிலை |
|---|---|
| வகுப்பறையில் எழுதுகோல் கொடுத்து உதவியபோது | இக்கட்டான சூழலில் செய்த உதவியால் எனக்கு மனநிறைவு; அவருக்கு மனமகிழ்ச்சி! |
| உறவினருக்கு என் அம்மா பணம் அளித்து உதவியபோது | கல்லூரிப் படிப்பைத் தொடர முடிந்ததால் உறவினருக்கு ஏற்பட்ட நன்றியுணர்வு! |
| | |

## கலைச்சொல் அறிவோம்

| | | | |
|---|---|---|---|
| *Humanism* – | மனிதநேயம் | *Cultural Boundaries* – | பண்பாட்டு எல்லை |
| *Cabinet* – | அமைச்சரவை | *Cultural values* – | பண்பாட்டு விழுமியங்கள் |



## அறிவை விரிவு செய்

யானை சவாரி – பாவண்ணன்

கல்மரம் – திலகவதி

அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் – ந. முருகேசபாண்டியன்







## இணையத்தில் காண்க.

*http://www.tamilvu.org/ta/courses-degree-p101-p1011-html-p1011661-23897* (ஜெயகாந்தன்)

*https://nagoori.wordpress.com/2010/02/04/நாகூர்-ரூமியும்-நானும்/*

*http://tamildigitallibrary.in/book-detail.php?id=jZY9lup2kZl6TuXGlZQdjZU3luMy#book1/* (இலக்கியச் சிற்பிகள் – கு.அழகிரிசாமி)




தமிழ்நாடு அரசு

# மேல்நிலை முதலாம் ஆண்டு

# பொதுத் தமிழ்

தமிழ்நாடு அரசு விலையில்லாப் பாடநூல் வழங்கும் திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது

## பள்ளிக் கல்வித்துறை

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

# பொருளடக்கம்

*( * ) இக்குறியிட்ட பாடல்கள் மனப்பாடப்பகுதி*



*மின் நூல்*



*மதிப்பீடு*



*இணைய வளங்கள்*

இயல் 1

# என்னுயிர் என்பேன்





## கற்றல் நோக்கங்கள்

- பேச்சுமொழிக்கும் கவிதைமொழிக்கும் உள்ள தனித் தன்மைகளைப் பல்வேறு படைப்பாளர்களின் கருத்துகளின் வழிப் புரிந்துகொள்ளுதல்
- மொழியின் இலக்கிய இலக்கண வளங்களை அறிதல்
- நூலின்கண் பாயிரம் பெறும் இடத்தையும் அதன் இன்றியமையாமையையும் அறிதல்
- புலம்பெயர் வாழ்க்கைச் சூழல்களால் தமிழ்மொழி உலகெங்கும் பரவியுள்ளதைத் தெரிந்து கொள்ளுதல்
- மொழி முதல், இறுதி எழுத்துகள் எவை என்பதை அறிந்து பிறமொழிக் கலப்பின்றிப் பேசவும் எழுதவும் செய்தல்



## பாடப் பகுதி

யுகத்தின் பாடல் – சு. வில்வரத்தினம்

பேச்சுமொழியும் கவிதைமொழியும் – இந்திரன்

நன்னூல் – பாயிரம் – பவணந்தி முனிவர்

ஆறாம் திணை – அ. முத்துலிங்கம்

மொழி முதல், இறுதி எழுத்துகள்

கவிதைப்பேழை

இயல் 1

# யுகத்தின் பாடல்




## நுழையும்முன்

மொழி, மனித இனத்தின் ஆதி அடையாளம். அது, பண்பாட்டுப் பரிணாம வளர்ச்சியை அடிப்படையாகக்கொண்டு உருவானது. ஓர் இனத்தின் மையப்புள்ளியாக விளங்குவதும் மொழியே. அது, நம் இருப்பின் அடையாளம். நம் தாய்மொழியாம் தமிழ் மொழியின் வேர், சங்கத்தில் தொடங்கி இன்றையகாலம் வரையும் இடர் பல களைந்து, உயர்தனிச் செம்மொழியாய்ச் செழித்தோங்கி இருக்கிறது.

*1. என் அம்மை, ஒற்றியெடுத்த*
*நெற்றிமண் அழகே!*
*வழிவழி நினதடி தொழுதவர்,*
*உழுதவர், விதைத்தவர்,*
*வியர்த்தவர்க்கெல்லாம்*
*நிறைமணி தந்தவளே!*
*உனக்குப்*
*பல்லாண்டு*
*பல்லாண்டு*
*பல்லாயிரத்தாண்டு*

*2. பாடத்தான் வேண்டும்!*
*காற்றிலேறிக்*
*கனைகடலை, நெருப்பாற்றை,*
*மலைமுகடுகளைக் கடந்து*
*செல் எனச் செல்லுமோர் பாடலை*
*கபாடபுரங்களைக் காவுகொண்ட பின்னும்*
*காலத்தால் சாகாத தொல் கனிமங்களின்*
*உரமெலாம் சேரப்*
*பாடத்தான் வேண்டும்!*



**ஏடு தொடக்கி வைத்து என்னம்மை*
*மண்ணிலே தீட்டித்தீட்டி எழுதுவித்த*
*விரல்முனையைத் தீயிலே தோய்த்து*
*திசைகளின் சுவரெலாம்*
*எழுதத்தான் வேண்டும்*
*எழுகின்ற யுகத்தினோர் பாடலை.**

*சு. வில்வரத்தினம்*



தெரியுமா?

புதுக்கவிதை – விளக்கம்

மரபு சார்ந்த செய்யுள்களின் கட்டுப்பாடுகளில் இருந்து தன்னை விடுவித்துக்கொண்ட கவிதைகளைப் புதுக்கவிதைகள் என்பர். படிப்போரின் ஆழ்மனத்தில் புதுக்கவிதை ஏற்படுத்தும் தாக்கமே முதன்மையானது. இது படிப்போரின் சிந்தனைக்கு ஏற்ப விரிவடையும் பன்முகத்தன்மை கொண்டது. எளியவர்களும் தம் உணர்ச்சிகளைக் கவிதை வாயிலாக வெளிப்படுத்தும் வாய்ப்பைத் தந்தது புதுக்கவிதை எனலாம்.



நூல்வெளி

கவிஞர் சு. வில்வரத்தினம், யாழ்ப்பாணத்தில் உள்ள புங்குடுத் தீவில் பிறந்தவர். இவருடைய கவிதைகள் மொத்தமாக, 'உயிர்த்தெழும் காலத்துக்காக' எனும் தலைப்பில் 2001இல் தொகுக்கப்பட்டன. இவர் கவிதைகள் இயற்றுவதுடன் சிறப்பாகப் பாடும் திறனும் கொண்டவர். வில்வரத்தினத்தின் இரண்டு கவிதைகளிலிருந்து தேர்ந்தெடுத்த பகுதிகள் பாடப்பகுதியில் இடம்பெறுகின்றன.

தன் இனத்தையும் மொழியையும் பாடாத கவிதை, வேரில்லாத மரம்; கூடில்லாத பறவை.

– இரசூல் கம்சதோவ்

### உயிர்ப்பு

*என் புன்னகையைக் கூட*
*மொழிபெயர்க்க முடியாத*
*அந்நிய தேசத்தில்*
*எனக்கு நானே அகதியானேன்.*
*உணர்வுகளைச் சொல்ல முடியாமலும்*
*உதற முடியாமலும்*
*குரலற்றுக் கிடந்தேன்*
*என் காயத்தை வருடிச் சென்றது*
*மின்னலெனக் கடந்த*
*தாய்மொழியின் அமுதிசை*
*துள்ளி உயிர்த்தெழுந்தேன்*
*பரவச வெளியில்*
*நானுமோர் பறவையானேன்.*



கற்பவை கற்றபின்...

1. தாய்மொழியே முதன்மையானது – இக்கூற்றுக் குறித்து வகுப்பில் கலந்துரையாடுக.
2. 'காலத்தை வென்ற மொழி' என்னும் தலைப்பில் கவிதை படைக்க.

உரைநடை உலகம்

இயல் 1

# பேச்சுமொழியும் கவிதைமொழியும்




– இந்திரன்

**நுழையும்முன்**

கலைகளின் உச்சம் கவிதை என்பர். அக்கவிதையினை, இயன்றவரை பேசுவதுபோல் எழுதுவதுதான் உத்தமம் என்றும் அதுவே மானுடத்துக்கு எழுத்தாளர்கள் செய்யும் கடமை என்றும் கூறினார் மகாகவி பாரதி. கவிதை எவ்வாறு நிகழ்கிறது; எழுத்துமொழியைக் கடந்து பேச்சுமொழி எவ்வாறு கவிதைக்கு நெருக்கமாக இருக்கிறது என்பவை பற்றிப் பேசுகிறது இக்கட்டுரை.

கவிதை என்பது எது? கவிதை எழுதும் செயல்பாடு எப்படி நிகழ்கிறது? கவிதை எழுதுகிறபோது எழுதிக் கொண்டிருப்பவனுக்குள் என்ன நிகழ்கிறது? கவிதை எழுதி முடித்துவிட்ட பிறகு கவிஞனுக்கும் கவிதைக்கும் என்ன உறவு? அதை யார் முடிவு செய்கிறார்கள்?

தொடரும் இந்தக் கேள்விகளுக்கான பதில்களை எண்ணற்ற அழகியல்வாதிகளும் தத்துவ ஞானிகளும் கலை விமர்சகர்களும் மொழியியல் அறிஞர்களும் கொடுத்திருக்கிறார்கள். அவற்றுள் நான் இதுவரை கேட்டது, கண்டது, படித்தது ஆகிய எல்லாவற்றையும் கூட்டிக்கழித்துப் பார்த்தால், நான் மொழியில் மிதந்துகொண்டுதான் பிறந்ததாகத் தெரிகிறது. மொழியில் மூழ்கியபடிதான் எனது விழிகள் இந்த உலகைக் காணத் திறந்தன என்று உணர்கிறேன்.

## என்னை விளக்கிய மொழி

எனக்கு மொழி என்பது அறிமுகமாவதற்கு முன்னால் பொருள்களும் விலங்குகளும் பறவைகளும் வானும் நிலவும் சூரியனும் மரங்களும் செடிகளும் இருந்திருக்கவே இல்லை. மொழி எனது உலகத்தை ஒவ்வொரு பொருளுக்கும் பெயர்களுடன் கட்டியெழுப்பியது. இதன்பிறகுதான் 'நான்' என்ற ஒன்று பிறந்தது. எனது உலகம் என்பது மொழியினால் கட்டமைக்கப்பட்ட பிறகு அந்த உலகத்திலிருந்து தனித்துப் பிரிந்து நிற்கிற 'நான்' உதயமானேன்.

நான் இன்றைக்கு நினைத்துப் பார்க்கிறேன். மொழியின் பொருளை அறிந்துகொள்ளத் தொடங்கியது எந்த ஆண்டில்? எந்த நாளில்? எத்தனை மணிக்கு? இவை அனைத்திற்கும் என்னிடம் பதில் இல்லை.

நான் உணர்ச்சியினால் நிரம்பியிருக்கிறபோது அந்த வேகத்தைப் பதிவு செய்வதற்குச் சொற்கள் உதவும் என்று எப்போது தோன்றத் தலைப்பட்டது?

> மொழியென்ற ஒன்று பிறந்தவுடன் 'உலகம்' என்பதும் 'நான்' என்பதும் தனித்தனியாகப் பிரிந்து தங்களைத் தனித்துவமாக நிலை நிறுத்திக்கொள்கின்றன.
>
> – எர்னஸ்ட் காசிரர்

மொழி என்ற ஒன்று என்னுள் தோன்றியவுடன்தான் உலகம் எனது கவனிப்புக்குரிய ஒன்றாக மாறியது. எனது உலகத்தை இழையிழையாகப் பிரித்தும் வகுத்தும் தொகுத்தும் விதவிதமான தூரங்களில் வைத்தும் கொடுத்தது மொழி. இதன்மூலமாக எனக்குள் உலகத்தின்

பல கதவுகள் திறக்கலாயின. மொழியின் சாவியைப் போட்டுத் திறக்கிறபோதெல்லாம் இதுவரையிலும் பெயர் சூட்டப்பட்டிராத பலவற்றை நானே என் கண்களால் கண்டுபிடிக்கத் தொடங்கினேன். அவற்றிற்கு நானே எனக்குப் பிடித்தமான பெயர்களைச் சூட்டத் தொடங்கினேன். பெயர்களுக்குக் கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய வண்ணங்களைப் பூசும் சக்தியை மொழி எனக்குக் கொடுத்தது. அவற்றை விதவிதமான அடுக்குகளில் ஒருமையாகவும் பன்மையாகவும் அவற்றின் முக்கியத்துவத்திற்கு ஏற்ப அடுக்கும் திறனை மொழி எனக்கு வழங்கியது.

### வாளினும் வலிமை

மொழிவழியாக ஒன்றைப் பெயரிட்டு அழைக்கத் தொடங்கியவுடன் அந்தப் பொருளின் மீது எனக்கொரு அதிகாரம் வந்துவிடுவதை உணர்கிறேன். குழந்தையாக இருந்தபோது, "அம்மா, அம்மா" என்று அழைப்பேன். வேலையில் மூழ்கிய அம்மா, என்னைக் கவனியாதபோது திடீரென்று அவரது பெயரைச் சொல்லி அழைத்திருக்கிறேன். அவர் திடுக்கிட்டுத் திரும்பி என்னிடம் வந்திருக்கிறார். அப்போதுதான் என்னுடைய மொழி, பெயர்கள் இட்டு அழைத்தவுடன் அவற்றின் மீது ஒரு அதிகாரத்தை உருவாக்கிக் கொடுத்ததை உணரத் தலைப்பட்டேன்.

உடம்பின் ஒரு பகுதியாக இருக்கிற தொண்டையிலிருந்து சொற்கள் எழுகின்றன. அவற்றை ஏற்றம், இறக்கம், உச்சரிப்பு, வேகம், நிதானம், திருப்பித் திருப்பிச் சொல்லுதல், இடையில் கொடுக்கும் மௌனம் ஆகியவற்றிற்கு ஏற்றவாறு பயன்படுத்திப் பொருள் வேறுபாடுகளை என்னால் ஏற்படுத்த முடியும் என உணர்கிறேன். இதுமட்டுமன்றி, கைகால் அசைவுகள், முகத்தின் தசைநார்ச் சுருக்கங்களின் அபிநயங்கள் ஆகிய உடம்பின் செயல்பாடுகள் என்னுடைய மொழி வெளிப்பாட்டின் பகுதியாக உள்ளன.

ஒரு திரவ நிலையில், நான் விரும்பும் வகையில் என்னிடம் கீழ்ப்படிந்து நடந்துகொள்ளும் எனது மொழி, எழுத்து மொழியாகப் பதிவு செய்யப்படுகிறபோது உறைந்துபோன பனிக்கட்டியைப் போன்ற திடநிலையை அடைந்துவிடுகிறது. இந்தத் திடநிலையை அடைந்த மொழி அது அச்சிடப்பட்ட ஒரு கவிதையாக மாறுகிறபோது என்னிலிருந்து பிரிந்துபோய்விட்ட ஒரு பொருளாக மாறிவிடுகிறது. உலகை, மொழி கட்டியெழுப்பியது என்று சொல்கிறபோது உலகம் மொழியின் கைப்பிடியிலிருந்து நழுவுவதற்குத் தொடர்ந்து முயல்வதாகவும் தெரிகிறது.

### நேரடி மொழி

எழுத்துமொழியைக் காட்டிலும் பேச்சுமொழி உணர்ச்சிக்கு மிக அருகில் இருக்கிறது. எனவேதான் இலக்கிய வழக்கைக் கைவிட்டுப் பேச்சுமொழிக்குத் திரும்பியவுடனே கவிஞனுடைய கவிதையின் மொழி, அதிக வெளிப்பாட்டுச் சக்தி கொண்டதாக மாறிவிடுகிறது. எழுத்துமொழி அப்படியன்று. எழுதுவதை மட்டும்தான் மனிதனின் கை செய்கிறது. முகத்திலிருக்கும் வாய், உடம்பிலிருக்கும் கையைக் காட்டிலும் உணர்ச்சி வெளிப்பாட்டைத் தெரிவிப்பதாக அமைந்துள்ளது. அதனால்தான், பேச்சுமொழி எழுத்துமொழியைக் காட்டிலும் அதிக உணர்ச்சி வெளிப்பாட்டுச் சக்தி மிக்கதாக உள்ளது.

எழுத்துமொழியில் பேச்சைக் கேட்க எதிராளி என்கிற ஒருவன் கிடையாது. எழுத்து என்பது ஒரு வகையில் பார்த்தால் தனக்குத்தானே பேசிக்கொள்கிற பேச்சு. ஆனால் பேச்சு என்பது அப்படிப்பட்டதன்று. பேச்சு என்பது தன்னைத் திறந்துகொள்கிற ஒரு செயல்பாடு. உண்மையில் சொல்லப்போனால் பேச்சு என்பது மொழியில் நீந்துவது. பேச்சுமொழியின்போது நமது உடம்பின் வெளிப்பாடுகள் நம்மை மொழியென்னும் நீரில் முன்னோக்கி நகரச் செய்கின்றன. இதை உணர்ந்த கவிஞர்கள் சிலர் தங்களுடைய கவிதைகளை எதிரிலிருக்கும் வாசகனுடன் பேசுவதுபோல அமைக்கின்றனர். இதையே அவர்கள் நேரடிமொழி எனக் கருதுகின்றனர்.

நேரடிமொழி எனப்படும் பேச்சுமொழிக்கு ஒருபோதும் பழமை தட்டுவதில்லை. அது வேற்றுமொழி ஆவதில்லை. அது எப்போதும் உயிர்ப்புடனும் மாறிக்கொண்டும் இருக்கிறது. இம்மொழிதான் ஒரு கவிஞரை நிகழ்காலத்தவரா அல்லது இறந்தகாலத்தவரா என்பதை நிர்ணயிக்கிறது என்கிறார் மலையாளக் கவி ஆற்றூர் ரவிவர்மா.

பேச்சுமொழியில் ஒரு கவிதை செய்யப்படுகிறபோது அஃது உடம்பின் மேல்தோல்போல் இயங்குகிறது. ஆனால், எழுத்துமொழியில் அதே சொற்கள் கவிதையின் உணர்வை, உணர்ச்சியற்ற ஆடைபோல் போர்த்தி மூடிவிடுகின்றன. எனவே, கவிதை மரபான தனது செய்யுள் சந்தத்திலிருந்து விடுதலை அடைந்துவிட்டது. அடுத்ததாக, அது கவிதைக்கென இருக்கிற தனித்துவமான மொழிநடையிலிருந்தும் விடுதலை அடைய வேண்டும்.

## பெருங்கவிஞர்களின் வாய்மொழி

பேச்சுமொழியைக் கவிதையில் பயன்படுத்துபவர்களில் மூன்று வகையினர் உண்டு. முதல் வகையினர், வால்ட் விட்மனைப் போன்றவர்கள். இவர்களுடைய கவிதைகளில் எந்தவொரு சொல்லும் மற்றொரு சொல்லை விட முக்கியமானதாகிவிடுவதில்லை. எழுத்துகள் எப்படிச் சொற்களில் கரைந்து போகின்றனவோ அதுபோன்று சொற்கள் கவிதைகளில் கரைந்துபோவதில்லை. இவற்றில் சொற்கள் தங்களுக்குத் தாங்களே பேசிக்கொள்வதில்லை. இக்கவிதைகள் இறுக்கிச் சுற்றப்பட்ட கம்பிச்சுருளைப் போன்று அல்லாமல் பேச்சுமொழிக்கே உரிய தளர்வோடு கட்டப்பட்டவை. இதில் பல நேரங்களில் கவிதை என்பது நடனமாடிக் கொண்டிருப்பவன், அவ்வப்போது நடப்பதற்குத் தாவிவிடுவதுபோல வெறுமனே ஒரு பேச்சு என்ற நிலைக்கு நழுவிவிடும்.

கவிஞர் மல்லார்மே போன்றவர்கள் இரண்டாம் வகையினர். இவர்களுடைய பேச்சு எதிராளியை விளித்துப் பேசுவது போன்றது

### வால்ட் விட்மன்

வால்ட் விட்மன் அமெரிக்காவைச் சேர்ந்தவர். கவிஞர்; இதழாளர்; கட்டுரையாளர்; புதுக்கவிதை இயக்கத்தைத் தோற்றுவித்தவர். இவருடைய 'புல்லின் இதழ்கள்' (Leaves of grass) என்ற நூல் உலகப்புகழ் பெற்றது.



கனவொன்று நான் கண்டேன்

உலகெலாம் திரண்டுவந்து ஒருசேரத் தாக்கினாலும்

தோற்காத பெருநகரம் ஒன்று கண்டேன்

நண்பர்கள் நகரம் என்றொரு புதுநகரம்

வந்தது என் கனவில்.

அன்பைவிடப் பெரிதென்ற ஒன்றும் அந்நகரில் இல்லை,

அன்பின் வழித்தடத்தில் மற்றெல்லாம் சென்றன அதன் பின்னே.

எந்நேரமும், மாந்தர் செய்வது எதுவென்றாலும்,

அன்பேதான் தெரிந்தது அங்கே அவற்றில் எல்லாம்,

மக்கள் தோற்றத்திலும் அன்பே,

அன்பேதான் அவர் மொழியும்.

அன்று. மின்சார ரயிலின் நெருக்கத்தில் படியில் தொங்கிக்கொண்டு போகிறபோது வெளியில் பரந்து கிடக்கும் தனிமையைச் சாட்சியாக வைத்துத் தங்களுக்குத் தாங்களே உதடு பிரித்துப் பேசிக்கொள்ளும் வகை. இவர்களுடைய கவிதைகளில் பேச்சு என்பது மூடிய நிலையில் செயல்படுகின்றது. தனிப்பட்ட ஒவ்வொரு சொல்லும் பிறிதொன்றைப் பேசுவதோடு மட்டுமல்லாமல் தன்னையே பேசிக்கொள்கிறது. குறியீடுகளின் கூட்டம் ஒரு முனையிலும் மொழி மறுமுனையிலும் இருக்கையில் கவிதையின் பேச்சு, இடையில் இருக்கும் வெளியில் புழங்குகின்றது.

குறியீட்டுக் கவிதை என்பது பொருளைப் பதிவு செய்வதன்று; நினைவுகூரத்தக்க தருணங்களைப் பதிவு செய்வதாகும்.

மூன்றாவது வகையினர் ஸ்பானிஷ் மொழிக் கவிஞராகிய பாப்லோ நெரூடா போன்றவர்கள். ஒரு கவிதை, ஒரு பொருளைப் பற்றியது என்று தோன்றினாலும் அஃது அப்பொருளைப் பற்றியது அன்று. அது வாழ்க்கையின் வடிவமற்ற தன்மையைப் பற்றிப் பேசுகிறது. ஒரு வடிவம் கொள்ளுதல் என்பதை நோக்கி வாழ்க்கை தொடர்ந்து முயல்கிறபோதும் அது இந்த முயற்சியில் ஒருபோதும் வெற்றி கொள்வதில்லை. இதுபோன்ற கவிதை, எந்தவித முன்கூட்டிய

### ஸ்டெஃபான் மல்லார்மே

ஸ்டெஃபான் மல்லார்மே பிரான்சு நாட்டைச் சேர்ந்தவர். ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றியவர். இவரைப் புரிந்துகொள்வதன் மூலமே குறியீட்டியத்தையும் (Symbolism) புரிந்துகொள்ள முடியும்.



புத்தகங்களிலெல்லாம் படித்துவிட்டேன்
நான் தப்பிப் போகத்தான் வேண்டும் அங்கே
ஆனால் உடலோ சோகத்தில்! வானுக்கும்
முன்பின் தெரியாத கடல் நுரைக்குமிடையே
மயக்கத்தில் பறவைகள் பறப்பதை உணர்கிறேன்!
என் கண்களில் பிரதிபலிக்கும் பழைய பூங்காக்களோ
எழுதப்படாத தாளின் தூய வெண்மையின் மீது
என் விளக்கிலிருந்து வீசும் பயனற்ற ஒளியோ
தன் குழந்தைக்குப் பாலூட்டும் அவ்விளம்பெண்ணோ
எதுவும் தடுக்காது கடல்நீரில் நனையும் இந்நெஞ்சை.
நான் கிளம்பிச் செல்வேன்! பாய்மரங்களைத்
தூக்கியெறிந்து விட்டிருக்கும் நீராவிக் கப்பலே
புறப்படு, தொலைதேச இயற்கையை நோக்கி.
இரக்கமற்ற எதிர்பார்ப்புகளில் மனமுடைந்து
ஆடும் கைக்குட்டைகளின் மகத்தான வழியனுப்பலை
இன்னும் நம்பிக்கொண்டிருப்பது வேதனை!
அதோ, பாய்மரமின்றிப் போய்ச்சேரத் தீவுகளின்றி
மூழ்கிவிட்ட கப்பல்களின்மேல் சாய்ந்து
புயலை அழைக்கும் பாய்மரங்கள்தாமே அவை..
ஆனால், இதோ கேள் என் நெஞ்சே
மாலுமிகளின் பாடலை!

### பாப்லோ நெரூடா

தென் அமெரிக்காவிலுள்ள சிலி நாட்டில் பிறந்தவர். இலத்தீன் அமெரிக்காவின் மிகச் சிறந்த கவிஞர். தன்னுடைய கவிதைகளுக்காக 1971ஆம் ஆண்டு இலக்கியத்திற்கான நோபல் பரிசு பெற்றவர்.



எத்துணைப் பெயர்கள்!
திங்கட்கிழமைகள் செவ்வாய்க்கிழமைகளுடனும்
ஆண்டு முழுவதுடன் வாரமும் சிக்கிக் கொண்டுள்ளன.
களைத்துப்போன உம் கத்தரிக்கோலால்
காலத்தை வெட்ட முடியாது.
பகலின் பெயர்கள் அனைத்தையும்
இரவின் நீர் அழைக்கிறது.
இரவில் நான் உறங்குகையில்
என்னை என்னவென்று அழைக்கின்றனர்
அல்லது என்னவென்று அழைப்பதில்லை?
தூங்கும்போது நான் நானாக இல்லையெனில்
விழித்தெழுந்த பின் நான் யார்?

திட்டமோ, ஒழுங்கமைதியோ இன்றி ஒன்றைச் சுட்டுவதுபோலக் காட்டி உடனே எதையும் சுட்டாமல் முடிந்துபோகிறது. அறியப்பட்டிராததை நோக்கி நகர்கிற அதே நேரத்தில் நெரூடாவின் கவிதை விரிந்ததாகவும் மையத்தை நோக்கி நகர்வதாகவும் இருக்கிறது.

கவிதை என்பது எது? என்ற இந்தக் கேள்விக்கு எனக்குத் தற்சமயம் கிடைக்கும் விடை இதுதான். கவிதை என்பது ஒரு பொருளன்று; அது மொழிக்குள் உலகையும் உலகிற்குள் மொழியையும் முழுவதுமாக நுழைத்துவிடுவதற்காக முயலும் தொடர்ந்த ஒரு படைப்புச் செயல்பாடு. எனவே, கவிதை என்பதே மொழிதான். கவிதைக்குள் உலவும் மொழியின் தர்க்கம் கவிதைக்கான உலகத்தைக் கட்டியெழுப்புகிறது. எனவே, எத்தகைய மொழியை நாம் பயன்படுத்துகின்றோமோ அதன் குணாம்சங்களையும் பேச்சுவழக்குகளையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியது கவிஞனின் கடமையாகிறது.



## தெரிந்து தெளிவோம்

ஒவ்வொரு மொழியிலும் தோன்றும் கவித்துவ வெளிப்பாடுகளை ஒன்றாக வைத்து நோக்கும்பொழுது கவிதைகள் கேட்போரால் / வாசகர்களால் உள்வாங்கப்பட்டு ரசிக்கப்பெறும் முறையில், காலத்துக்குக் காலம் அழுத்த வேறுபாடுகள் ஏற்படுவது வழக்கம்.

கவிதை என்பது யாது; அது எவற்றைப் பற்றிப் பேசுதல் வேண்டும்; எப்பொழுது எந்த நிலையில் ஒரு கவிதையாக்கம் கவர்ச்சிகரமான கவிதையாக அமையும் என்பன பற்றி, அவற்றின் ஆக்கத்தில் ஈடுபடுவோருடைய கருத்து நிலைப்பாடுகள் கவிதை, கவிதையெனக் கொள்ளப்படுவதற்கான எடுத்துக்கூறல் முறைமைகள் ஆகியன யாவும் ஒருங்கு சேர்கின்றபொழுதுதான் மேலே கூறிய கவித்துவ உணர்வுச் செவ்வியலிலே மாற்றம் தெரிய வரும்.

–தமிழின் கவிதையியல் நூலில் கா. சிவத்தம்பி



## நூல்வெளி

இராசேந்திரன் என்னும் இயற்பெயர் கொண்ட இந்திரன் சிறந்த கலைவிமர்சகர், கவிஞர், மொழிபெயர்ப்பாளர், ஓவியர் எனப் பன்முகத்தன்மை கொண்டவர். ஒரிய மொழிக் கவிஞர் மனோரமா பிஸ்வாஸின் "பறவைகள் ஒருவேளை தூங்கப் போயிருக்கலாம்" என்னும் நூலின் மொழிபெயர்ப்பு நூலுக்காக, 2011ஆம் ஆண்டுக்கான சாகித்திய அகாதெமியின் விருது பெற்றுள்ளார். முப்பட்டை நகரம், சாம்பல் வார்த்தைகள் உள்ளிட்ட கவிதை நூல்களையும் தமிழ் அழகியல், நவீன ஓவியம் உள்ளிட்ட கட்டுரை நூல்களையும் படைத்துள்ளார். வெளிச்சம், நுண்கலை ஆகிய இதழ்களை நடத்தியுள்ளார்.

### பாடப்பகுதிக்கான கவிதை மொழிபெயர்ப்புகள்

- வால்ட் விட்மன் – ஆங்கிலத்திலிருந்து தமிழில் : சங்கர் ஜெயராமன்
- மல்லார்மே – பிரெஞ்சு மொழியிலிருந்து தமிழில் : வெ. ஸ்ரீராம்
- பாப்லோ நெரூடா – ஆங்கிலத்திலிருந்து தமிழில் : ஆ.இரா. வேங்கடாசலபதி



## கற்பவை கற்றபின்...

1. பாரதியின் வசனகவிதைகளுள் உங்களுக்குப் பிடித்த கவிதையை வகுப்பறையில் படித்துக் காட்டுக.
2. கவிதை குறித்துத் தமிழ்க்கவிஞர்களின் கருத்துகளைத் திரட்டி ஒப்படைவு எழுதுக.

கவிதைப்பேழை

இயல் 1

## நன்னூல் – பாயிரம்




**நுழையும்முன்**

நூலைப் புரிந்துகொள்ளவும் அதன் சிறப்பை உணர்ந்து விருப்பத்துடன் கற்கவும் பாயிரம் உதவுகிறது. தமிழின் முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் இத்தகைய அமைப்பினைக் காணலாம். தொல்காப்பியத்தையும் அதன் உரைகளையும் பின்பற்றி எழுதப்பட்ட நூலான நன்னூலில்பொதுப்பாயிரம்,சிறப்புப்பாயிரம்ஆகியனகுறித்துவிளக்கப்பட்டுள்ளது. அவற்றுள் ஏழு நூற்பாக்களை நம் பாடப்பகுதியில் பார்ப்போம்.

### பாயிரம் இல்லது பனுவல் அன்றே

1. *முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்*
   *புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.* — நூ. எண்: 1

2. *பாயிரம் பொது, சிறப்பு எனஇரு பாற்றே.* — நூ. எண்: 2

3. *நூலே நுவல்வோன் நுவலும் திறனே*
   *கொள்வோன் கோடல் கூற்றாம் ஐந்தும்*
   *எல்லா நூற்கும் இவைபொதுப் பாயிரம்.* — நூ. எண்: 3

4. *ஆக்கியோன் பெயரே வழியே எல்லை*
   *நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே*
   *கேட்போர் பயனோடு ஆய்எண் பொருளும்*
   *வாய்ப்பக் காட்டல் பாயிரத்து இயல்பே.** — நூ. எண்: 47

5. *காலம் களனே காரணம் என்றுஇம்*
   *மூவகை ஏற்றி மொழிநரும் உளரே.** — நூ. எண்: 48

6. *ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்*
   *பாயிரம் இல்லது பனுவல் அன்றே.* — நூ. எண்: 54

7. *மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்*
   *ஆடமைத்தோள் நல்லார்க்கு அணியும்போல் – நாடிமுன்*
   *ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்*
   *பெய்துரையா வைத்தார் பெரிது.* — நூ. எண்: 55

*– பவணந்தி முனிவர்*

## பாயிரம் – அறிமுகம்

நூலை உருவாக்கும் ஆசிரியரின் சிறப்பையும் அந்நூல் வழங்கும் கருத்து வளத்தையும் தொகுத்து நூல் முகப்பில் வைக்கும் முறைபற்றிப் பேசுவது பாயிரமாகும்.

## சொல்லும் பொருளும்

பால் – வகை ; இயல்பு – இலக்கணம்; மாடம் – மாளிகை; அமை – மூங்கில்.

## பாடலின் பொருள்

1. பாயிரத்திற்கு உரிய ஏழு பெயர்கள்

அ) முகவுரை - நூலுக்குமுன் சொல்லப்படுவது.

ஆ) பதிகம் - ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருள்களையும் தொகுத்துச் சொல்வது.

இ) அணிந்துரை ஈ) புனைந்துரை - நூலின் பெருமை முதலியவை விளங்க அலங்கரித்துச் சொல்வது.

உ) நூன்முகம் - நூலுக்கு முகம்போல முற்பட்டிருப்பது.

ஊ) புறவுரை - நூலில் சொல்லிய பொருள் அல்லாதவற்றை நூலின் புறத்திலே சொல்வது.

எ) தந்துரை - நூலில் சொல்லிய பொருள் அல்லாதவற்றைத் தந்து சொல்வது.

2. பாயிரம் பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம் என இருவகைப்படும்.

3. நூலின் இயல்பு, ஆசிரியர் இயல்பு, கற்பிக்கும் முறை, மாணவர் இயல்பு, கற்கும் முறை என்னும் ஐந்தையும் கூறுவது பொதுப்பாயிரம்.

4. சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம்

நூலாசிரியர் பெயர்

நூல் பின்பற்றிய வழி

நூல் வழங்கப்படுகின்ற நிலப்பரப்பு

நூலின் பெயர்

நன்னூல்

இந்நூல்செய்தவர்

பவணந்திமுனிவர்.

இவ்வுரைசெய்தவர்

விசாகப்பெருமாளையர்

சென்னபட்டணம்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.



நன்னூல் முதல் பதிப்பு (1834) முகப்புப் பக்கம்

தொகை, வகை, விரி என்பவற்றுள் இன்னதில் இயற்றப்பட்டது என்னும் யாப்பு

நூலில் குறிப்பிடப்படும் கருத்து

நூலைக் கேட்போர் (மாணவர்)

நூலைக் கற்பதனால் பெறுகின்ற பயன்

ஆகிய எட்டுச் செய்திகளையும் செம்மையாகத் தெரிவிப்பது சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம் ஆகும். இப்பாடல் நூற்பா வகையைச் சார்ந்தது.

5. நூல் இயற்றப்பட்ட காலம், அது அரங்கேற்றப்பட்ட அவைக்களம், அது இயற்றப்பட்டதற்கான காரணம் என்னும் இம்மூன்றையும் மேலே கூறப்பட்டுள்ள எட்டுச் செய்திகளுடன் சேர்த்துக் கூறுவோரும் உள்ளனர்.

6. ஆயிரம் முகத்தைப் பெற்றது போன்று பல்வேறு துறைச் செய்திகளை விரிவாகக் கூறினாலும் பாயிரம் இல்லையேல் அது சிறந்த நூலாக மதிக்கப்படாது.

*7. மாடங்களுக்கு ஓவியங்களும் பெரிய நகரங்களுக்குக் கோபுரங்களும் அழகிய தோள்களைக்கொண்ட மகளிருக்கு அணிகலன்களும் எழிலைத் தரும். அவை போன்று எல்லாவகை நூல்களுக்கும் முன்னர் அழகு தருவதற்காக அணிந்துரையைப் புலவர்கள் பெருமையுடன் சேர்த்து வைத்தனர்.*



*பவணந்தி முனிவர்*

## இலக்கணக்குறிப்பு

காட்டல், கோடல் – தொழிற்பெயர்கள்

ஐந்தும் – முற்றும்மை

கேட்போர் – வினையாலணையும் பெயர்

மாநகர் – உரிச்சொற்றொடர்

## பகுபத உறுப்பிலக்கணம்

**வைத்தார் – வை + த் + த் + ஆர்**

வை – பகுதி

த் – சந்தி

த் – இறந்தகால இடைநிலை

ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி.

## புணர்ச்சிவிதி

**அணிந்துரை – அணிந்து + உரை**

உயிர்வரின் உக்குறள் மெய் விட்டோடும் – அணிந்த் + உரை

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – அணிந்துரை.

**பொதுச்சிறப்பு – பொது + சிறப்பு**

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும் – பொதுச்சிறப்பு.

### நூல்வெளி



நன்னூல், தொல்காப்பியத்தை முதல்நூலாகக் கொண்ட வழிநூல் ஆகும். இது, பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டில் பவணந்தி முனிவரால் எழுதப்பட்ட தமிழ் இலக்கண நூலாகும். இந்நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என இரண்டு அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. எழுத்ததிகாரம் எழுத்தியல், பதவியல், உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல் என 5 பகுதிகளாகவும் சொல்லதிகாரம் பெயரியல், வினையியல், பொதுவியல், இடையியல், உரியியல் என 5 பகுதிகளாகவும் அமைந்துள்ளன.

சீயகங்கன் என்ற சிற்றரசர் கேட்டுக்கொண்டதால் பவணந்தி முனிவர் நன்னூலை இயற்றினார் எனப் பாயிரம் குறிப்பிடுகிறது.

ஈரோடு மாவட்டம், மேட்டுப்புதூர் என்ற ஊரில் எட்டாம் தீர்த்தங்கரரான சந்திரப்பிரபாவின் கோவில் உள்ளது. இங்கே பவணந்தியாரின் உருவச் சிற்பம் இன்றும் உள்ளது.

### கற்பவை கற்றபின்...



எல்லாவகை நூல்களுக்கும் அழகு தருவதாக வைக்கப்படுவது அணிந்துரை – எடுத்துக்காட்டுகளுடன் வகுப்பறையில் விவாதிக்க.




# ஆறாம் திணை

அ. முத்துலிங்கம்

**நுழையும்முன்**

காலந்தோறும் நிலையான வாழ்விடங்களைத் தேடிப் புலம்பெயர்ந்தபடியே இருந்த நாடோடி இனம், நிலவுடைமைச் சமூகமாக மாறப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆயின. மண்ணிலிருந்து பயிர்களைப் பிடுங்கியெறிவதுபோல, தாய்மண்ணிலிருந்து மனிதவுயிர்களைப் பெயர்த்து எறியும் போக்கு காலந்தோறும் நடந்துவரும் பேரவலமாகும். தங்களுடைய தாய்நாட்டிலிருந்து வெளியேறியவர்களும் வெளியேற்றப் பட்டவர்களும் எதிர்கொள்ளும் அவலங்களை ஆறாம்திணை ஆறாத வடுவாகப் பதிவு செய்கிறது.

நாங்கள் அப்போது இலங்கையில் மவுண்லவினியா என்னும் இடத்தில் வாடகை வீட்டில் தங்கியிருந்தோம். எங்கள் வீட்டுச் சொந்தக்காரர் பெயர் பிரீஸ். அவருக்குத் தமிழ் தெரியாது. எனக்குச் சிங்களம் தெரியாது.

1958ஆம் ஆண்டு மே மாதம் ஓர் இரவு கலவரம் மெல்ல மெல்ல ஊர்ந்து கொழும்புக்கு வந்தது. எந்த நேரமும் எங்கள் வீடு தாக்குதலுக்கு உள்ளாகலாம் என்று உணர்ந்த எங்கள் அண்ணா எங்கள் உயிரையும் உடைமைகளையும் பிரீஸ்தான் பாதுகாக்க வேண்டும் என்று அவரிடம் வேண்டினார். பிரீஸ் அப்போதுதான் தன் நினைவுக்கு வந்ததுபோல் ஒரு புதுமனிதராக மாறினார். எங்கள் பாதுகாப்புக்கு, தான் உத்திரவாதம் என்றார். ஒரு நாற்காலியை எடுத்து வீட்டுக்கு வெளியே போட்டு அன்றிரவு முழுக்க அங்கேயே தங்கினார். தூங்கவே இல்லை. உள்ளே நாங்களும் தூங்காமல் விடிவதற்காகக் காத்திருந்தோம். அடுத்த நாள் காலை அங்கிருந்த மூன்று தமிழ்க் குடும்பங்களில் ஒரு குடும்பத்தின் வீடு உடைந்து சிதிலமாகிவிட்டது என்றார்கள். ஒரு குடும்பத்து ஆட்கள் இரவோடு இரவாக மறைந்துவிட்டார்கள். எஞ்சியது நாங்கள் மட்டும்தான்.

## எனக்குக் கிடைத்த சட்டை

ஒரு போலீஸ் வாகனத்தில் எங்களையும் இன்னும் சில தமிழ்க் குடும்பங்களையும் அகதிகள் முகாமுக்கு அழைத்துச் சென்றார்கள். ஒரேயொரு பெட்டிதான் எடுத்து வரலாம் என்று கட்டளை. என் பங்குக்கு டேனியல் டி∴போ எழுதிய "ராபின்சன் குரூசோ" என்ற ஒரேயொரு புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டேன். எப்போது வீட்டுக்குத் திரும்பி வருவோம் என்பது நிச்சயமில்லை. அடுத்த வேளை உணவு எப்போது, எங்கேயிருந்து வரும் என்பதும் தெரியாது.

முகாமில் ஒரு தொண்டு நிறுவனம் அகதிகளுக்கு இலவசமாக உடைகள் வழங்கியது. ஏதோவொரு வெளிநாட்டில் யாரோ போட்டு வைத்த உடைகள்தாம் அவை. அதற்காக ஆட்கள் சண்டை போட்டு ஒருவர் மேல் இன்னொருவர் ஏறி நின்று பெற்றுக்கொண்டார்கள். எனக்குப் பெரிசான இரவு ஆடையின் மேல்சட்டை மட்டுமே அகப்பட்டது. கீழ்க் கால்சட்டை யாருக்குப் போனதோ தெரியாது. அந்த மேல்சட்டையின் கடைசிப் பட்டன் என் கைகளுக்கு எட்டாது. ஆனால் மிகச் சந்தோஷமாக அதை நான் பகலிலும் இரவிலும் அணிந்துகொண்டேன்.

அகதி முகாமில் 2000பேர் வரை இருந்தார்கள் என்று நினைக்கிறேன். இன்னும் பல முகாம்கள் இருந்தன என்று பின்னர்க் கேள்விப்பட்டேன். ஒரு மத்தியான நேரத்தின்போது அகதிகளாகிய நாங்கள் மறியல் கைதிகள்போல வரிசையில் தட்டையேந்தி உணவுக்காக நின்றோம். இரண்டு கரண்டி எண்ணி என் தட்டில் விழுந்தது. அது மஞ்சள் நிறத்தில் சோறுபோலவே இருந்தது. பருப்பு முடிந்துவிட்டது. யாரோ ஒருவர் போட்டு முடித்த நீளமான இரவுச்சட்டையோடு நான் நெடுநேரம் அங்கே நின்றேன். அப்பொழுது நான் எனக்குச் சொல்லிக் கொண்டேன் 'இந்த நாளை நன்றாக ஞாபகம் வை. இதுவே உன் வாழ்நாளில் ஆகக் கீழேயான தருணம். இனிமேல் இப்படி ஒரு கணம் உன் வாழ்க்கையில் வராமல் பார்த்துக்கொள்'.

யாரோ போட்டு முடித்துத் தானமாகக் கிடைத்த இரவுச் சட்டையை நான் பல வருடங்களாகப் பல தேசங்களுக்கும் ஒரு ஞாபகத்துக்காகக் காவித் திரிந்தேன். ஒரு காலத்தில் நான் வளர்ந்து பெரியவனாகி அந்த உடையை நிரப்புவேன் என்று நினைத்தேன். அது நடக்கவே இல்லை. அந்த உடையும் ஒரு நாட்டை விட்டு இன்னொரு நாட்டுக்கு மாறும் இடைவெளியில் எங்கோ எப்போதோ ஏதோ ஒரு தருணத்தில் என்னை விட்டுத் தப்பியது.

## உயிர் வாழும் திறமை

சில வருடங்களுக்கு முன்னர் நான் புலம்பெயர்ந்த தமிழ் இளைஞர் ஒருவரைச் சந்தித்தேன். முப்பது வயதிருக்கும். உற்சாகமாக இருந்தார். இவருடையது வித்தியாசமான கதை. இலங்கையிலும் பாங்காக்கிலும் சிறையில் இருந்திருக்கிறார். ரஷ்யாவில் பனிப்புதைவில் மயிரிழையில் உயிர் தப்பியவர். ஒன்பது நாள் விசா கெடுவை மீறித் தங்கியதற்காக, சிங்கப்பூரில் இவரைக் குப்புறக் கிடக்க வைத்து ஒன்பது பிரம்படிகள் கொடுத்திருக்கிறார்கள். கழுத்தில் மரப்பூட்டைப் போட்டுவிட்டு ஒரு தடியான மனிதன் பிரம்பினால் அடித்தான். அடித்து முடித்த பிறகு அதே இடத்தில் ஒரு சீனக்கிழவி மயிலிறகால் முதுகில் எண்ணெய் பூசிவிட்டாள். இருவருக்கும் சிங்கப்பூர் அரசு சம்பளம் கொடுத்தது.

அமெரிக்கா போய்ச் சேர்ந்தபோது அவருடைய கள்ள பாஸ்போர்ட்டைக் கண்டுபிடித்துவிட்டார்கள். கையிலும் காலிலும் சங்கிலி மாட்டிக் கையிலே 8 றாத்தல் கனமான இரும்புக்குண்டைக் காவக் கொடுத்து, நடத்திச் சிறைக்குக் கூட்டிச் சென்றார்கள். சிறைவாசம் முடிந்து, மூன்று வருடப் பயணத்துக்குப் பின்னர் கனடாவுக்கு வந்து சேர்ந்தார். அங்கு அகதியாக இருந்தபோது வேலை தேடி 17 கம்பெனிகளில் நேர்முகத் தேர்வுக்குப் போனார். எல்லோரும் அவரிடம், 'உங்கள் கனடிய அனுபவம் என்ன? உங்கள் திறமை என்ன?' என்றே கேள்வி கேட்டார்கள். 18 ஆவது இடத்தில் அவர் இப்படிப் பதில் சொன்னார். 'ஐயா, எனக்குக் கனடா அனுபவம் கிடையாது; ஆனால், என்னிடம் நிறையத் திறமை' உள்ளது. என் திறமை நான் உயிர் வாழ்வது. இன்றுவரைக்கும் உயிர் தப்பி நான் வாழ்கிறேன் என்றால் அது என் திறமை.' இப்பொழுது அவர் கனரக வாகனம் ஓட்டுகிறார். அவருடைய வருமானம் சராசரி கனடியரின் வருமானத்திலும் பார்க்க இரண்டு மடங்கு அதிகம். இது ஓர் உதாரணம்தான். ஒரு புது நாடு கிடைத்துவிட்ட சந்தோஷம் அவருடைய முகத்தில் நிரந்தரமாக இருக்கிறது. கூடவே அகதியாக வாழ்வதன் வலியும்.

## புலம்பெயர் இலக்கியம்

புலம்பெயர்வது ஒன்றும் புதிதல்ல. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக மனிதன் புலம்பெயர்ந்தபடியே இருக்கிறான். சங்க இலக்கியத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து நிலங்கள் பற்றிப் பேசும்; பல பாடல்கள் தலைவன், தலைவி பிரிந்து போவதைச் சொல்லும். பொருள்வயின் பிரிவு என்று சொல்வார்கள். பொருள் தேடப் போவதால் புலம் பெயர நேரிடுகிறது. நற்றிணை 153 ஆவது பாடலில்

# தமிழரின் உலகப் பரவல்

பிரான்ஸ்
ஹங்கேரி
நெதர்லாந்து
இங்கிலாந்து
ஜெர்மனி
செக்கோஸ்லோவாகியா
ஸ்வீடன்
போலந்து
ஜோர்டான்
ஈராக்
கத்தார்
இந்தியாவின் மற்ற மாநிலங்கள்
தமிழ்நாடு
ஈரான்
டென்மார்க்
நார்வே
பின்லாந்து
ரஷ்யா
குவைத்
சீனா
பர்மா
தென் கொரியா
இத்தாலி
கனடா
போர்சுக்கல்
ஸ்பெயின்
அமெரிக்க ஐக்கிய நாடுகள்
செயின்ட் வின்சென்ட்
செயின்ட் கிராக்ஸ்
ஜமைக்கா
ஜிப்ரால்டர்
செயின்ட் மார்டின்
செயின்ட் கிட்ஸ்
கொடலோபெ
செயின்ட் லுசியா
டிரினிடாட் & டொபகோ
கினி
கயானா
சுரினாம்
பிரெஞ்சு கயானா
செனகால்
எகிப்து
ட்போடி
கென்யா
சவுதி அரேபியா
யுகாண்டா
தான்சானியா
எத்தியோபியா
தென் ஆப்பிரிக்கா
ரி யூனியன்
மொரிசியஸ்
சீஷெல்ஸ் தீவுகள்
பஹ்ரைன்
அரபு ஐக்கிய நாடுகள்
ஓமன்
மாலத் தீவுகள்
ஜப்பான்
இலங்கை
ஹாங்காங்
தாய்லாந்து
பிலிப்பைன்ஸ்
தெற்கு வியட்நாம்
மலேசியா
சிங்கப்பூர்
இந்தோனெஷியா
தகிடி
பிஜி
ஆஸ்திரேலியா
புதிய கெலிடொனர்
நியூ சிலாந்து




# நற்றிணை

**நுழையும்முன்**

வளமையும் வறுமையும் வாழ்க்கையென்னும் நாணயத்தின் இருபக்கங்களாகும். வறுமையில் செம்மையாய் வாழ அறிவுறுத்துவது கல்வி. இம்மாண்பு சிலருக்கு இயல்பிலேயே கைகூடும். வளமான மனையில் பிறந்த பெண்ணொருத்தி, குறைந்த வளமுடைய தலைவன் வீட்டிலும் தன்னிலை மாறாது வறுமையிற் செம்மையாய் வாழ்கின்ற காட்சியைப் படம் பிடிக்கிறது நற்றிணையின் இப்பாடல்.

*பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்*
*விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்*
*புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்*
*உண்என்று ஒக்குபு புடைப்பத் தெண்ணீர்*
*முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று*
*அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்*
*பரீஇ மெலிந்துஒழியப் பந்தர் ஓடி*
*ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி*
*அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனள் கொல்*
*கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்*
*ஒழுகுநீர் நுணங்கறல் போலப்*
*பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையளே. (110)*

– போதனார்

தித்திக்கும் தேனும் பாலும்
பொற்கிண்ணத்தில் கலங்க
ஒருவாய் சுவைக்கவும் ஒவ்வாமை காட்டி
முத்துப் பந்தலில் ஓடி விளையாடி
மூச்சிறைக்க வைத்த செல்லச் சிறுமகள்
மலர்ச்செண்டும் தோற்க வளமனை சாடி
மறுகை மறுத்து மறைவாள் அன்று

இன்றோ
ஒருநேர உணவே அமிழ்தென நுகரும்
பெருந்தனப் பாங்கு பெற்றது எங்கே?
இல்லவன் செல்வத்து இருப்புக்கு ஏற்ப
பிறரை நயவாப் பொருளியல் பெருமிதம்
பேரறிவு ஒழுக்கம் பெற்றது எப்படி?

திணை : பாலை துறை : மகள் நிலை உரைத்தல்

கூற்று : தலைவி இல்லறம் ஆற்றும் செவ்வியைப் பாராட்டிச் செவிலித்தாய் நற்றாயிடம் கூறியது.

**கூற்று விளக்கம்:** திருமணம் முடிந்து கணவன் வீட்டில் வசிக்கும் தலைவியைக் காணச் சென்றுவந்த செவிலி, நற்றாயிடம் மகள் வறுமையிலும் செம்மையாக வாழ்வதைச் சொல்லி, இத்தகைய இல்லற அறிவை எப்படிப் பெற்றாள் என வியந்து கூறுதல்.

**துறை விளக்கம்:** "மகள் நிலை உரைத்தல்" என்பது தலைவனோடு உடன்போகிய விளையாட்டுப் பருவம் மாறாத மகள் இல்லறம் ஆற்றும் பாங்கை நற்றாயிடம் செவிலித்தாய் எண்ணிக் கூறுவது. இத்துறை "மனைமருட்சி" என்றும் கூறப்படும்.

**சொல்லும் பொருளும்**

பிரசம் – தேன்; புடைத்தல் – கோல்கொண்டு மிரட்டுதல்; கொழுநன் குடி – கணவனுடைய வீடு; வறன் – வறுமை; கொழுஞ்சோறு – பெருஞ்செல்வம்; உள்ளாள் – நினையாள்; மதுகை – பெருமிதம்.

## பாடலின் பொருள்

"நம் வீட்டில் தேன் கலந்த இனிய பால் உணவை ஒளிமிக்க பொற்கலத்தில் இட்டுச் செவிலித்தாயர் ஒரு கையில் ஏந்தி வருவர். நம் மகளை உண்ண வைப்பதற்காக இன்னொரு கையில் பூச்சுற்றிய மென்மையான சிறு கோலை வைத்திருப்பர். வீட்டின் முற்றத்தில் பந்தரின்கீழ் 'இதை உண்பாயாக' எனச் செல்லமாக அக்கோலால் அடித்து வேண்டுவர். மகளோ, 'நான் உண்ணேன்' என மறுத்து முத்துப்பரல்கள் இட்ட பொற்சிலம்பு ஒலிக்க அங்குமிங்கும் ஓடுவாள். செவிலித்தாயர் அவளைப் பின்தொடர முடியாமல் நடை தளர்ந்து நிற்பர். இப்படிப்பட்ட விளையாட்டுப் பெண், நம் மகள். இவள் எப்படி இப்போது இத்தகைய அறிவையும் இல்லற நடைமுறையும் கற்றாள்? தான் மணந்துகொண்ட கணவன் வீட்டில் வறுமையுற்ற நிலையிலும் தன் தந்தையின் வீட்டில் பெற்ற வளமான உணவினைப் பற்றி நினைத்துப் பாராள். ஓடுகின்ற நீரிலே கிடக்கும் நுண்மணலில் இடைவெளி இருப்பதுபோல் ஒரு பொழுது இடைவெளி விட்டு ஒரு பொழுது உண்ணும் வன்மை பெற்றிருக்கிறாள். இது என்ன வியப்பு?"

## இலக்கணக் குறிப்பு

வெண்சுவை, தீம்பால் – பண்புத்தொகைகள்; விரிகதிர், ஒழுகுநீர் – வினைத்தொகைகள்; பொற்கலம், பொற்சிலம்பு – மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகைகள்; கொண்ட – பெயரெச்சம்; அறிவும் ஒழுக்கமும் – எண்ணும்மை; பந்தர் – பந்தல் என்பதன் ஈற்றுப்போலி.

## பகுபத உறுப்பிலக்கணம்

**மெலிந்து – மெலி + த்(ந்) + த் + உ**

மெலி – பகுதி; த் – சந்தி, ந் ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

உ – வினையெச்ச விகுதி.

**மறுத்து – மறு + த் + த் + உ**

மறு – பகுதி; த் – சந்தி; த் – இறந்தகால இடைநிலை

உ – வினையெச்ச விகுதி.

## புணர்ச்சி விதி

சிறுகோல் – சிறுமை + கோல்

ஈறு போதல் – சிறுகோல்

பொற்சிலம்பு – பொன் + சிலம்பு

ணன வல்லினம் வர ட ற வும் – பொன்சிலம்பு.

### நூல்வெளி



நற்றிணை எட்டுத்தொகை நூல்களுள் முதலாவதாக வைத்துப் போற்றப்படுவதாகும்; 'நல்ல திணை' என்ற அடைமொழியால் போற்றப்படும் சிறப்பினை உடையது. இது, நானூறு பாடல்களைக் கொண்டது. 9 அடிகளைச் சிற்றெல்லையாகவும் 12 அடிகளைப் பேரெல்லையாகவும் கொண்டது. நற்றிணையைத் தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி. இதன் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். போதனார்: சங்ககாலப் புலவர். நற்றிணையில் 110ஆம் பாடலை மட்டும் பாடியுள்ளார். நற்றிணையின் பேரெல்லை 12 அடி.விதிவிலக்காக 13 அடிகளைக் கொண்டதாக இவரது பாடல் அமைந்துள்ளது.

### கற்பவை கற்றபின்...



சூழலோடு பொருந்திக் கல்வியை வளர்த்துக்கொள்பவர் பெண்ணே! ஆணே! – கலந்துரையாடல் நிகழ்த்துக.

கவிதைப்பேழை

இயல் 4

## தொல்காப்பியம்




### சிறப்புப் பாயிர உரைவிளக்கப் பாடல்

**நுழையும்முன்**

தொல்காப்பியரால் தொகுத்தும் பகுத்தும் சேர்த்தும் எழுதப்பட்ட நூல் தொல்காப்பியமாகும். இந்நூல் எழுத்து, சொல் மட்டுமன்றிப் பொருள் இலக்கணமான வாழ்வின் இலக்கணத்தையும் வகுத்துக் கூறுவதாகும். நாட்டின் எதிர்காலமாய் விளங்கும் மாண்பு பொருந்திய மாணவர் எவ்வாறு கற்க வேண்டும் என்பதை இதன் சிறப்புப் பாயிர உரைவிளக்கப் பாடல் தெள்ளிதின் விளக்குகிறது.

*வழக்கின் இலக்கணம் இழுக்கின்று அறிதல்*
*பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்*
*ஆசாற் சார்ந்துஅவை அமைவரக் கேட்டல்*
*அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்*
*வினாதல் வினாயவை விடுத்தல் என்றின்னவை*
*கடனாக் கொளினே மடம்நனி இகக்கும்.* 1

*ஒருகுறி கேட்போன் இருகாற் கேட்பிற்*
*பெருக நூலிற் பிழைபா டிலனே.* 2

*முக்காற் கேட்பின் முறையறிந்து உரைக்கும்.* 3



**சொல்லும் பொருளும்**

இகக்கும்- நீக்கும்; இழுக்கு- குற்றம்; வினாயவை- கேட்டவை.

**பாடலின் பொருள்**

சிறப்புடைய மாணவர் எனப்படுவோர் உலக வழக்கு, நூல் வழக்கு ஆகிய இலக்கணங்களை ஆசிரியர்களிடம் குற்றமின்றி அறிவர்; பாடங்களைப் போற்றிக் கற்பர். ஆசிரியர்களிடம் கற்ற பாடங்களை மீண்டும் நினைத்துப் பயிற்சி பெறுவர். ஆசிரியரை அணுகிப் பாடக்கருத்துகளைக் கேட்டுத் தெளிவு அடைவர். ஆசிரியர்களைப் போன்ற உயர்சிந்தனை உடையவர்களுடன் கலந்துரையாடி விளக்கம் பெறுவர். தங்களது ஐயங்களை ஆசிரியர்களிடம் வினவித் தெளிவுறுவர். அவ்வாறு தெளிவுற்ற கருத்துகளைப் பிறர்க்கு உணர்த்தித் தெளிவடையச் செய்வர். ஆசிரியர் கூறும் கருத்துகளை ஒருமுறைக்கு இருமுறை கேட்கும் மாணவர்கள் நூலைப் பிழையின்றிக் கற்கும் திறன் பெறுவர். மூன்றுமுறை கேட்போர் பாடக்கருத்துகளைப் பிறர்க்கு முறையாக எடுத்துரைக்கும் ஆற்றல் பெறுவர். இத்தன்மையில் பாடம் கேட்டலைக் கடமையாகக் கொண்ட மாணவர்கள் அறியாமையிலிருந்து நீங்கிச் சிறந்து விளங்குவர்.

### இலக்கணக்குறிப்பு

அறிதல், போற்றல், நினைத்தல், கேட்டல், பயிறல் – தொழிற்பெயர்கள்;

நனிஇகக்கும் – உரிச்சொற்றொடர்

### பகுபத உறுப்பிலக்கணம்

**விடுத்தல் – விடு + த் + தல்**

விடு – பகுதி; த் – சந்தி;

தல் – தொழிற்பெயர் விகுதி.

**அறிந்து – அறி + த்(ந்) + த் + உ**

அறி – பகுதி. த் – சந்தி, ந் ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

உ – வினையெச்ச விகுதி.

### புணர்ச்சி விதி

இழுக்கின்றி – இழுக்கு + இன்றி

உயிர் வரின் உக்குறள் மெய் விட்டோடும் – இழுக்க் + இன்றி

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – இழுக்கின்றி.

**முறையறிந்து – முறை + அறிந்து**

இ ஈ ஐ வழி யவ்வும் – முறை + ய் + அறிந்து

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – முறையறிந்து.

உ
தொல்காப்பியம்.
இஃது
ஜமதக்கினிமஹாரிஷியின் புத்திரரும்,
அகஸ்திய மஹாரிஷியின் முதன் மாணாக்கரு
மாகியதிரணதூமாக்கினியென்னு மியற்பெயருடைய
தொல்காப்பியமகாரிஷியினால்
அருளிச்செய்யப்பட்டது.
இதில்
முதலாவது - எழுத்ததிகாரமூலமும்,
மதுரை ஆசிரியர் பாரத்துவாசி
நச்சினார்க்கினியரால்
அருளிச்செய்யப்பட்ட வுரையும்,
சுரவிதங்களாலாய வழுக்களை நீக்கி யச்சிட்டுத் தருகவெனச் சில
வித்துவான்கள் கேட்டுக்கொள்ளக் கனம் பொருந்திய
கம்பெனி யாரால் ஏற்படுத்தப்பட்ட யூநிவர்
சிட்டியென்னுஞ் சகல சாஸ்திர
சாலைத் தமிழ்த் தலைமைப்
புலமைநடாத்திய
மழவை
மகாலிங்கையரவர்களால்
பலபிரதிகளைக்கொண்டாராயப்பட்டுத்
திருவண்ணாமலை
வீரபத்திரையரால்
தமது - கல்விக்கடல் அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டன.
சாலிவாகன - ௵ - [illegible] - சரியான பிலவங்க ௵ ஆவணிமீ.

தொல்காப்பியம் முதல் பதிப்பு (1847) முகப்புப் பக்கம்

#### நூல்வெளி



நமக்குக் கிடைக்கும் தமிழ் நூல்களில் காலத்தால் பழமையான இலக்கணநூல் தொல்காப்பியம். இதன் ஆசிரியர் தொல்காப்பியர். தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களைக் கொண்டது. ஒவ்வொரு அதிகாரத்திலும் ஒன்பது இயல்களாக மொத்தம் இருபத்தேழு இயல்கள் உள்ளன. தொல்காப்பியத்திற்குப் பலர் உரை எழுதியுள்ளனர். அவர்களுள் பழமையான உரையாசிரியர்கள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், கல்லாடனார், சேனாவரையர், தெய்வச்சிலையார், பேராசிரியர் ஆகியோர் ஆவர். நச்சினார்க்கினியரின் சிறப்புப்பாயிர உரைவிளக்கத்தில் உள்ள பாடல் பாடமாக இடம் பெற்றுள்ளது.

#### கற்பவை கற்றபின்...



தொல்காப்பியம் குறித்து நீங்கள் அறிந்த செய்திகளைத் தொகுத்து ஒப்படைவு உருவாக்குக.

விரிவானம்

இயல் 4

# இதழாளர் பாரதி




**நுழையும்முன்**

கல்வி என்பது பள்ளியில் அல்லது கல்லூரியில் மட்டும் பெறப்படுவதன்று. கல்வி கற்பவர், இதழ்களிலும் நடைமுறை அறிவைப் பெறுவதுடன் அதற்கேற்ப வாழவும் முனைகின்றனர். இவ்விதழ்களின் ஆசிரியர்கள் சமூகத்திற்குத் தேவையான பாடங்களை முன்வைக்கின்றனர். சிறந்த பத்திரிகையாளன் 'நல்ல ஆசான்' என்பதில் ஐயமில்லை. பாரதியும் இதற்கு விலக்கன்று. செம்மொழியாகத் திகழும் நம் மொழி புதிய நடையும் புதிய உடையும் புதிய பொருளும்கொண்டு எழுச்சியுடன் திகழக் காரணமாக அமைந்த தமிழ்ச்சிற்பி பாரதியின் மற்றொரு பரிமாணம் இதழியல் பணி.

*10.10.2018,*

*10:15 மு.ப.*

**அன்புசால் அப்பாவிற்கு,**

கடிதம் எழுதுவதே மறந்துபோன இன்றைய சூழலில் அத்தனையும் பேசிவிட முடியாத காலப்பெரு இடைவெளியில் இதை எழுதுகிறேன். இப்பொழுது மின்னஞ்சல் வசதி இருப்பதால் கடிதத் தொடர்பில் ஏற்பட்ட பெரும் இடைவெளி குறைந்தது. சிறுவயதில் எனக்குப் பாரதியின் கவிதைகளை அறிமுகப்படுத்தியவர் நீங்கள்தாம். 'மகாகவி என்ற பேரொளியில் பாரதியின் பல பரிமாணங்கள் மறைந்துள்ளன' என நீங்கள் அடிக்கடி கூறுவீர்கள். அண்மைக்காலமாக, பாரதியின் இதழியல் பணி பற்றிய நூல்களைப் படித்து வருகின்றேன். இதைத் தங்களிடம் பகிர்ந்துகொள்ளவே இம்மின்னஞ்சல்.

ஆம் அப்பா, நீங்கள் கூறியதுபோல பாரதி கவிஞர் மட்டுமல்லர், சிறந்த பேச்சாளர்; பாடகர்; கட்டுரையாளர்; கதை ஆசிரியர்; மொழிபெயர்ப்பாளர்; அரசியல் அறிஞர்; ஆன்மிகவாதி. இவை அனைத்திற்கும் மேலாக மிகச்சிறந்த இதழாளர் என்பதை அறிந்தபொழுது நான் பாரதியை எண்ணி எண்ணி வியந்தேன்.

அப்பா, எட்டையபுரம் சமஸ்தானத்தின் பணிக் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேறிய பாரதி, மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியில் சேர்ந்தார். அங்கிருந்து வெளியேறிய அவர், சுதேசமித்திரன் இதழில் உதவி ஆசிரியராகப் பொறுப்பேற்றார். பாரதியின் உலகளாவிய பார்வை கூர்மைப்பட இதழியல் பணியே தூண்டுகோலாக இருந்திருக்கவேண்டும்.

இதழியல் துறைக்குப் பாரதி வந்தது சாதாரண நிகழ்வாக இருக்கலாம். ஆனால் அதில் அசாதாரணமானவற்றை நிகழ்த்திக் காட்டினார். சுதேசமித்திரன், சக்ரவர்த்தினி, இந்தியா, பாலபாரதி (யங் இந்தியா), விஜயா, சூர்யோதயம், கர்மயோகி ஆகிய பல இதழ்களில் ஆசிரியராகவும் துணையாசிரியராகவும் பங்காற்றிய அவரை நாம் இதழாளராகக் கொண்டாடத் தவறிவிட்டோம். அப்பா, பாரதியை எண்ணும்போதெல்லாம் நாட்டின் முன்னேற்றத்தில் எனது



பங்கும் இடம்பெற வேண்டும் என்ற உந்துதல் ஏற்படுகின்றது.

பாரதி யானை மிதித்துச் சாகவில்லை, வறுமை மிதித்துச் செத்தார் என எங்கேயோ கவித்துவமாகப் படித்த நினைவு. இத்தனை வாழ்க்கைப் போராட்டத்திலும் உலகப் பார்வை கொண்டவராகப் பாரதி இருந்ததை நினைத்தால் வியப்பாய் இருக்கிறது. படைப்பாளர்களும் சிந்தனையாளர்களும் கொண்டாடப்படவேண்டும். இனி, எந்த ஓர் ஆளுமையையும் இத்தகைய நிலையில் நாம் விட்டுவிடக்கூடாது.

சர்வஜன மித்திரன், ஞானபாநு, காமன் வீல், கலைமகள், தேசபக்தன், கதாரத்னாகரம் போன்ற இதழ்களிலும் பாரதி தம் படைப்புகளை வெளியிட்டுள்ளார். இத்தனைக்கும் பாரதிக்கு எப்படி நேரம் இருந்ததோ? 'நேர மேலாண்மையே பாதி வெற்றி' என நீங்கள் கூறுவதை இப்பொழுதும் நினைவுகூர்கிறேன் அப்பா.

தம் பெயரையும் தம்மையும் முன்னிலைப்படுத்திக்கொள்ள விரும்பும் மனிதர்களுக்கிடையில் "தான்" என்ற ஒன்றை ஒழித்தவர் பாரதி. ஆங்கிலேயர்களின் கெடுபிடிகளால், விடுதலை வேட்கையூட்டும் கருத்துகள் மக்களைச் சென்றடைந்தால் போதும் என்று எண்ணி இளசை சுப்ரமணியன், சாவித்திரி, சி.சு. பாரதி, வேதாந்தி, நித்திய தீரர், உத்தமத் தேசாபிமானி, ஷெல்லிதாசன், காளிதாசன், சக்திதாசன், ரிஷிகுமாரன், காசி, சரஸ்வதி, பிஞ்சுக்காளிதாசன், கிருஷ்ணன் எனப் பல புனைபெயர்களில் எழுதியுள்ளார்.

கருத்துடன் காட்சியும் இடம்பெறுவது வாசகர்களைக் கவரும்தானே அப்பா. பாரதி அன்றே தாம் பணியாற்றிய இதழ்களில் கருத்துப்படங்களையும் கேலிச்சித்திரங்களையும் வெளியிட்டுள்ளார். தமிழ் இதழியல் துறையில் முதன்முதலாகக் கருத்துப் படங்களை அறிமுகப்படுத்தியவர் பாரதிதானே! லண்டன் பஞ்ச், இந்தி பஞ்ச் முதலிய கருத்துப்படங்களைக்கொண்ட இதழ்களைப் பார்த்த பாரதி, தமிழில் 'சித்திராவளி' என்ற பெயரில் கருத்துப்படங்களை மட்டுமே கொண்ட இதழ் ஒன்றையும் நடத்த விரும்பினார். அதைச் செயல்படுத்த முடியாவிட்டாலும் இந்தியா, விஜயா ஆகிய இரு இதழ்களிலும் கருத்துப்படங்களை வெளியிட்டுள்ளார்.

காட்டின் நெருக்கமான வழிகளில் யானை நடக்கும் தடத்தைப் பின்பற்றிப் பிற விலங்குகளும் அப்பாதையில் சுலபமாக நடக்கும். அதைப்போலவே இதழியலில் பாரதியின் தடம்பற்றி நடந்தவர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் பாரதியிடம் துணையாசிரியர்களாகப் பணியாற்றியவர்களான பி.பி. சுப்பையா, ஹரிஹரர், என். நாகசாமி, வ. ராமசாமி, பரலி. சு. நெல்லையப்பர், கனகலிங்கம் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

ஆங்கிலக் கலப்பின்றித் தமிழில் பேசுவதையே வியப்பாகப் பார்ப்பவர்களுக்கு இடையில் தமிழ் இதழ்களில் தமிழ் ஆண்டு, திங்கள், நாள் ஆகியவற்றை முதன்முதலாகக் குறித்தவர்

பாரதி. அவரது மூச்சும் பேச்சும் பணியும் தமிழின் வளர்ச்சியை முன்னிட்டே இருந்திருப்பது என்போன்ற இளையோருக்கு, இன்றைக்கு நினைத்தாலும் பெரும் ஊக்கமாக உள்ளது.

அப்பா, உங்களுக்கு ஒன்று தெரியுமா? பெண் விடுதலைக்குப் பாடுபட்ட பாரதி பெண்களுக்காகத் தமது 'சக்ரவர்த்தினி' இதழில் குறள் வெண்பா எழுதியுள்ளார். அக்குறள்,

*பெண்மை அறிவுயரப் பீடோங்கும் பெண்மைதான்*

*ஒண்மை யுறஓங்கும் உலகு.*

எடுத்துக்கொண்ட ஒவ்வொரு செயலிலும் தமது கொள்கையையும் உணர்வையும் வெளிப்படுத்தும் பண்பைப் பாரதியிடமிருந்து இளைய சமுதாயம் கற்றுக்கொள்ள வேண்டும்.

> **எந்த விஷயம் எழுதினாலும் சரி, ஒரு கதை அல்லது ஒரு தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம், எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியாகவே அமைந்துவிட்டால் நல்லது.**
>
> **பாரதியார் கட்டுரைகள்**

பாரதியைப் போன்றே பிற ஆளுமைகள் பற்றியும் நீங்கள் கூறியதுண்டு. பிற அறிஞர்களின் பலதுறை அறிவையும் கற்றுப் போற்ற வேண்டியது இன்றைய தேவை. எனக்கு ஓர் ஐயம் உண்டு. "இந்தியா" இதழைச் சிவப்பு வண்ணத்தாளில் ஏன் பாரதி வெளியிட்டார் அப்பா? அதை அறிந்து கொள்ள ஆவல். பாரதியைப் பற்றிக் கூடுதலாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பன்மடங்காகியுள்ளது. தங்களின் பதில் கடிதத்தில் எழுதுவீர்களென்று நம்புகிறேன். பாரதியைப் படித்ததில் அவரைப் பற்றிப் பகிர்ந்து கொள்வதிலேயே கவனமாக இருந்துவிட்டேன். அம்மாவும் தம்பியும் நலம்தானே? என் நினைவு முழுவதும் நம் வயல்வெளியும் கன்றுக்குட்டியும்தாம். உங்களுக்கு என் அன்பும் வணக்கமும் அப்பா.

தங்கள் அன்பு மகள்,
வானதி.



கருத்துப் படம் 25.5.1907

*11.10.2018, 20:10*

**அன்பு மகள் வானதிக்கு,**

உன் மின்னஞ்சல் கிடைக்கப்பெற்றேன். பெருமகிழ்வு கொண்டேன். நீயும் உன் நண்பர்களும் நலமாக உள்ளீர்களா? எவ்வளவு கடுமையான வேலைகள் இருப்பினும் காலை உணவைத் தவிர்க்காதே. இங்கு அம்மா, தம்பி, வயல்வெளி, உன் கன்றுக்குட்டி எல்லோரும் நலமே. பாரதி பற்றி அறிந்திருந்த செய்திகளை நீ பகிர்ந்திருந்தது மகிழ்ச்சி. நூல்களை வாசிப்பதை இன்றைய இளைய சமுதாயம் மறந்துபோனதோ என்றெண்ணிக் கவலை கொண்டிருந்தேன். உன் மின்னஞ்சலால் என் பெருங்கவலை தீர்ந்தது.

பாரதி இந்தியா இதழை ஏன் சிவப்பு வண்ணத்தாளில் வெளியிட்டார் எனக் கேட்டிருந்தாய் அல்லவா? சிவப்பு வண்ணம்

புரட்சியையும் விடுதலையையும் குறிப்பது என்பதால் அடிமைத்தளையில் இருந்து இந்தியாவை விடுவிக்க வேண்டும் என்ற எண்ணம் பாரதியின் இந்தியா இதழின் வண்ணத்திலும் வெளிப்பட்டது.

**பாரதியார் இறக்கும் பொழுதும் இதழாளராகவே இறந்தார்.**

இறந்து போவதற்கு முதல்நாள் இரவு, தூங்கச் செல்லும் முன்பு, நாளைக்கு,"அமானுல்லா கானைப் பற்றி ஒரு வியாசம் எழுதி ஆபிசுக்கு எடுத்துக்கொண்டு போகவேண்டும்" என்று இறுதியாகப் பாரதியார் கூறியுள்ளார்.

– 'பாரதியைப் பற்றி நண்பர்கள்',
ரா. அ. பத்மநாபன்.

வானதி, பாரதியின் புனைபெயர்களைப் பட்டியலிட்டிருந்தாய், நல்லது. பாரதி தம்மைப்போலவே பிறரையும் நேசிக்கும் பண்பாளர். அதனால்தான் தமக்கு மட்டுமல்ல தம் நண்பர்களுக்கும் ஆங்கிலேயர்களால் எந்தக் கெடுபிடியும் வந்துவிடக் கூடாது என்பதற்காக நண்பர்களின் பெயர்களையும் அவர்கள் கூடிப்பேசும் இடங்களையும் புனைபெயரில் பயன்படுத்தி வந்துள்ளார். இப்புனைபெயர்களை நகைச்சுவை உணர்வோடு வெளிப்படுத்தியிருப்பது எண்ணிஎண்ணி மகிழத்தக்கதாகும். மேலும், மற்றவர் பெயரை வெளிப்படுத்த விரும்பாத பாரதியின் இதழியல் அறத்தையும் இப்புனைபெயர்களில் காணலாம். தம் மனைவி செல்லம்மாவையும் கண்ணம்மா, வள்ளி என்ற புனைபெயர்களிலேயே குறிப்பிட்டிருப்பார்.

வானதி, தமிழ் இதழ்களில் தமிழ் மாதம், ஆண்டு குறிப்பிடும் முறையைக் கையாண்டதில் முன்னோடியாகப் பாரதி திகழ்ந்ததாக எழுதியிருந்தாய். அதைப்போலவே தமிழ் இதழ்களில் தமிழில் தலைப்பிடுவதற்கும் பாரதியே முன்னோடி. செய்திகளுக்கு ஆங்கிலத்தில் தலைப்பு எழுதிக் கீழே தமிழில் தலைப்பிடுவது அக்கால இதழ்களின் வழக்கம். தலைப்பிடலை 'மகுடமிடல்' என்றே பாரதியார் கூறுகின்றார். இந்தியா, சக்கரவர்த்தினி போன்ற இதழ்களில் 1905–07 காலப்பகுதியில் ஆங்கிலத் தலைப்பையும் கலந்து பயன்படுத்திய பாரதி, பிறகு ஆங்கிலத் தலைப்பு வைப்பதைக் கைவிட்டதோடு சுதேசமித்திரனில் அதைச் சாடியும் எழுதினார். மேலும், ஆங்கிலேயர்களின் கெடுபிடியால் பாரதி பாண்டிச்சேரி சென்றபோது இந்தியா இதழும் உடன் சென்றது வானதி.

எந்த நெருக்கடியான காலகட்டத்திலும் பாரதி தம் இதழியல் பணியைக் கைவிடவில்லை. இந்த இதழ்கள் எல்லாம் சிறப்பாகத் தொகுக்கப்பட்டு இன்றைக்கு நூலாக்கம் பெற்றுள்ளன. இதைப் போலவே பாரதியின் கடிதங்களும் கருத்துப்படங்களின் தொகுப்பும் நூலாக்கம் பெற்றுள்ளன. இவையெல்லாம் தமிழினத்தின் பேறு. இதழாளராகப் பாரதியை நீ அடையாளம் கண்டதைப்போலவே தமிழின் இன்னும் பல ஆளுமைகளையும் அடையாளம் கண்டு எழுத வேண்டும். உன் விசாலப் பார்வைக்கு என் பாராட்டுகள். உன் மின்னஞ்சல்களுக்காகக் காத்திருக்கிறேன் மகளே!

என்றும் உன்,
அன்பு அப்பா.



**கற்பவை கற்றபின்...**

பாரதி பணிபுரிந்த இதழ்களின் அட்டைப் படங்களையும் கருத்துப்படங்களையும் இணையத்தில் சேகரித்துப் படத் தொகுப்பு செய்யவும்.

## படைப்பாக்க உத்திகள்




### உவமை

ஒன்றை மற்றொன்றோடு ஒப்பிட்டுப் பார்ப்பது நம்மிடம் இயல்பாக அமைந்துள்ள பண்பாகும். தெரிந்தவற்றைக் கொண்டு தெரியாதவற்றை அறிந்துகொண்டு மனித அறிவு வளர்ந்து வந்திருக்கிறது. மொழி தோன்றிய அன்றே உவமையும் தோன்றியிருக்க வேண்டும். கருத்தைச் சொல்கையில் கேட்போர் மனத்தை ஈர்க்கும் வகையிலும் சொல்வதை எளிதில் உணரும் வகையிலும் கூற உவமைகளை (ஒப்பீடுகளை)ப் பயன்படுத்தினர்.

உவமை வினை(தொழில்), பயன், வடிவம்(மெய்), உரு(நிறம்)என்ற நான்கின் அடிப்படையில் தோன்றும் என்பார் தொல்காப்பியர்.

வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்

(தொல்காப்பியம் – 1222)

புலி போலப் பாய்ந்தான் - வினை (தொழில்)

மழை போலக் கொடுக்கும் கை - பயன்

துடி போலும் இடை - வடிவம் ( மெய் )

தளிர் போலும் மேனி - உரு (நிறம் )

கண்ணன் புலிபோலப் பாய்ந்தான் என்பதில் கண்ணன் - உவமேயம் (பொருள்), புலி – உவமானம் (உவமை), போல - உவம உருபு, பாய்தல் - பொதுத்தன்மை. இந்த நான்கு உறுப்புகள் உவமையை அமைக்கின்றன.

ஒன்றை விளக்கவும் தெளிவுபடுத்தவும் அழகுபடுத்தவும் உவமையே எளியதும் தொன்மை மிக்கதாகவும் உள்ளது. சங்கப்பாடல்களில் பெரும்பாலும் உவமை அணியே இடம்பெற்றுள்ளது. பிற அணிகள் குறைவாகவே இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தைத் தொகுத்தவர்கள் பாடல் ஆசிரியர்களின் பெயர் தெரியாதபோது அப்பாடலில் உள்ள உவமையைக் கொண்டே பெயர் சூட்டினர். செம்புலப்பெயல்நீரார், தேய்புரிபழங்கயிற்றினார், அணிலாடு முன்றிலார் என்பவை அப்படிப்பட்ட பெயர்கள்.

*"ஊர்க் குறுமாக்கள் வெண்கோடு கழாஅலின்*
*நீர்த்துறை படியும் பெருங்களிறு போல*
*இனியை பெரும எமக்கே மற்றதன்*
*துன்னரும் கடாஅம் போல*
*இன்னாய் பெரும!நின் ஒன்னா தோர்க்கே"*

(புறம்–94)

ஔவையார் அதியமானின் வெற்றிப் புகழையும் வீரச் சிறப்பையும் மிகச் சுருங்கிய அடிகளில் அழகாகப் புனைகிறார். குளத்தில் ஊர்ச்சிறு பிள்ளைகள் யானைமீது நீரை இறைத்தும் வெண்கொம்புகளைத் கழுவியும் விளையாடுவர். அவ் யானைக்கு மதம் பிடித்துவிட்டால் யாரும் பக்கத்தில் அணுக முடியாது. அதியமானும் அப்படிப்பட்டவன்தான். பரிசிலர்க்கு இனியன். பகைவர்க்கு இன்னாதவன். யானை பற்றிய உவமை இப்பாடலுக்கு உயிரூட்டுகிறது.

*கண்ணீரை நீ*
*துடைத்த போது*
*நட்சத்திரங்கள் துடைக்கப்பட்ட*
*வானம் போல்*
*உன் முகம்*
*இருண்டு போயிருந்தது......*

என்னும் புதுக்கவிதை அடிகளிலும் உவமை அமைந்துள்ளதைக் காணலாம்.

### வினை உவமை

*அவர்கள் மூளையில்*
*விதையைப் போல்*
*தூவப்பட வேண்டிய அறிவு*
*ஆணியைப்போல்*
*அறையப்படுகின்றது.*

### பயன் உவமை

*வறண்ட வாழ்வு*
*துளிர்க்க*
*மழைபோல் வந்தாய் நீ!*

### மெய் உவமை ( வடிவம்)

*சுருக்கிய*
*குடையைப் போலத்*
*தோன்றும்*
*அசோகமரம்.*

### உரு உவமை ( நிறம் )

*சோடிய விளக்காய்*
*மாலைநேரச் சூரியனின்*
*மஞ்சள் வெளிச்சம்*
*தெருவில் நிரம்பி வழிந்தது.*

ஆகிய கவிதைகளில் உவமை தோன்றும் களங்கள் வெளிப்பட்டுள்ளன.

## உருவகம்

ஒப்பீட்டுச் செறிவும் பொருள் அழுத்தமும் சிறக்க அமையும்பொழுது அது உருவகம் எனப்படுகிறது. உவம உருபுகளை விரித்துச் சொல்வதைவிடத் தொகுத்தும் சுருக்கியும் சொல்லுவதில் ஆற்றலும் அழகும் இனிமையும் இருப்பது தெரிந்திருக்கும். அந்தவகையில் உவமை, உவமைத்தொகையாகி உருவகமாக ஆயிற்று.

உவமையையும் உவமிக்கப்படும் பொருளையும் வேறுபடுத்தாமல் இரண்டும் ஒன்றே எனக்கூறுவது 'உருவகம்' ஆகும். உருவகத்தொடரில் உவமேயம் (உவமிக்கப்படும் பொருள்) முன்னும், உவமை (ஒப்பாகக் காட்டப்படும் பொருள்) பின்னுமாக அமையும்.

உவமையின் செறிவார்ந்த வடிவமே உருவகம். தாமரை போலும் முகம் என்ற உவமை செறிவூட்டப்பட்டு முகத்தாமரை என உருவகத்தை உருவாக்குகிறது. உவமையை விட உருவகம் ஆழமானது. உவமை அணியில் உவமானமும் உவமேயமும் வேறுவேறானவை என்ற எண்ணம் இருந்துகொண்டிருக்கும். உருவகத்தில் இரண்டும் ஒன்றே என்ற உணர்வு கிடைக்கிறது.

தீ போல் சினம் என்பதைச் சினத்தீ என்பார் பாரதியார். பாடல் முழுவதும் உருவகமாக அமைவதும் உண்டு.

*சுட்டும் விழிச்சுடர்தான் – கண்ணம்மா*
*சூரிய சந்திரரோ ?*
*வட்டக் கரியவிழி – கண்ணம்மா*
*வானக் கருமை கொல்லோ ?*
*பட்டுக் கருநீலப் புடவை*
*பதித்த நல்வயிரம்*
*நட்ட நடுநிசியில் – தெரியும்*
*நட்சத்திரங்களடி...*

– பாரதி (கண்ணம்மா என் காதலி)

என்னும் கவிதையில்தான் எத்தனை உருவகங்கள். பாஞ்சாலி சபதத்தில் அர்ச்சுனன் பாஞ்சாலியிடம் கதிரவன் ஒளிபட்டு விதவிதமான மாயம் கொள்ளும் மேகங்களுக்குக் கூறுகின்ற உருவகங்கள் உள்ளம் கவர்ந்தவை. தீயின் குழம்புகள், செழும்பொன் காய்ச்சிவிட்ட ஓடைகள், தங்கத்தீவுகள், நீலப்பொய்கைகள், தங்கத்தோணிகள், கருஞ்சிகரங்கள், தங்கத் திமிங்கலங்கள் என்றெல்லாம் உருவகிப்பது அழகூட்டுகிறது.

உருவகத்திலும் வினை உருவகம், பயன் உருவகம், வடிவ (மெய்) உருவகம், உரு (நிறம்) உருவகம் என்ற பகுப்பு உண்டு.

எண்ணவலை பின்னும் மூளைச் சிலந்தி... (சிந்தனை) – வினை

ஆவேசப் புயல்களாலும் அசைக்க முடியாத ஆகாசப் பூ... (கதிரவன்) – பயன்

நீலவயலின் நட்சத்திர மணிகள்... (வானமும் விண்மீன்களும்) - மெய்

மலைக்கிழவியின் நரைத்த கூந்தல்... (அருவி) - நிறம்

## உள்ளுறை உவமம்

கவிஞர் தான் கூறக்கருதிய பொருளை வெளிப்படையாகக் கூறாமல், அகமாந்தரின் மன உணர்வுகளைக் கருப்பொருள்கள் மூலம் உவமைப்படுத்துவதை உள்ளுறை உவமம் (உவமை) என்பர்.

உள்ளுறை உவமம் என்பது தமிழ் இலக்கியத்திற்கே உரிய ஒப்பற்ற நெறி. அன்பிற்கு ஆட்படும் தலைவன் தலைவியரின் எண்ணங்களைச் சொற்களால் வெளிப்படுத்தாமல் நாகரிகமாக மறைத்துக் கூறுவதற்காக அமைத்துக்கொள்ளும் வடிவமாகவும் இதைக் கருதுகின்றனர்.

இலக்கியங்களில் காணப்படும் கருப்பொருள்களின் காட்சி இயற்கைப் புனைந்துரைகளாக மட்டும் நின்றுவிடாமல், பாடல்களில் இடம்பெறும் மாந்தர்களின் உள்ளத்தெழும் உணர்வுகளின் குறிப்புப் பொருளாகவும் உள்ளுறை அமையும்.

ஓவியம், சிற்பம் முதலிய நுண்கலைகளிலும் குறிப்புப் பொருள்கள் உண்டு. ஆனால், அவை எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் விளங்கும் என்று கூறமுடியாது. கவிதைகளில் உள்ள குறிப்புப்பொருள் காலம் கடந்து நிற்கும் ஆற்றல் உடையது. எனவே கருப்பொருள் கொண்டு விளக்கப்படும் குறிப்புப் பொருளாகிய உள்ளுறை உவமம் தமிழிலக்கியத்தின் நேரிய, இனிய, நாகரிக வழியாகும்.

தோழிக்குச் சொல்வதுபோல் தலைவி, மறைந்து நிற்கும் தலைவனுக்குச் சொல்வதாகப் பெருங்குன்றூர் கிழார் பாடிய பாடல் ஒன்றில் உள்ளுறை உவமம் அமைந்துள்ளதைக் காண்போம்.

> "ஈயல் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த
> குறும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை
> தூங்குதோல் துதிய வள்ளுகிர் கதுவலின்
> பாம்புமதன் அழியும் பானாட் கங்குல்"
>
> – அகம். 8





தலைவன் பிறர் அறியாமல் தலைவியைச் சந்திக்க இரவு நேரத்தில் வருகிறான். அவ்வேளையில் பசியுடன் அலையும் கரடியொன்று ஈசல்கள் நிறைந்த புற்றில் கையைவிட்டுப் பார்க்கிறது. அந்த ஈசல் புற்றில் சுருண்டு படுத்திருந்த பாம்பினைக் கரடி அறியவில்லை. கரடியின் நகங்கள் பட்டு, பாம்பு வலியால் துடிக்கிறது. இங்குக் கரடியின் செயலும் பாம்பின் துன்பமும் காட்டப்படுகின்றன.

ஆனால், உள்ளே உறைந்திருக்கும் செய்தி வேறு. இரவு நேரத்தில் காட்டைக் கடந்துவரும் தலைவன் செயலால் தலைவி அஞ்சி வருந்துவதை இப்பாடல் தெரிவிக்கிறது. கரடி தலைவனுக்கும் பாம்பு தலைவிக்கும் குறியீடுகளாய் அமைந்து உள்ளுறை உவமம் உருவாகிறது. மேலும் இப்பாடலில் உள்ளுறை உவமத்துடன் இறைச்சிப் பொருளும் அமைந்துள்ளது.

**உள்ளுறை**

வினை, பயன் போன்ற அடிப்படைகளில் தோன்றும்.

குறியீடுகளைக் கொண்டு உருவாக்கப்படும்.

### இறைச்சி

உள்ளுறை போன்றே இறைச்சி என்பதும் அகப்பாடலில் வருகின்ற மற்றொரு உத்தி ஆகும். இதுவும் குறிப்புப்பொருளில்தான் வரும்.

**இறைச்சியில் பிறக்கும் பொருளுமா ருளவே**

**திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே**

(தொல். பொருள். 36)

இறுத்தல் என்றால் தங்குதல் எனப் பொருள்படும். உரிப்பொருளோடு நேரிடைத் தொடர்பில்லாத குறிப்புப் பொருளே இறைச்சி ஆகும். இது வடமொழியினர் குறிப்பிடுகிற தொனிக்கு இணையானது. தொனி அகப்பாடலிலும் புறப்பாடலிலும் வரும். ஆனால், இறைச்சி அகப்பாடலில் மட்டுமே வரும்.

*"நசைபெரிது உடையர் நல்கலும் நல்குவர்*
*பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்*
*அன்பின தோழிஅவர் சென்ற ஆறே"*

(குறுந்தொகை – 37)





## தெரிந்து தெளிவோம்

**கவிஞர், தெரியாத பொருள் ஒன்றைத் தெளிவாக விளக்குவதற்குத் தெரிந்த பொருளை உவமையாகப் பயன்படுத்துவர். வெளிப்படையாகப் பொருள்கூறினால் உவமை. உவமைக்குள் மற்றொரு பொருளைக் குறிப்பாக உணர்த்தினால் உள்ளுறை உவமை. குறிப்புப் பொருளுக்குள் மேலும் ஒரு குறிப்புப் பொருள் அமைந்திருக்குமானால் அதற்கு இறைச்சி என்று பெயர். உள்ளுறை உவமம் கவிதைப் பொருளோடு சேர்ந்து காணப்படுகிறது. இறைச்சிப் பொருள் கவிதைப்பொருளின் புறத்தே குறிப்புப் பொருளாய் வெளிப்படுகிறது.**

தலைவன் விரைவில் வருவான் எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள். தலைவன் செல்லும் வழியில் யானை தன் பெண்யானையின் பசியைப் போக்குவதற்காக 'யா' மரத்தின் பட்டையை உரித்து அதிலுள்ள ஈரச்சுவையைப் பருகச்செய்யும். இதுதான் பாடலின் கருத்து. ஆனால், இதில் சொல்லப்படாத குறிப்பு ஒன்றுள்ளது. தலைவன் இந்த அன்புக்காட்சியைப் பார்ப்பான்; உடனே திரும்பி வந்து தலைவியின் துன்பத்தைத் தீர்ப்பான் என்பது இதிலுள்ள குறிப்புப்பொருளாகும். இக்குறிப்புப்பொருளே இறைச்சி ஆகும். உரிப்பொருளின் புறத்தே நின்று அதன் கருத்தை மேலும் சிறப்பிக்கப் பயன்படுகிறது இறைச்சி.

சொல்லாமல் சொல்வதில்தான் கவிதை இன்பம் சிறக்கிறது. தலைவனின் செயலைக் கண்டிப்பதற்கும் எள்ளி நகையாடுவதற்கும் வருத்தத்தை வெளிப்படுத்தவும் திருமணத்தை வலியுறுத்தவும் இறைச்சி உத்தி பயன்படுகிறது.

"நீ விளையாடி மகிழும் இடத்தில் உள்ள இப்புன்னைமரம் உன்னைவிடச் சிறந்தது என்றும் உனக்குத் தங்கையாவாள் என்றும் நற்றாய் என்னிடம் கூறினாள். அதனால்,

இம்மரத்தடியில் உம்முடன் விளையாட நாணுகிறேன். ஏனெனில் தங்கை அருகிருக்க தலைவனுடன் பழகுவது முறையா?" என்று தலைவி தலைவனிடம் கூறினாள்.

*நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று*
*அன்னை கூறினள் புன்னையது சிறப்பே*
*அம்ம நாணுதும் நும்மொடு நகையே*

*(நற்றிணை – 172)*

இப்பாடலில், நாம் வேறு இடத்தில் சந்திக்கலாம் என்னும் குறிப்புப்பொருளும் தலைவியைத் தலைவன் விரைவில் மணந்துகொள்ள வேண்டும் என்னும் குறிப்புப் பொருளும் அமைந்துள்ளன. இக்குறிப்புப் பொருளே இறைச்சி ஆகும்.





கற்பவை கற்றபின்...

1. பூவை விட்டு இறங்காதே
   இறக்கை முறிந்த வண்ணத்துப் பூச்சியே
   உனக்காக எறும்புகள்.

2. மனிதர்க்கு உணவாவதை எண்ணி
   கண்ணீர் விட்டனவோ மீன்கள்
   கடல் நீரில் உப்பு.

– இக்கவிதைகள் படைப்பாக்க உத்திகளால் தனித்துவம் பெற்றுள்ளன – விளக்குக.

## இலக்கணத் தேர்ச்சி கொள்

1. உவமை எவ்வெவற்றின் அடிப்படையில் தோன்றும் ?

2. உவமைத்தொடர்களால் அழைக்கப்பெறும் சங்கப்புலவர்கள் பெயர்களைத் தொகுத்து அவற்றில் உள்ள உவமைகளைக் கண்டறிக.

3. ஒட்டுப் போடாத
   ஆகாயம் போல – இந்த
   உலகமும் ஒன்றேதான்... - இக்கவிதையில் பயின்றுவருவது
   அ) உவமை  ஆ) உருவகம்  இ) உள்ளுறை  ஈ) இறைச்சி

4. கீழ்க்காண்பனவற்றுள் 'இறைச்சி 'பற்றிய கூற்றைத் தேர்க.
   அ) குறியீடுகளைக் கொண்டு உருவாக்கப்படும்.
   ஆ) ஒப்பீட்டுச் செறிவும் பொருள் அழுத்தமும் சிறக்க அமையும்.
   இ) வினை, பயன், வடிவம், நிறம் ஆகிய நான்கின் அடிப்படையில் தோன்றும்.
   ஈ) உரிப்பொருளோடு நேரிடைத் தொடர்பில்லாத குறிப்புப் பொருள்.

5. உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் உள்ள வேறுபாட்டினைச் சான்றுகளுடன் ஆய்க.



# நம்மை அளப்போம்

28XGPQ



## பலவுள் தெரிக.

1. ஏடு, சுவடி, பொத்தகம், பனுவல் முதலிய சொற்கள் தரும் பொருள் --- என்பதாகும்

   அ) நூல்    ஆ) ஓலை    இ) எழுத்தாணி    ஈ) தாள்

2. சரியான விடையைத் தேர்க.

| | | |
|---|---|---|
| அ) கல்வி அழகே அழகு | - | 1) தொல்காப்பியச் சிறப்புப்பாயிர உரைப்பாடல் |
| ஆ) இளமையில் கல் | - | 2) திருமந்திரம் |
| இ) துணையாய் வருவது தூயநற்கல்வி | - | 3) ஆத்திசூடி |
| ஈ) பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல் | - | 4) திருக்குறள் |
| | - | 5) நாலடியார் |

   i) அ-2, ஆ-3, இ-4, ஈ-1    ii) அ-3, ஆ-4, இ-1 , ஈ-2

   iii) அ-5, ஆ-3, இ-2 , ஈ-1    iv) அ-4, ஆ-1, இ-2 , ஈ-5

3. 9 அடி சிற்றெல்லையும் 12 அடி பேரெல்லையும் கொண்ட நூல்

   அ) நற்றிணை    ஆ) குறுந்தொகை    இ) அகநானூறு    ஈ) ஐங்குறுநூறு

4. தொல்காப்பியத்திலுள்ள மொத்த இயல்களின் எண்ணிக்கை

   அ) 9    ஆ) 3    இ) 27    ஈ) 13

5. நிழல்போலத் தொடர்ந்தான் – இது எவ்வகை உவமை?

   அ) வினை    ஆ) பயன்    இ) வடிவம்    ஈ) உரு

## குறுவினா

1. சங்ககாலத்தில் தமிழ்மொழியின் நிலைபற்றி இராசமாணிக்கனாரின் கூற்று யாது?
2. உ.வே.சா. அவர்கள் பயின்ற கல்விமுறை குறித்துக் குறிப்பு வரைக.
3. இங்கே, ஐம்பதாண்டு வேம்பு<br>கோடையில் கொட்டும் பூக்களை<br>எண்ணச் சொல்கிறார்கள் – எண்ணச் சொல்கிறவர்கள் யார்? எண்ணுபவர்கள் யார்?
4. கொழுஞ்சோறு - புணர்ச்சி விதி கூறுக.
5. உவமை, உருவகம் – வேறுபடுத்துக.

## சிறுவினா

1. தமிழ் இலக்கியங்களில் கல்வி குறித்து நீங்கள் அறிந்த செய்திகளை அட்டவணைப்படுத்துக.
2. சமணப் பள்ளிகளும் பெண்கல்வியும் - குறிப்பு வரைக.

3. "ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனள் கொல்" - இடஞ் சுட்டிப் பொருள் விளக்குக.

4. சின்னதொரு துண்டைத்
திரும்பத் திரும்பக் கட்டி
அழகு பார்க்கிறாள் செல்ல மகள்
முந்தானையை இழுத்துப் போர்த்திக் கொள்கிறாள்
ஒரு குட்டி நாற்காலியே வீடாகிவிடுகிறது
துண்டைக் கட்டிக்கொண்டு தாயாகவும்
மாறிக்கொள்ள முடிகிறது அவளால்.
துண்டு ஒன்றுதான்...
அதுவே அவளது மகிழ்ச்சியும்
என் துக்கமும்

– இப்புதுக்கவிதையில் வெளிப்படும் கருத்தை ஆராய்ந்து எழுதுக.

5. உள்ளுறை உவமை, இறைச்சி – எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

## நெடுவினா

1. பௌத்தக் கல்வி , சமணக் கல்வி, மரபுவழிக் கல்வி முறைகளால் தமிழகக் கல்வி முறையில் ஏற்பட்ட பல்வேறு மாறுதல்களை விவரிக்க.
2. தலைவியின் இல்லறப் பாங்கினைப் பற்றிச் செவிலித்தாய் நற்றாயிடம் வியந்து கூறுவன யாவை?
3. பாரதியின் இதழாளர் முகம் குறித்து நீங்கள் அறிவன யாவை?




# மொழியை ஆள்வோம்

## சான்றோர் சித்திரம்

### ஜி.யு. போப்

செந்தமிழ்ச் செம்மல் 'டாக்டர் ஜி.யு. போப்', 1839ஆம் ஆண்டில், தென்னிந்தியாவுக்கு வந்தார். சென்னையை அடைந்த போப், 'சாந்தோம்' என்னும் இடத்தில் முதன்முதலாகத் தமிழ் உரையைப் படித்துச் சொற்பொழிவாற்றினார். ஆங்கிலேயரான அவரின் தமிழுரை கூடியிருந்த தமிழர்களுக்குப் பெருவியப்பளித்தது. தமிழ் மொழியைப் பயிலத்தொடங்கிய சிறிது காலத்திலேயே, ஐரோப்பியரும் படித்துப் பயன்பெற வேண்டுமென்ற எண்ணத்தில், தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இவரது திருக்குறள், திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்புகள் சிறப்பு வாய்ந்தவை.



ஜி.யு. போப்
(1820–1908)

போப் அவர்கள் தஞ்சாவூரில் வாழ்ந்தபோது, தமிழ் இலக்கிய இலக்கணங்களைத் தெளிவுற அறிந்தார். அப்போதுதான் தொல்காப்பியம், நன்னூல் முதலிய பேரிலக்கண நூல்களைப் பாடசாலை மாணவர் படிப்பது எளிதன்று என்பதைக் கண்டு, சிறிய தமிழ் இலக்கண நூல்கள் சிலவற்றை எழுதி வெளியிட்டார். ஐரோப்பியர், தமிழ் மொழியைக்

கற்றுக் கொள்வதற்குரிய நூல் ஒன்றை (Tamil Hand Book) எழுதினார். ஆங்கில மொழியில் எழுதப் பெற்றிருந்த தமிழ்நாட்டு வரலாற்றை, தமிழில் எழுதிப் பதிப்பித்தார். பள்ளிக்கூடங்களில் பயிலும் மாணவர்கள், தாய்மொழி வழியாகவே அனைத்துத் துறைக் கல்வியையும் பெறுதலே முறையானதென்றும், அத்தகைய கல்வியே பயனளிக்குமென்றும் போப் கருதினார். எழுபது ஆண்டுகள் தமிழோடு வாழ்ந்திருந்து, தமிழுக்கு நலம் செய்த பெரியார் ஜி.யு. போப் ஆவார்.

**கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக:**

1. இலக்கணக் குறிப்புத் தருக. அ) பிறந்தார் ஆ) அருளிய
2. திருக்குறளை ஐரோப்பியரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற எண்ணத்தில், அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் ஜி.யு. போப் – விடைக்கேற்ற வினாவை எழுதுக.
3. பதிப்பித்தார் – பகுபத உறுப்பிலக்கணம் தருக.
4. வல்லின மெய்களை இட்டும் நீக்கியும் எழுதுக.

   பள்ளிகூடங்களில் பயிலும் மாணவர்கள், தாய்மொழி வழியாகவே அனைத்துத் துறை கல்வியையும் பெறுதலே முறையானதென்றும், அத்தகையக் கல்வியேப் பயனளிக்குமென்றும் போப் கருதினார்.
5. பொருத்துக.

   அ) தொல்காப்பியம் - i) சங்க நூல்
   ஆ) திருக்குறள் - ii) பக்தி நூல்
   இ) புறநானூறு - iii) அற நூல்
   ஈ) திருவாசகம் - iv) இலக்கண நூல்

**செய்திக்குக் கீழுள்ள ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை மொழிபெயர்ப்புப் பகுதியிலிருந்து கண்டறிந்து எழுதுக.**

| | |
|---|---|
| The Chinese have no religious science. The practices of their religion (Buddhism) are derived from India. They believe that it is the Indians who brought idols to them and that the latter were their religious educators. In China and in India they believe in metempsychosis. The Chinese and Indians draw from the same religious principles different conclusions. In India medicine and philosophy are practiced. The Chinese practice medicine equally. Their chief treatment is cauterization. The Chinese practice astronomy but the Indians practice this science still more.<br><br>Written by Abu Zayd Al Sirafi, traveler, 10th century.<br><br>– Foreign notices of South India by K.A. Neelakanda sastri | சீனாவுக்கென்று தனியாக மதங்கள் இல்லை. இந்தியாவின் மதத்தை (பௌத்தம்) அவர்கள் கடைப்பிடிக்கின்றனர். சிலைகளைத் தங்களுக்கு அறிமுகம் செய்தோர் இந்தியர்கள் என்று நம்பும் சீனர்கள், இந்தியர்களே தங்களின் மத ஆசிரியர்கள் என்றும் கருதுகின்றனர். இந்தியாவிலும் சீனாவிலும் மரணத்துக்குப் பின்னான மறுபிறப்பை நம்புகின்றனர். ஒரே மத கோட்பாடு இருந்தாலும், சீனர்களும் இந்தியர்களும் வெவ்வேறு தீர்மானங்களுக்கு வருகிறார்கள்.<br><br>இந்தியாவில் மருத்துவமும், தத்துவமும் நடைமுறையில் உள்ளன. அவர்களுக்குச் சமமாகச் சீனர்களும் மருத்துவத்தை நடைமுறையில் வைத்திருக்கிறார்கள். 'தீய்த்தல்' அவர்களது பிரதான சிகிச்சை முறை. சீனர்கள் வானியல் சாஸ்திரப் பயிற்சியில் ஈடுபடுகிறார்கள். ஆனால் இந்த அறிவியலை இந்தியர்கள் இன்னும் அதிகமாய்ப் பயன்படுத்துன்றனர். |

Religion ------------------- Medicine ---------------

Philosophy ------------------- Science ---------------- Idols --------------

**கீழ்க்காணும் பத்தியில் உள்ள உருவகங்களையும் உவமைகளையும் பட்டியலிடுக. உருவகங்களை உவமைகளாக மாற்றுக. உவமைகளை எவ்வகை உவமைகள் என்று எழுதுக.**

*விழிச்சுடர் வாசலில் உட்கார்ந்திருந்தாள். அவளது எண்ணவலையில் மின்னல்களைப் போன்ற சொற்கள் தோன்றி மறைந்தன. அடுக்கிவைக்கப்படாத புத்தகங்களைப்போலக் குழம்பிய எண்ணங்களை ஒழுங்குபடுத்த நினைத்தாள். நேரம் நத்தையைப்போல மெதுவாக நகர்ந்தது. அண்ணாந்து பார்த்தாள். நீலப்பட்டு உடுத்தியதைப் போன்ற வானம் அம்மாவை நினைவூட்டியது. பூனைக்குட்டியைப்போல அம்மாவின் முந்தானைக்குள் சுருண்டுகொள்ள நினைத்தாள். பூனைக்குட்டியை மடியில் வைத்துக்கொண்டதைப்போல அம்மாவின் கதகதப்பை உணர்ந்தாள். பசிக்கயிற்றால் சுண்டிவிடப்பட்டவள், பூட்டியிருந்த வீட்டுக்கதவின்மேல் சாய்ந்தபடி அம்மாவின் வருகைக்காகக் காத்திருக்கத் தொடங்கினாள்.*

**கீழ்க்காணும் பத்திகளைப் படித்து மூன்றில் ஒரு பங்காகச் சுருக்கி எழுதுக.**

*கல்வி என்றால் என்ன? அது நூல்களைப் படிப்பதா? அல்லது அது பலவகையானதைக் குறித்த அறிவா? அதுவும் இல்லை. எத்தகைய பயிற்சியின்மூலம் மனத்தின் ஆற்றலும் அது வெளிப்படும் தன்மையும் கட்டுப்பாட்டிற்கு உட்படுத்தப்பட்டுப் பயன்தரும் வகையில் அமைகிறதோ, அந்தப் பயிற்சிதான் கல்வியாகும். அக்கல்வி வளர்ச்சிக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுதான் மனத்தை ஒருமுகப்படுத்தும் பயிற்சி. கல்வியின் நோக்கம் செய்திகளைப் பற்றிய அறிவைச் சேமிப்பதன்று. கல்வியின் நோக்கமே மனத்தை ஒருமுகப்படுத்துவதுதான். மனவொருமைப்பாடே கல்வியின் அடிப்படை.*

*எல்லோரும் தங்கள் அறிவு வளர்ச்சிக்கு அம்முறையைத்தான் பின்பற்றியாக வேண்டும். மனத்தை ஒருமுகப்படுத்தும் அளவுக்கு அறிவும் வளரும். இயற்கையால் மூடப்பட்டிருக்கும் அறிவுச்சுடரைத் திறப்பதற்கு இதுவொன்றே சிறந்த வழியாகும். மனிதன் தன் சக்தியை நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு வீண் செய்து விடுகிறான். இதனால்தான், அவன் அடிக்கடி தவறுகள் செய்கிறான். பண்புடைய மனத்தைப் பெற்றவன் ஒரு தவற்றையும் செய்ய மாட்டான்.*

*மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள முக்கிய வேறுபாடு மனத்தை ஒருமுகப்படுத்துவதில்தான் இருக்கிறது. எத்துறையிலும் வெற்றி பெறுவது, இதைப் பொறுத்துத்தான் அமைகிறது. இசை, ஓவியம், சிற்பம் முதலிய எல்லாக் கலைகளிலும் சிறப்பாகத் தேர்ச்சி பெறச் செய்வது மன ஒருமைப்பாடுதான். மேலும், உலகத்தின் புதிர்களை மூடி வைத்திருக்கும் கதவுகளைத் திறக்கக்கூடிய வலிமையை நாம் பெற வேண்டும். இவ்வலிமையை நமக்கு அளிக்கக்கூடியது மன ஒருமைப்பாடுதான். அதுவே கல்விக்கு அடிப்படையாகும். (சுவாமி விவேகானந்தர் - கல்வி)*

**இலக்கிய நயம் பாராட்டுக.**

*பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் – புவி*
*பேணி வளர்த்திடும் ஈசன்;*
*மண்ணுக்குள்ளே சிலமூடர் – நல்ல*
*மாதர் அறிவைக் கெடுத்தார்.*
*கண்கள் இரண்டினில் ஒன்றைக் – குத்தி*
*காட்சி கெடுத்திட லாமோ?*
*பெண்கள் அறிவை வளர்த்தால் – வைய*
*பேதமை யற்றிடும் காணீர்*

*– பாரதியார்*



## மொழியோடு விளையாடு

### எண்ணங்களை எழுத்தாக்குக.

### மறைந்திருக்கும் சொற்களைக் கண்டுபிடிக்க.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கோ | ஸா | ல் | சு | யா | ம் | மா | ண் | பு | பௌ |
| த் | ர | வ | வ | ஜ | ற | யா | ஜ | வி | த் |
| தா | த | னு | டி | வி | ன் | தி | வே | க் | த |
| ரி | ம | ப | ட் | டி | ம | ண் | ட | ப | ம் |
| ர் | ம் | க | ந | ற் | றி | ணை | ல் | போ | ட |
| னா | ண | ண | ம் | பா | ர் | ப் | ர | த | கூ |
| ட | க | க் | க | ல | யா | ப | ம் | னா | க் |
| லா | க் | கா | த | பா | தி | ள் | ண | ர் | ளை |
| ல் | ல | ய | த் | ர | ர | ளி | ம | கு | ள் |
| க | இ | ன் | பொ | தி | பா | ம் | ச | ர | பி |

### சொல்லைப் பிரித்தும் சேர்த்தும் தொடரமைக்க.

*(எ.கா.) கால்நடை*

*– கால்நடைகளை மேய்ச்சல் நிலத்திற்கு ஓட்டிக் கொண்டு போனார்கள்.*

*– சிறிய தொலைவைக் கடக்கக் கால் நடையாகச் செல்வது உடலுக்கு நலம் பயக்கும்.*

*1. பிண்ணாக்கு –*
*பிள்நாக்கு –*

*2. எட்டுவரை –*
*எள்துவரை –*

*3. அறிவில்லாதவன் –*
*அறிவில் ஆதவன் –*

*4. தங்கை –*
*தம் கை –*

*5. வைகை –*
*வை கை –*

*6. நஞ்சிருக்கும் –*
*நஞ்சு இருக்கும் –*

### செய்து கற்போம்

*அருகில் உள்ள மாற்றுத் திறனாளர் பள்ளிக்குக் களப்பயணம் சென்று, அம்மாணவர்கள் கற்கும் முறைகள் குறித்து எழுதுக.*



## நிற்க அதற்குத் தக

**கல்வி. நம்மைப் பண்படுத்த வேண்டும். நாம் பண்பட்டிருக்கிறோமா?**

| கல்வியின் விளைவு | என்ன செய்தீர்கள் / செய்வீர்கள் ? |
|---|---|
| பெரியவர்களுக்கு மதிப்பளித்தல் | |
| பகுத்தறிவுச் சிந்தனையை வளர்த்தல் | |
| பொறுமையைக் கடைப்பிடித்தல் | |
| தன்னை அறிதல், தன்னம்பிக்கை வளர்த்தல் | |
| சமத்துவம் பேணுதல் | |
| உயிர்களிடத்தில் அன்பு செலுத்துதல் | |

## கலைச்சொல் அறிவோம்

**கல்விக்குழு** – Education Committee, **உள்கட்டமைப்பு** – Infrastructure, **செம்மொழி** – Classical Language
**மூதாதையர்** – Ancestor, **மதிப்புக்கல்வி** – Value Education, **மன ஆற்றல்** – Mental Abilities

**தமிழகக் கல்வி – 1826ஆம் ஆண்டு நிலை**

| மாவட்டம் | பள்ளிகள் | | கல்லூரிகள் | | ம. தொகை |
|---|---|---|---|---|---|
| | எண். | மாணவர் | எண். | மாணவர் | |
| மலையாளம் | | | | | |
| மலபார் | 759 | 14153 | 1 | 75• | 907575 |
| தமிழ் | | | | | |
| வடஆற்காடு | 630 | 7326 | 69 | 418 | 892292 (577020) |
| தென் ஆற்காடு | 875 | 10523 | | | 455020 (420530) |
| செங்கல்பட்டு | 508 | 6845 | 51 | 398 | 363129 |
| தஞ்சாவூர் | 884 | 17582 | 109 | 769 | 901353 (382667) |
| திருச்சிராப்பள்ளி | 790 | 10331 | 9 | 131 | 481292 |
| மதுரை | 844 | 13781 | | • | 788196 |
| திருநெல்வேலி | 607 | 9377 | | | 564957 |
| கோயம்புத்தூர் | 763 | 8206 | 173 | 724 | 638199 |
| சேலம் | 333 | 4326 | | 324 | 1075985 |
| மதராஸ் | 322 | 5699 | | • | 462051 |
| தமிழ் பேசும் பகுதியில் மொத்த மாணவர்கள் | | 93996 | | | |
| மொத்தம் | 11575 | 157195 | 1094 | 5431 | 12850941 |

• மாறுபட்ட எண்ணிக்கை அடைப்புக்குறிக்குள் இடம்பெற்றுள்ளன.

1800களில் இந்தியாவில் கல்வி கற்றவர்களின் எண்ணிக்கையும் கற்றுத் தரப்பட்ட பாடங்களும் பெரும்பாலான விஷயங்களில் பல மடங்கு மேலானதாக இருந்திருக்கின்றன. பிரிட்டனில் அப்போது கற்றுத் தரப்பட்ட பாடங்களைவிட இந்தியாவில் கற்றுத்தரப்பட்ட பாடங்கள் உயர்வாக இருந்திருக்கின்றன. கல்விகற்கும் காலஅளவும் அதிகமாகவே இருந்திருக்கிறது. கற்றுக் கொடுக்கும் முறையும் மேலானதாக இருந்திருக்கிறது. இந்தியாவில் இருந்த வழிமுறையே இங்கிலாந்தில் அனைவருக்கும் கல்வியைக் கொண்டுவர வழிகாட்டி இருக்கிறது. ஆனால் அது இந்தியாவில் அதற்கு முன்பே பல நூற்றாண்டுகளாக இருந்திருக்கிறது.

பள்ளிக்கு வருபவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்த நிலையில் இருந்த 1822–25 காலகட்டத்தில்கூட மதராஸ் பிரஸிடென்ஸியில் படித்தவர்களின் எண்ணிக்கையானது 1800களில் இங்கிலாந்துப் பள்ளிகளோடு ஒப்பிடும்போது பலமடங்கு அதிகமாகவே இருந்திருக்கிறது. இந்தியாவில் பள்ளிச்சூழல் மிகவும் இயல்பானதாகவும் நெருக்கடிகள் இல்லாததாகவும் இருந்திருக்கிறது.

– தரம் பால்

இயல் 5

# நாளெல்லாம் வினைசெய்





## கற்றல் நோக்கங்கள்

- நாட்குறிப்பு இலக்கியத்தின் இன்றியமையாமையை உணர்ந்து நாட்குறிப்பு எழுதுதல்
- சமய நல்லிணக்கத்தினைப் போற்றிப் பின்பற்றுதல்
- வாழும் நகரின் வரலாற்றுச் சிறப்புகளைப் படைப்பின்வழி வெளிப்படுத்துதல்
- ஆசிரியப்பாவின் இலக்கணத்தைப் பாடல்கள்வழி அறிந்து எழுத முனைதல்
- சிறுகதை இலக்கியத்தின் மையக்கருத்தை உணர்ந்து திறனாய்வு செய்யும் திறன் பெறுதல்



## பாடப் பகுதி

உரைநடை உலகம்

இயல் 5

# ஆனந்தரங்கர் நாட்குறிப்பு




**நுழையும்முன்**

பன்மொழிப் புலமையும் பல்துறை ஆளுமையும் கொண்ட ஆனந்தரங்கர் புதுச்சேரி வரலாற்றினைப் பதிவு செய்தவர்களில் முதன்மையானவர். அவருடைய நாட்குறிப்பு, 18ஆம் நூற்றாண்டின் புதுவை வரலாற்றினை அறிந்துகொள்ள நமக்குக் கிடைத்த அரிய பெட்டகமாகும். புதுச்சேரியில் பிரெஞ்சு ஆட்சியின் எழுச்சியும் வீழ்ச்சியும் அவரின் வாழ்வோடு ஒன்றியிருப்பது ஓர் அரிய நிகழ்வு.

நாட்குறிப்பு என்பது தனிமனிதர் ஒருவரின் அன்றாட நிகழ்வுகளை அல்லது பணிகளைப் பதிவு செய்யும் ஏடாகும். இதனை ஆங்கிலத்தில் 'டைரி' என்று அழைப்பர். டைரியம் என்னும் இலத்தீன் சொல்லின் மூலமான 'டைஸ்' என்ற சொல்லில் இருந்து இச்சொல் உருவாயிற்று.

நாட்குறிப்புகளின் முன்னோடியாகத் திகழ்வது EPHEMERIDES என்று அழைக்கப் பெறும் கிரேக்கக் குறிப்பேடு ஆகும். இச்சொல் ஒரு நாளுக்கான முடிவு என்னும் பொருளைத் தரும். முகலாய மன்னர்களில் பாபர் காலம் முதல் நாட்குறிப்பு எழுதும் வழக்கம் இருந்து வந்துள்ளது. ஔரங்கசீப் ஆட்சிக்காலத்தில் நாட்குறிப்பு எழுதுவது தடை செய்யப்பட்டிருந்தது. 1498இல் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குக் கடல்வழியைக் கண்டுபிடித்த போர்ச்சுகீசிய மாலுமி வாஸ்கோடகாமா நாட்குறிப்பு எழுதும் பழக்கம் உள்ளவர். அவருடைய நாட்குறிப்புகள் ஆல்வாரோ வெல்லோ என்பவரால் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஆனந்தரங்கர் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் குழுமத்தின் மொழிபெயர்ப்பாளராகவும் துய்ப்ளே என்ற பிரெஞ்சு ஆளுநரின் மொழிபெயர்ப்பாளராகவும் பணியாற்றியவர். இவருடைய நாட்குறிப்புகள் 25 ஆண்டுகாலத் தென்னிந்திய வரலாற்றை வெளிப்படுத்துவதோடு. அக்காலத்திய பிரெஞ்சு அரசு பற்றி அறிய உதவும் சிறந்த வரலாற்று ஆவணமாகவும் இலக்கியமாகவும் திகழ்கின்றன.

**ஆனந்தரங்கர்**



பிரான்சுவா மர்த்தேனுக்குப் பிறகு கியோம் ஆந்த்ரே எபேர் புதுச்சேரியின் தலைமைப் பொறுப்பினை ஏற்றார். அவர்தம் தரகராக 'நைனியப்பர்' நியமிக்கப்பட்டார். நைனியப்பரின் மைத்துனர் திருவேங்கடம் என்பவரின் மகன் ஆனந்தரங்கர். இவர் 1709ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 30ஆம் நாள் சென்னையிலுள்ள பெரம்பூரில்

பிறந்தார். தம்முடைய பதினேழு வயதில் தந்தையை இழந்த ஆனந்தரங்கர், பிரெஞ்சு மேலதிகாரி 'அலனுவார்' உதவியால் பரங்கிப்பேட்டை நெசவுச்சாலைக்கும் சாயம் தோய்க்கும் கிடங்குக்கும் தலைவராக நியமிக்கப்பட்டார்.

உழைப்பும் உண்மையும் உறுதியும் மிக்க ஆனந்தரங்கர் பிரெஞ்சு ஆளுநர் 'துய்ப்ளே' காலத்தில் தலைமை மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றினார். வல்லாண்மை மிக்க பிரெஞ்சு ஆட்சியரின் நம்பிக்கைக்கு உரியவராக, மிகுந்த அரசியல் செல்வாக்குடன் திகழ்ந்தார்.

ஆனந்தரங்கர், தம்முடைய நாட்குறிப்பில் ஒவ்வொரு நாள் நிகழ்வுக்கும் ஆண்டு, திங்கள், நாள், கிழமை, அந்த நாளின் நேரம், நிகழ்விடம் ஆகியவற்றைக் குறிப்பிட்டே செய்திகளை எழுதியுள்ளார்.

## நாட்குறிப்பு வெளிப்படுத்தும் அரசியல் செய்திகள்

ஆனந்தரங்கர் நாட்குறிப்பு அக்கால கட்டங்களில் புதுவையிலும், தமிழகத்திலும், தென்னிந்தியாவிலும் நிகழ்ந்த பல்வேறு அரசியல் நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளது.



ஆனந்தரங்கரின் கையெழுத்து

10.09.1736ஆம் நாள் குறிப்பு பிரெஞ்சு ஆளுநர் டூமாஸ் நாணய அச்சடிப்பு உரிமையைப் பெற்றதை விளக்குகிறது. இந்த உரிமையைப் பெறுவதற்காக ஆளுநர் செலவழித்த பெருந்தொகையையும் ஆனந்தரங்கர் குறிப்பிட்டுள்ளார்.

பிரெஞ்சுக் கப்பல் தளபதி லெபூர்தொனே ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டில் இருந்த சென்னையை, 1746இல் கைப்பற்றியதையும் அதனால் சினமுற்ற ஆற்காடு நவாபு அன்வர்தீன்கானின் மூத்த மகன் மகபூஸ்கான் பிரெஞ்சு அரசை எதிர்த்துப் போரிட்டதையும் நேரில் கண்டு உரைப்பதுபோல் நாட்குறிப்பில் கூறியுள்ளார்.

தேவனாம்பட்டணத்தைக் கைப்பற்றுவதற்காக ஆங்கிலேயருடன் பிரெஞ்சு அரசு நடத்திய படையெடுப்பு, புகழ் பெற்ற ஆம்பூர் போர் பற்றிய செய்திகள், தஞ்சைக் கோட்டை மீது நடத்திய முற்றுகை, இராபர்ட் கிளைவின் படையெடுப்பு, ஆங்கிலேயர் புதுச்சேரியை முற்றுகை இட்டது முதலியவற்றையெல்லாம் வரலாற்று ஆசிரியர் போன்று நாட்குறிப்பில் விளக்கிக் கூறியுள்ளார்.

1758ஆம் ஆண்டு இறுதியில் சென்னைக் கோட்டை முற்றுகையை லல்லி என்பார் தொடங்கினார். கோட்டையை இடித்தும் வீடுகளைத் தரை மட்டமாக்கியும், மதிலை இடித்து அகழியைத் தூர்த்தும் கூடக் கோட்டையை லல்லியால் கைப்பற்ற



தெரியுமா?

உலக நாட்குறிப்பு இலக்கியத்தின் தந்தை என அழைக்கப்படுபவர் சாமுவேல் பெப்பிசு ஆவார். ஆங்கிலேயக் கடற்படையில் பணியாற்றிய அவர் 'இரண்டாம் சார்லஸ்' மன்னர் காலத்து நிகழ்வுகளை (1660 – 1669) நாட்குறிப்பாகப் பதிவு செய்துள்ளார். இவரைப் போலவே ஆனந்தரங்கரும் 06.09.1736 முதல் 11.01.1761வரை நாட்குறிப்பு எழுதியுள்ளார். இந்நாட்குறிப்பு இந்தியாவின் முதன்மையான நாட்குறிப்பாகும். இதனால், ஆனந்தரங்கர் இந்தியாவின் பெப்பிசு என்று அழைக்கப்படுகிறார்.

முடியவில்லை. அக்கோட்டையின் கவர்னர் 'மேஸ்தர் பிகட்' மகத்தான வெற்றி பெற்றார்.

### நாட்குறிப்பு வெளிப்படுத்தும் சமுதாயச் செய்திகள்

இவரின் நாட்குறிப்பு 18ஆம் நூற்றாண்டின் தமிழ்ச்சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. பண்பாடு, சமயம், சாதி, நீதி, வணிகம், நம்பிக்கைகள் முதலான பல்வேறு கூறுகள் அடங்கிய நிகழ்வுகளை ஆனந்தரங்கர் பதிவு செய்துள்ளார்.

'11.06.1739ஆம் நாள் புதுச்சேரியின் ஆளுநர் 'துய்மா' பிறப்பித்த ஆணையில், புதுச்சேரிப் பட்டணத்திற்குள்ளேயும், சம்பாக் கோவிலுக்குத் தெற்காகப் போகிற உப்பங்கழிப் பகுதியிலும் பட்டணத்தின் வீதிகள் எவ்விடத்திலும் காலைக்கடன் கழிப்பவர்களுக்கு ஆறு பணம் தண்டம் விதிக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மீறியவர்களிடமிருந்து பெறப்பட்ட தண்டத்தொகையில் இரண்டு பணம் பிடித்துக் கொடுப்பவருக்கும், மீதி நான்கு பணம் சாவடிக்கும் உரியது என்று அறிவிக்கப்பட்டது. இது தெரியாமல் பலரும் தண்டம் கட்டியதாக' ஆனந்தரங்கர் நாட்குறிப்பில் தெரிவித்துள்ளார்.

நீதி வழங்குதல், தண்டனை அளித்தல் முதலிய செய்திகளையும் இவருடைய நாட்குறிப்பு, பதிவு செய்துள்ளது. பல்வேறு காரணங்களுக்காக மரணதண்டனை வழங்கல், காதறுத்தல், சாட்டையடி, கிடங்கில் போடுதல் முதலிய தண்டனைகள் அக்காலத்தில் வழங்கப்பட்டுள்ளன.

**ஆனந்தரங்கர் நாட்குறிப்புக் குறித்து உ. வே. சா.**

தமிழ்த்தாய் நெருப்பினாலும் வெள்ளத்தினாலும் பாதிக்கப்பட்டாலும் அவளது ஆபரணங்கள் தொலைவில் உள்ள நகரமான பாரீசில் மிகவும் பாதுகாக்கப்பட்டுப் பராமரிக்கப்படுகின்றன.

அந்தக் காலத்தில் நடந்த செய்திகளையெல்லாம் முக்கியமானது, முக்கியமில்லாதது என்று கூடக் கவனிக்காமல், ஒன்று தவறாமல் சித்திரகுப்தன் எழுதி வரும் பதிவைப் போல நல்ல பாஷையில் அன்றாடம் விஸ்தாரமாக எழுதி வைத்திருக்கிறார், ஆனந்தரங்கர் .

– வ.வே.சு.

தொடர்ந்து வீடுகளில் திருடி வரும் கும்பல் ஒன்று பிடிபட்டபோது, அவர்களுள் தலைமைத் திருடனைக் கடைத்தெருவில் தூக்கில் தொங்கவிட்டனர். ஏனைய இருவருக்கும் இரண்டு காதுகளை அறுத்து, ஐம்பது கசையடிகளும் தரப்பட்டன.

ஆனந்தரங்கர் நாட்குறிப்பின் பெரும்பகுதி வணிகச் செய்திகளையே விவரித்துள்ளது. கணக்கு வரவுசெலவுப் பட்டியல் என அச்செய்திகள் நீண்டுள்ளன. ஆனந்தரங்கரும் பிறரும் வணிகத்திற்கு முதன்மை அளித்துள்ளதை உணரமுடிகிறது. பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கழகம் வணிகர் பலரைப் பங்குதாரராகக் கொண்ட கூட்டு நிறுவனம் ஆகும். தமது மூலதனத்திற்கு ஏற்ப ஒவ்வோராண்டும் எத்தனை கப்பல்களைக் கீழை நாடுகளுக்கு அனுப்புவது என்பது முன்பே திட்டமிடப்பட்டது. புதுச்சேரியில் இருந்து மணிலாவுக்குச் சென்ற கப்பலில் அழகப்பன் என்ற தமிழ் மாலுமி பணியாற்றியதையும் அவர் பதிவு செய்துள்ளார்.

ஐரோப்பாவிலிருந்து இந்தியாவை அடைய, கப்பல்களுக்கு ஆறு திங்கள் தேவைப்பட்டன. 11.11.1737அன்று பிரான்சிலிருந்து புறப்பட்ட கப்பல் 08.05.1738 அன்று புதுச்சேரியை அடைந்துள்ளது. கப்பல் வந்தவுடன் பீரங்கி முழங்குதல் வழக்கத்தில் இருந்துள்ளது.

ஒவ்வோர் ஆண்டும் துணிகளுக்காக வர்த்தகரிடமும் தரகரிடமும் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. சிலர், கழகத்தின்

வர்த்தகர் என்ற அங்கீகாரத்தைப் பெற்றிருந்தனர். துணிகள், வர்த்தகருக்கு விற்கப்பட்டபோது உரிய இரசீதுகள் அவர்களிடமிருந்து பெறப்பட்டுள்ளன. 100க்கு 320 என்ற விகிதத்தில் அவர்கள் ஆறு திங்களுக்குள் கழகத்திற்குப் பணத்தைச் செலுத்திவிடுவதாகவும் கையெழுத்திட்டுக் கொடுத்தனர். வணிகக் கழகத்தின் அதிகாரியான கொர்னே இவற்றைப் பெற்றுப் பாதுகாத்துள்ளார்.

புதுச்சேரியில் நாணயம் அச்சிடும் உரிமையை நிஜாமிடமிருந்து பிரெஞ்சு வணிகக் கழகம் பெற்றது. இதற்கான ஆணையை 10.09.1736 அன்று கனகராயர் பல்லக்கில் வைத்து ஊருக்குள் கொண்டு வந்தார். 21 பீரங்கிகள் முழங்கின. எட்டு மாற்றுக்குக் குறைவான வராக நாணயங்களை வைத்திருப்பது தண்டனைக்குரிய குற்றம் என்று பிரெஞ்சு மன்னரின் ஆணையின் பேரில் 1739ஆம் ஆண்டு மே திங்களில் அறிவிக்கப்பட்டது. பல்வேறுவிதமான வராகன்களை ஆனந்தரங்கர் குறிப்பிட்டுள்ளார். அவை புதுச்சேரிப் பிறை வராகன், சென்னைப் பட்டணத்து நட்சத்திர வராகன், வட்ட வராகன், பரங்கிப் பேட்டை வராகன், ஆரணி வராகன் முதலியன.

ஆனந்தரங்கர் காலத்தில் வழக்கில் இருந்த நாணயங்கள்

| | | |
|---|---|---|
| 480 காசு | – | ஒரு ரூபாய் |
| 60 காசு | – | 1 பணம் |
| 8 பணம் | – | 1 ரூபாய் |
| 24 பணம் | – | ஒரு வராகன் |
| 1 பொன் | – | 1/2 வராகன் |
| 1 வராகன் | – | 3 அல்லது 3.2 ரூபாய் |
| 1 மோகரி | – | 14 ரூபாய் மதிப்புள்ள தங்க நாணயம் |
| 1 சக்கரம் | – | 1/2 வராகனுக்கும் கூடுதல் மதிப்புள்ள தங்க நாணயம். |

## ஆனந்தரங்கரின் பதிவுகள்

1745ஆம் ஆண்டு 21ஆம் நாள் வியாழக்கிழமை மாலைப் பொழுதிலே வீசிய பெருங்காற்று புதுச்சேரியைச் சூறையாடியதனை,

"அஸ்தமித்த உடனே துவங்கிப் பெருங்காற்று அடித்தது. ஊரிலே உண்டான மரங்களெல்லாம் படுகாடாய் விழுந்து போனதும், வீடுகள் வெள்ளத்தில் முழுகிப்போய், அந்த வெள்ளத்திலே வீடுகளை அடித்துக்கொண்டு போனதும், மாடுகள், கன்றுகள், மனுஷர் செத்ததும் தெருவுக்குத்தெரு பிணநாற்றமாய் இருந்தது!" என்று மனம் நொந்து எழுதியுள்ளார்.

இப்பேரிடர் புதுச்சேரியில் நிகழ்ந்தபோது மக்கள் எல்லோரும் உணவும் நீரும் இன்றி வாடினர். அப்போது ஒழுகரையிலே கனகராயர், பெருஞ்சோறு அளித்துத் தமிழரின் இரக்கத்தையும் ஈரத்தையும் வெளிப்படுத்தியதை ஆனந்தரங்கர் பெருமிதத்துடன் பதிவு செய்துள்ளார்.

இங்கிலாந்திற்கும், பிரான்சுக்கும் இடையே போர் மூண்டதால் கப்பல் வணிகம் பெரிதும் தடைபட்டது. புதுச்சேரிக்குக் கப்பல்களின் வருகை 1745ஆம் ஆண்டில் தடைபட்டுப் பெரும் பொருளாதாரத் தட்டுப்பாடு தோன்றியது. புதுச்சேரி வணிகம் முழுவதும் வீழ்ந்தது. மக்கள் எல்லோரும் கப்பல் வருகையையே எதிர்பார்க்கத் தொடங்கினர். ஊழியர்களுக்கு ஊதியம் கொடுக்கக்கூடப் பணம் இல்லாமல் ஆளுநர் துன்பப்பட்டார். இந்நிலையில் 08.06.1746ஆம் நாள் லெபூர்தொனேவின் ஒன்பது கப்பல்கள் புதுவைக்கு வந்தன. இது பற்றி ஆனந்தரங்கர், "கப்பல்கள் வருகின்ற செய்தியைக் கேட்டதும் நஷ்டப்பட்ட திரவியம் மீண்டும் கிடைத்தாற்போலவும், மரணமுற்ற உறவினர்கள் உயிர்பெற்று எழுந்து வந்தது போலவும், நீண்டநாள் தவமிருந்து புத்திரப் பாக்கியம் கிட்டினாற்போலவும், தேவாமிர்தத்தைச் சுவைத்தது போலவும்

மக்கள் சந்தோஷித்தார்கள்; அதைக் காகிதத்தில் எழுத முடியாது" என்று நாட்குறிப்பில் பதிவு செய்துள்ளார்.

## ஆனந்தரங்கரின் இறுதிக்கால நாட்குறிப்புகள்

அவருடைய இறுதிக்கால நாட்குறிப்புகள் ஆங்கிலேயர் புதுச்சேரி மீது நிகழ்த்திய முற்றுகையையும் புதுச்சேரியின் வீழ்ச்சியையும் மிக விரிவாகப் பேசியுள்ளன. 1760 பிப்ரவரியில் புதுச்சேரியைத் தாக்க ஆங்கிலேயக் கப்பல்கள் வந்துகொண்டிருந்ததாகவும் செஞ்சியைச் சுற்றியுள்ள பகுதிகளை வென்று ஆங்கிலத் தளபதி, புதுச்சேரியை நெருங்கிவிட்டதாகவும் தகவல் வந்துள்ளது. ஆங்கிலேயப் படைகள் சாரம் வரை வந்துவிட்டதைப் பொதுமக்கள் வேடிக்கை பார்த்தனர். குண்டு சாலையை

புதுச்சேரியின் ஆளுநராக லெறி இருந்த காலத்தில், புதுச்சேரியின் இராணுவ அரசியல் செய்திகளை முகலாயருக்கும், ஆங்கிலேயருக்கும் கூறுவதாக ஆனந்தரங்கர் மீது பழி சுமத்தப்பட்டது.

அப்போது ஆளுநரிடம், ஆனந்தரங்கர், "இப்பட்டணத்தில் உம்முடைய அதிகாரம்தான் இறுதியானது. அநீதியாகவும் உண்மைக்கு மாறாகவும் நடக்க நீர் விரும்பினால் உம்மைத் தடுக்கும் அதிகாரம் ஒருவருக்கும் இல்லை. ஆகவே, என்னைக் காவலில் போட விரும்பினால் உடனே செய்யலாம். பிற தண்டனையும் வழங்கலாம். இரண்டு சல்லிகூட நான் செலுத்த மாட்டேன். சிறையில் அடைத்துவிடுவீர் எனப் பயந்து ஒரு வாரத்தில் பணம் தருவேன் என்று நீர் கருத வேண்டாம்.

( தொகுதி 11 பக். 81–84 )

**ஆனந்தரங்கர் பற்றிய நூல்கள் சில**

1. ஆனந்தரங்கன் கோவை – தியாகராய தேசிகர்
2. ஆனந்தரங்கன் பிள்ளைத்தமிழ் – புலவரேறு அரிமதி தென்னகன்
3. வானம் வசப்படும் – பிரபஞ்சன்

ஆங்கிலேயர் பிடித்ததும் புதுச்சேரி நகரில் பீதி நிலவியது. தேவனாம்பட்டணத்தில் மேலும் மேலும் துருப்புகளை ஆங்கிலேயக் கப்பல்கள் இறக்கின. புதுச்சேரியைச் சுற்றியுள்ள பகுதிகள் அனைத்தையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றினர்.

புதுச்சேரியின் இவ்வாறான சூழ்நிலையில் ஏற்கெனவே நோய்வாய்ப்பட்டு இருந்த ஆனந்தரங்கரின் உடல்நிலை மிகவும் மோசமடைந்தது. 12.01.1761 திங்கள் கிழமை ஐந்து நாழிகைக்குப் பட்டணத்தின் மீது பீரங்கிக் குண்டுகள் விழுந்துகொண்டிருந்த வேளையில் ஆனந்தரங்கர் மறைந்தார்.

1736ஆம் ஆண்டு செப்டம்பர் 6ஆம் நாள் தொடங்கி ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகாலத் தென்னிந்திய வரலாற்றைப் பதிவுசெய்த ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு 1761ஆம் ஆண்டு ஜனவரி 11ஆம் நாளோடு முடிவடைந்துள்ளது. புதுச்சேரியின் முற்றுகை பற்றிய முடிவினைக் கூறாமலேயே நாட்குறிப்பும் முடிந்துள்ளது. ஆனந்தரங்கர் நாட்குறிப்பு 12 தொகுதிகளாக வெளிவந்துள்ளது. இது வெளிப்படுத்தும் விரிவான செய்திகளை, வரலாற்றறிஞர் தம் குறிப்புரைகளின் துணையோடு கண்டறிய முடியும்.



**கற்பவை கற்றபின்...**

1. உங்களது ஒரு வாரத்திய நிகழ்வுகளை நாட்குறிப்பில் பதிவு செய்க.
2. ஆனந்தரங்கர் நாட்குறிப்பு விவரிக்கும் நிகழ்வுகளைக் காலக்கோட்டில் அமைத்துக் காட்டுக.

# சீறாப்புராணம்




**நுழையும்முன்**

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய இறைவனின் திருத்தூதர் நபிகள் நாயகத்தின் சீரிய வரலாற்று இலக்கியம் சீறாப்புராணம். இது தமிழ் இலக்கிய மரபுகளைப் பின்பற்றி எழுதப்பட்ட தலைசிறந்த இசுலாமிய இலக்கியமாகும். பகையும் வறுமையும் நோயும் தீண்டாப் பொருள்வளம் நிறைந்த மதீனா நகரில் தானத்திலும் தவத்திலும் சிறந்து விளங்கிய மக்கள் தீன் நெறியை வளர்த்த பாங்கினைச் செலவியற் காண்டம் (ஹிஜிறத்துக் காண்டம்) காட்சிப்படுத்துகிறது.

## ஹிஜிறத்துக் காண்டம் – மதீனம் புக்க படலம்

*ஹிஜிறத் என்ற அரபுச் சொல்லுக்கு இடம் பெயர்தல் என்பது பொருள். மக்கா நகரத்தின் குறைசி இன மக்கள், நபிகள் நாயகத்திற்குக் கொடுமைகள் பல செய்தனர். நபிகள் நாயகம் மக்காவை விட்டு, மதீனாவிற்கு வரவேண்டுமென்று மதீனா மக்கள் அழைத்தனர். அந்த அழைப்பை நபிகள் நாயகம் ஏற்றார். இசுலாமிய அறநெறிகளை வளர்க்க மக்காவை விட்டு மதீனா நகரத்திற்குத் தம் துணைவரான அபூபக்கர் முதலானோருடன், முல்லை நிலத்தையும் குறிஞ்சி நிலத்தையும் கடந்து மதீனா நகரத்தில் நுழைந்தார். அந்நகரினைக் காப்பிய இலக்கண நெறி நின்று உமறுப்புலவர் புகழ்ந்து பாடியுள்ளார்.*

### *மாளிகை நகரம்*

*வடவரை பொருவென மலிந்த மேனிலைக்*
*கடலென ஒலித்ததா வணத்தின் கம்பலைப்*
*புடவியை அளந்தன போன்று வீதிகள்*
*இடனற நெருங்கின மாடம் எங்குமே*

### *கொடை நகரம்*

*கலைவலார் மறையவர் கருத்தில் எண்ணிய(து)*
*இலையெனா(து) அரும்பொருள் யாவும் எய்தலால்*
*மலைவிலா(து) அருளிய வள்ளி யோரினும்*
*தொலைவிலாப் பெரும்புகழ் படைத்த தொன்னகர்*

### *பொன்னகரம்*

*தோரணத் தொடும் கொடிக்காடு துன்னலால்*
*வாரண மதமலை மலிந்து நிற்றலால்*
*காரணத் தொடும்வர வாறு காணலால்*
*பூரணப் புவியெனப் பொலிந்த பொன்னகர்*

### *மனைநகரம்*

*சுதையொளி மேனிலை துலங்கித் தோன்றலால்*
*புதுமலர்த் தெருத்தொறும் சிந்திப் பொங்கலால்*
*எதிர்பணிந்(து) இடுவிருந்து இனிதின் நல்கலால்*
*வதுவையின் மனையென இருந்த மாநகர்*

### *மாநகரம்*

*உறுபகை வறுமைநோய் ஓட ஓட்டிமேல்*
*குறைவற மனுமுறைக் கோன்(ந) டாத்திநீள்*
*நிறைதரு பெரும்புகழ் நிலைநி றுத்தியோர்*
*மறுவிலாத அரசென இருந்த மாநகர்*

### *ஒண்ணகரம்*

*தெண்டிரை ஆரமும் பூணுஞ் சிந்தலால்*
*விண்டுபற் பலபல மொழிவி ளம்பலால்*
*மண்டிய வளந்தலை மயங்க லால்மது*
*உண்டவர் எனமதர்த்(து) இருந்த ஒண்ணகர்*

செம்மை நகரம்

*தானமும் ஒழுக்கமும் தவமும் ஈகையும்*
*மானமும் பூத்ததிண் மறனும் வெற்றியும்*
*ஊனமில் ஊக்கமும் ஒளிரக் காய்த்தநல்*
*தீன்எனுஞ் செல்வமே பழுத்த சேணகர்.*

– உமறுப்புலவர்

## சொல்லும் பொருளும்

வரை – மலை; கம்பலை – பேரொலி; புடவி – உலகம்; எய்தல் – அடைதல்; துன்ன – நெருங்கிய; வாரணம் – யானை; பூரணம் – நிறைவு; நல்கல் – அளித்தல்; வதுவை – திருமணம்; கோன் – அரசன்; மறுவிலா – குற்றம் இல்லாத; தெண்டிரை – தெள்ளிய நீரலை; விண்டு – திறந்து; மண்டிய – நிறைந்த; தீன் – மார்க்கம்.

## பாடலின் பொருள்

மேருமலையினைப்போன்று மதீனா நகரின் மேன்மாடங்கள் உயர்ந்திருந்தன. அங்காடிகள் நிறைந்த தெருக்களில் எழுந்த ஒலி, பெருங்கடலொலிபோன்று இருந்தது. மதீனா நகரின் வீதிகள் பேரண்டத்தைப்போன்று பரந்திருந்தன. அந்நகரில் சிறிதும் இடைவெளியின்றி மாளிகைகள் நெருக்கமாக அமைந்திருந்தன.

பழைமையான மதீனா நகரம், கலைஞர்களும் மறையவர்களும் நினைக்கின்ற பொருள் வளத்தைக் கொண்டது. அங்கு எந்தப் பொருளும் இல்லையென்று சொல்வதற்கு இல்லை. அப்படிக் கேட்போர்க்கும் அப்பொருளை எல்லாம் வாரி வழங்கும் வள்ளன்மை கொண்டவர்கள் உண்டு. அவ்வள்ளல்களைவிடக் குறையாத பெரும் புகழைப் பெற்றது மதீனா நகரம்.

கட்டப்பட்ட தோரணங்களும் கொடிகளும் காடுபோல நெருங்கியிருந்தன; மலைபோன்ற யானைகள் அவ்விடத்தில் நிறைந்திருந்தன; வழிகள் யாவும் ஒழுங்குடன் காணப்பட்டன; இவற்றால் முழுமை பெற்ற பூமியைப்போல மதீனா நகரம் பொன்னெனப் பொலிந்தது.

மதீனா நகரத்தில் வெண்சுண்ணச் சாந்தினைக்கொண்ட மாளிகைகள் ஒளிர்ந்தன; வீதிகளில் புதிய பூக்கள் சிந்திக் கிடந்தன; ஒவ்வொருவரையும் அழைத்துக் கொடுக்கும் விருந்தானது இனிமையுடன் இருந்தது; இதனால் அந்நகர் திருமண வீட்டைப்போன்று பொலிவுடன் காட்சியளித்தது.

பகை, வறுமை, நோய் முதலியவை மதீனா நகரிலிருந்து ஓடிவிட்டன. மேலும், குறைவில்லாத மானுட அறத்தை உடைய செங்கோல் ஆட்சி நடத்திப் பெரும்புகழ் பெற்ற சிறந்த அரசைப்போலப் பொலிவுடன் இருந்தது மதீனா நகரம்.

அலைகடலானது முத்தையும் பல்வேறு அணிகளையும் சிதறுவதுபோல மதீனா நகரில் மக்கள் பல்வேறு மொழிகளைப் பேசுகின்றனர். தேன் அருந்தியவர்கள் மயங்குவதுபோலப் பலவாறான பொருள் வளத்தால் ஒளி பெற்றுத் திகழ்கிறது மதீனா நகரம்.

மதீனா நகரில் தானம், ஒழுக்கம், தவம், ஈகை, மானம் முதலியன பூத்திருந்தன; திண்ணிய வலிமை நல்கும் வெற்றி, அவ்வெற்றியைத் தருகின்ற குறைவற்ற ஊக்கம் முதலியன காய்த்திருந்தன. தீன் எனும் செல்வம் பழுத்திருந்த செம்மை பொருந்திய நகராக மதீனா இருந்தது.

## இலக்கணக்குறிப்பு

மலிந்த, மண்டிய, பூத்த, பொலிந்த – பெயரெச்சங்கள்; இடன் – ஈற்றுப் போலி; பெரும்புகழ், தெண்டிரை – பண்புத்தொகைகள்;

பொன்னகர் – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை;

மாநகர், உறுபகை – உரிச்சொல் தொடர்கள்;

தானமும் ஒழுக்கமும், தவமும் ஈகையும் – எண்ணும்மைகள்

## பகுபத உறுப்பிலக்கணம்

**மலிந்த – மலி + த்(ந்) + த் + அ**

மலி – பகுதி, த் – சந்தி, 'ந்' ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

**நெருங்கின – நெருங்கு + (இ) ன் + அ**

நெருங்கு – பகுதி, (இ) ன் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

## புணர்ச்சி விதி

**அரும்பொருள் – அருமை + பொருள்**

ஈறு போதல் – அரு + பொருள்

இனமிகல் – அரும்பொருள்.

**மனையென – மனை + என**

இ ஈ ஐ வழி யவ்வும் – மனை + ய் + என

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – மனையென.

### நூல்வெளி



இசுலாமியத் தமிழ் இலக்கியத்தில் முதன்மையானதாக விளங்குவது சீறாப்புராணம். 'சீறா' என்பது சீறத் என்னும் அரபுச் சொல்லின் திரிபு ஆகும். இதற்கு 'வாழ்க்கை' என்பது பொருள். புராணம் – வரலாறு. நபிகள் பெருமானின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறும் இந்நூலை வள்ளல் சீதக்காதியின் வேண்டுகோளுக்கு இணங்க உமறுப்புலவர் இயற்றினார் என்பர். இந்நூல் விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக்காண்டம், ஹிஜிறத்துக் காண்டம் என்னும் மூன்று காண்டங்களையும் 92 படலங்களையும் 5027 விருத்தப் பாடல்களையும் கொண்டது. நூலை முடிப்பதற்கு முன்பே உமறுப்புலவர் இயற்கை எய்திய காரணத்தால் 'பனி அகமது மரைக்காயர்' இதன் தொடர்ச்சியாக சின்னச்சீறா என்ற நூலைப் படைத்துள்ளார். உமறுப்புலவர் எட்டயபுரத்தின் அரசவைப் புலவர். கடிகை முத்துப் புலவரின் மாணவர். நபிகள் நாயகத்தின் மீது முதுமொழிமாலை என்ற நூலையும் இயற்றியுள்ளார். வள்ளல் சீதக்காதி, அபுல்காசிம் மரைக்காயர் ஆகியோர் இவரை ஆதரித்தனர்.

### கற்பவை கற்றபின்...



1. நீங்கள் வாழும் நகரத்தின் வரலாற்றுச் சிறப்புகளைத் திரட்டிப் படக் கட்டுரையாக்குக.
2. 'நான் பார்க்க விரும்பும் இடம்' என்னும் தலைப்பில் உங்களின் கருத்துகளைக் காரணங்களுடன் பதிவுசெய்க.

கவிதைப்பேழை

இயல் 5

# அகநானூறு




**நுழையும்முன்**

சொல்ல வந்த கருத்தை 'உள்ளுறை', 'இறைச்சி' வழியாக உரைப்பது அகநானூற்றுப்பாடல்களின் சிறப்பு. அதனைப் பாடும் கவிஞர் சொல்லின் பயன்பாடு குறையாமல் கூறுவதோடு மரபின் நாகரிகம் குறைவுபடாது கூறவும் வேண்டும். அன்பை மறைக்கவும் வேண்டும்; பயன்பாடு கருதி வெளிப்படுத்தவும் வேண்டும். தலைவியைத் தலைவன் சந்திக்க வேண்டிய குறியிடத்தைப் பற்றிய குறிப்பைப் பொதிந்து வெளியிடுவது தோழியின் பொறுப்பு.

*பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ!*
*இருண்டுஉயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்,*
*போர்ப்புஉறு முரசின் இரங்கி, முறைபுரிந்து*
*அறன் நெறி பிழையாத் திறன்அறி மன்னர்*
*அருஞ்சமத்து எதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்*
*கழித்துஎறி வாளின், நளிப்பன விளங்கும்*
*மின்னுடைக் கருவியை ஆகி, நாளும்*
*கொன்னே செய்தியோ, அரவம்? பொன்னென*
*மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்*
*பொலிந்த ஆயமொடு காண்தக இயலித்*
*தழலை வாங்கியும் தட்டை ஓப்பியும்,*
*அழலேர் செயலை அம்தழை அசைஇயும்,*
*குறமகள் காக்கும் ஏனல்*
*புறமும் தருதியோ? வாழிய, மழையே!*

*(அகம்.188)*

*– வீரை வெளியன் தித்தனார்*



**திணை :** குறிஞ்சி

**துறை:** இரவில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

**சொல்லும் பொருளும்**

கொண்மூ – மேகம்; விசும்பு – வானம்; சமம் – போர்; அரவம் – ஆரவாரம்; ஆயம் – சுற்றம்; தழலை, தட்டை – பறவைகளை ஓட்டும் கருவிகள்.

*பெருங்கடலில் நீர்முகக்கும் முகிலே சொல்நீ*
*வான்வெளி இருளப் பரபரப்பாய் வரும்உலா*
*போர்க்கள முரசாய்ப் பொழுதுக்கும் இடிமுழக்கம்*
*அறநெறியாளன் ஆட்சியில் காக்கும்*
*போர்க்கள வீரர் வாள்போல் பொறிமின்னல்*
*நாளும் இவையெல்லாம் சும்மா நடிப்பா?*
*அல்லது*
*ஆளை அலைக்கழிக்கும் மழை ஆரவாரமா?*
*பொன்பூ வேங்கை மாலை தொடுத்து*
*அணியும் தோழியர் ஆயத்துடன் இருப்பாள்*
*அழல்எரி அசோகஇலை ஆடை உடுப்பாள்*
*காண்பதற்கு இனிய ஒயிலுடன் நடப்பாள்*
*தழலை தட்டைக் கருவியொலி எழுப்பிப்*
*பறவைகள் விரட்டித் தினைப்புனம் காப்பாள்*
*தலைவியின் காட்டிலும் பொழிவாயா?*
*இல்லை*
*தப்பிப் பிழைத்துப் போய்விடுவாயா?*

## பாடலின் பொருள்

தலைவனுக்குக் குறியிடம் சொல்லும் தோழி மேகத்திடம் சொல்வதுபோல சொல்கிறாள்: "பெருங்கடலில் நீரை முகந்துகொண்டு செல்லும் மேகக் கூட்டமே! வானம் இருளும்படி உலாவுகிறாய். போர் முரசம்போல முழங்குகிறாய். முறைமை தெரிந்து அறநெறி பிழையாமல் திறமையுடன் ஆளும் அரசனின் போர்க்களத்தில் திறமை மிக்க போர்வீரன் சுழற்றும் வாள்போல மின்னுகிறாய். முழக்கமும் மின்னலுமாக நாள்தோறும் வெற்று ஆரவாரம் செய்கிறாயா அல்லது மழை பொழிவாயா? பொன்னென மலர்ந்த வேங்கை மலரைக் கட்டி அணிந்துகொண்டிருக்கும் தோழியர் ஆயத்தோடு மெல்ல மெல்ல நடந்து குறமகள் தினைப்புனம் காப்பாள். தழலை, தட்டை ஆகிய கருவிகளில் ஒலியெழுப்பிப் பறவைகளை ஓட்டிக்கொண்டு காப்பாள். அவள் அசோக இலைகளால் தழையாடை அணிந்திருப்பாள். குறமகள் அப்படித் தினைப்புனம் காக்கும் பகுதியிலும் நீ மழை பொழிவாயா? "

தலைவி தினைப்புனம் காக்கும் இடத்துக்குத் தலைவன் வரலாம் என்பது குறிப்பு. இது இறைச்சிப் பொருள்.

## இலக்கணக்குறிப்பு

**வளைஇ, அசைஇ – சொல்லிசை அளபெடைகள்; அறன், திறன் – ஈற்றுப்போலிகள்; பிழையா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; அருஞ்சமம் – பண்புத்தொகை; எறிவாள்– வினைத்தொகை.**

### நூல்வெளி



அகநானூறு 145 புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு. இது, களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை என்று மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்நூலுக்கு நெடுந்தொகை நானூறு என்ற பெயரும் உண்டு. இந்நூலின் தொகுப்பு முறையில் ஓர் ஒழுங்கு உண்டு. வீரை வெளியன் தித்தனார் பாடிய ஒரேயொரு பாடல் பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளது.

| திணை | பாடல் வரிசை | எண்ணிக்கை |
|---|---|---|
| பாலை | 1, 3, 5, 7... | 200 |
| குறிஞ்சி | 2, 8, 12, 18... | 80 |
| முல்லை | 4, 14, 24, 34... | 40 |
| மருதம் | 6, 16, 26, 36... | 40 |
| நெய்தல் | 10, 20, 30, 40... | 40 |

### கற்பவை கற்றபின்...



சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள கூற்றுமுறைகள் குறித்து வகுப்பறையில் கலந்துரையாடுக.

## முதற்பொருளும் உரிப்பொருளும்

| திணை | நிலம் | பெரும்பொழுது | சிறுபொழுது | உரிப்பொருள் |
|---|---|---|---|---|
| குறிஞ்சி | மலையும் மலை சார்ந்த நிலமும் | கூதிர், முன்பனி | யாமம் | புணர்தலும் புணர்தல் நிமித்தமும் |
| முல்லை | காடும் காடு சார்ந்த நிலமும் | கார் | மாலை | இருத்தலும் இருத்தல் நிமித்தமும் |
| மருதம் | வயலும் வயல் சார்ந்த நிலமும் | ஆறு பெரும் பொழுதுகளும் | வைகறை | ஊடலும் ஊடல் நிமித்தமும் |
| நெய்தல் | கடலும் கடல் சார்ந்த நிலமும் | ஆறு பெரும் பொழுதுகளும் | எற்பாடு | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |
| பாலை | சுரமும் சுரம் சார்ந்த நிலமும் | இளவேனில் முதுவேனில் | நண்பகல் | பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

## கருப்பொருள்

| நிலம் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | சேயோன் | மாயோன் | வேந்தன் | வருணன் | கொற்றவை |
| மக்கள் | பொருப்பன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி, | குறும்பொறை, நாடன், தோன்றல், கிழத்தி | ஊரன், மகிழ்நன், மனைவி | சேர்ப்பன், புலம்பன் | விடலை, மீளி, எயிற்றி |
| | குறவர், குறத்தியர், கானவர் | இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் | உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் |
| புள் | கிளி, மயில் | காட்டுக்கோழி | நாரை, மகன்றில், அன்னம் | கடற்காகம் | புறா, பருந்து, கழுகு |
| விலங்கு | சிங்கம், புலி, கரடி, யானை | மான், முயல் | எருமை, நீர்நாய் | சுறாமீன் | செந்நாய் |
| ஊர் | சிறுகுடி | பாடி | பேரூர், மூதூர் | பாக்கம், பட்டினம் | குறும்பு |
| நீர் | அருவி நீர், சுனைநீர் | குறுஞ்சுனை கானாறு | ஆற்று நீர், கிணற்று நீர், குளத்து நீர் | உவர்நீர்க் கேணி, சுவர் நீர்க்கேணி | நீரில்லாக் குழி, கிணறு |
| பூ | வேங்கை, காந்தள், குறிஞ்சி | முல்லை, பிடவம், தோன்றி | தாமரை, குவளை | நெய்தல், தாழை | குராஅம்பூ, மராம்பூ |
| மரம் | சந்தனம், தேக்கு, அகில், மூங்கில் | கொன்றை, காயா, குருந்தம் | மருதம், வஞ்சி, காஞ்சி | புன்னை, ஞாழல் | பாலை, உழிஞை, ஓமை |
| உணவு | மலைநெல், தினை, மூங்கிலரிசி | வரகு, சாமை, முதிரை | செந்நெல், வெண்ணெல் | உப்பும் மீனும் விற்றுப் பெற்ற பொருள் | வழியிற் பறித்த பொருள் |
| பறை | தொண்டகப் பறை | ஏறுகோட்பறை | நெல்லரிகிணை, மணமுழவு | மீன்கோட் பறை, நாவாய்ப் பம்பை | துடி |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லையாழ் | மருதயாழ் | விளரியாழ் | பாலையாழ் |
| பண் | குறிஞ்சிப் பண் | சாதாரிப் பண் | மருதப் பண் | செவ்வழிப்பண் | பஞ்சுரப்பண் |
| தொழில் | வெறியாடல், மலை நெல் விதைத்தல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல் | சாமை, வரகு விதைத்தல், களைகட்டல், அரிதல் | வயலில் களை கட்டல், நெல்லரிதல் | உப்பு உண்டாக்கல், விற்றல், மீன் பிடித்தல், உணக்கல் | போர் செய்தல் சூறையாடல் |

விரிவானம்

இயல் 5

# பிம்பம்




– பிரபஞ்சன்

**நுழையும்முன்**

நம் ஒவ்வொருவரிடமும் தனித்தன்மைகள், விருப்பங்கள் உள்ளன. ஆயினும், பிறரோடு உறவு கொள்கையில் அவர்களுக்கேற்றவாறு நம்மை மறைத்து, மாற்றிக் கொள்கிறோம்; வளைந்து கொடுக்கிறோம். ஆனால் நம் மனசாட்சி நம்முடைய இயல்பை நினைவூட்டிக்கொண்டே இருக்கும். நாம் மற்றவர்களுக்காக அவர்களுக்கேற்ற முகமூடிகளை மாட்டிக்கொள்கிறோம். முகம் மாற்றி முகம் மாற்றி நம் உண்மை முகத்தையே இழந்து அடையாளமற்ற தன்மையில் காட்சியளிக்கிறோம். மாற்றி மாற்றி நாம் காட்டுகிற பிம்பம் பற்றி நம் மனசாட்சியைக் கேள்வி கேட்பதோடு நம் அசலையும் நினைவூட்டுகிறது இச்சிறுகதை.

கதவைத் தட்டும் சத்தம் கேட்டதும், தட்டுவது யார் என்று எனக்குத் துல்லியமாகவே விளங்கியது. அதுதான் இந்த நேரத்தில் இப்படியெல்லாம் வரும். அதற்கு நேரம் காலம் கிடையாது. கிடைப்பதில்லை என்பதுவுமே ஒரு காரணம். என்னுடனே வளர்ந்து நானாகவே ஆகிவிட்ட அதுக்கு என்மேல் இருக்கும் சுவாதீனமும் ஒரு காரணம்.

கதவைத் திறந்தேன். அது உள்ளே வந்தது. உட்காரச் சொன்னேன். அது உட்காரவில்லை. என் வீடு நாலு கைத் தாழ்வாரமும் நடுவே பெரிய 'ப' மாதிரி ஒரு வாசலும் கொண்ட அடக்கமான வீடு. நான் என் சாய்வு நாற்காலியைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்த இடம் நடுவாசலில்தான். அங்கிருந்து அண்ணாந்து பார்த்தால் வானம் என் மீது வழியும். காற்று கைவீசி வரும். மனசால் நான் வாழும் வாழ்க்கை ஸ்தாபிதமாவதும், சூல்கொள்வதும் கலைவதும் இங்கே இந்த இடத்தில்தான். என்னைத் தேடி சம்பாஷணைக்காக வருவோரை நான் இந்த இடத்தில்தான் உட்கார்த்தி வைப்பது. என்னை இம்சிக்க வருவோர்க்கும் இதுவே இடம்.

வந்தது வீட்டைச் சுற்றி நோட்டம் விட்டது. இடதுகைத் தாழ்வாரச் சுவரும் நேர்ச் சுவரும் சந்திக்கும் இடத்தில் அதன் பார்வை வந்து நிலைகுத்தியதை நானும் உணர்ந்து அந்த இடத்தைப் பார்த்தேன். நான் மென்று, சுவைத்துத் துப்பிய எலும்புத் துண்டுகள் வாரப்படாமலும் கூட்டிக் குப்பையில் எறியப்படாமலும் அந்த மூலையில் குவிந்திருந்தன. சாரை சாரையாக எறும்புகள் தம் உணவை அதில் கண்டு, தம் சக்திக்குட்பட்ட விகிதங்களில் எடுத்துக்கொண்டு போவதையும் ஈக்கள் கும்பலாய்ச் சுள்ளென்று பறந்து மொய்ப்பதையும் நான் பார்த்தேன்.

குறுநகையோடு அது என்னைப் பார்த்தது. எனக்கு வெட்கமாகப் போச்சு. யாரும் கண்டுகொள்ளும் முன்னமேயே அந்த எலும்புகளை வாரிக் குப்பைத் தொட்டியில் கொட்டியிருக்கலாம். அல்லது பூ வேலை செய்த அழகிய துணியை அதன்மேல் போர்த்தி, மறைத்து, அவ்விடத்தைப் பார்ப்போர், கண்ணுக்கும் புலனுக்கும் புலப்படா வண்ணம் மறைத்து இருக்கலாம். இரண்டில் ஒன்றையும் நான் செய்யவில்லை. ஏன் செய்யாமல் போனோம் என்று வருந்தினேன்.

படுத்தவாறே அண்ணாந்து பார்க்கிறேன். வானம் கறுப்பாக. நிலவு எங்கோ எதிலோ மறைந்து கொண்டாற்போல. ஆனாலும் காற்று வீசி மேகம் கலைய...

இடக்கைத் தாழ்வாரத்தில் ஓர் அறை இருக்கிறது. அது 'நான் இதன் உள்ளே நுழைகிறேன்' என்றது. அனுமதி கேட்பது

மாதிரி இல்லை. தேவையில்லை என்று நினைத்தது போலும். உள்ளே போனது, எதையோ கையில் எடுத்துக்கொண்டு வெளியே வந்து என்முன் நின்றது.

'இது என்ன?' - அது கேட்டது.

இது அப்பாவின் சட்டை. முக்கால் கைச்சட்டை என் அளவுக்கு ரொம்பத் தொள தொளவென்று இருக்கும். என்போல் மூவர் ஒரே சமயத்தில் நுழையலாம். அவ்வளவு பெரிசு. பல இடங்களில் துணி நைந்து கிழிஞ்சு போச்சு. பல இடங்களில் ஒட்டு. கொஞ்சம் வேகமாகவோ முரட்டுத்தனமாகவோ கையாண்டால் கிழியும் என்பது நிச்சயம். துவைக்காததால் எழும் துர்வாசம் இதனோடயே ஐக்கியமாகிப் போச்சு.

'இதை இன்னமும் எதற்கு வைத்திருக்கிறாய்..' அது கேட்டது.

'உபயோகப்படுத்தத்தான்' – நான் சொன்னேன்.

'இதை இன்னுமா உபயோகப் படுத்துகிறாய்?' அதன் புருவம் மேலே உயர்ந்தது.

'ஆம். பல சமயங்களில், சந்தர்ப்பங்களில்'

'உன்னிடம் உன் சட்டை இருக்குமே...?

'இருக்கும்... அதோடு இதையும் அவ்வப்போது உபயோகப் படுத்திக்கொள்கிறேன்.'

அது பதில் வேண்டியது. சொல்லலாமா என்று யோசித்தேன். சொல்லத்தான் வேண்டும். அதுக்கு என்னில் அறியாதது எதுவுமே இல்லை என்கிற பயம் என்னை உசுப்பியது. மேலும், அதன் சம்பாஷணை என் சுகம், அதன் சிநேகிதமான பார்வை, எனக்குத் தூண்டில். எனவே, என் பதில் எனக்கு ஆறுதல். சொன்னேன்.

'என் சட்டை என்னை முழுதும் போர்த்தாதபோது அப்பாவின் சட்டையை நான் அணிந்துகொள்வேன். அவர் சட்டையைப் போட்டுக்கொண்டால் என் குளிரை அது போக்கி விடுகிறது. அதோடு பல சமயங்களில் என்னைப் பாதுகாக்கிறது. இது எனக்குக் கவசம். இதுவே எனக்கு அம்பு. இதுவே எனக்கு அட்சயப் பாத்திரம். இப்போது தைத்த என் சட்டை புது மோஸ்தர். இது சமயங்களில் என்னை இறுக்கிக்கொள்கிறது. உனக்குத் தெரியாதா...'

நான் பரிதாபத்தோடு சொன்னதை அது பார்த்திருக்கக் கூடும். 'சரி' என்று அறைக்குள் சென்று சட்டையைப் போட்டுவிட்டு வெளியே வந்தது.

என் வாசலை மிகவும் ஒட்டி இரண்டு அறைகள். முதல் அறைக்குள் அது என் அனுமதி இன்றியே போய் எதையோ தூக்கிக் கொண்டு வெளியே வந்தது.

'இது என்ன?'

இது ஒரு கவுன்... ஏழெட்டு வயசுப் பெண் குழந்தைகள் கவுன். கால மறைவாலும் மாற்றத்தாலும் பழசாகித் தேய்ந்து, நைந்து போய் இருந்தது. இன்றைய குழந்தைகள் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத வினோதமான தையலும் பூவளையுமாய் மிளிர்ந்தது.

'இந்தக் கவுன் உனக்கெதுக்கு?'

'சமயா சமயங்களில் போட்டுப் பார்த்துக் கொள்ளத்தான்.'

'இதைக் கூடவா நீ போடுகிறாய்?'

'சொல்றேனே... சமயா சமயங்கள்.'

'இதைப் போட்டுக்கொண்டு எப்படி வெளியே வருகிறாய். ஒரு ஆண் மகனாய் எப்படி வெளியே பிரவேசிக்கிறாய்...'

'இந்த கவுன் அம்மா எனக்காக வாங்கியது. அம்மாவின் உதரத்தில் பெண் குழந்தைகள் ஜனிக்கவில்லை.'

ஜனித்தாலும் லபிக்கவில்லை. ஆணாகப் பிறந்த என்னை அம்மா தன் ஆசைக்காக இந்த கவுனுக்குள் அடக்கி வளர்த்தாள். காலப்போக்கில் வளர்ந்து வந்த என் பௌருஷ ஆகிருதியை இந்தச் சின்ன கவுனுக்குள் நுழைத்து நுழைத்து அதில் வெற்றி கண்டாள். நான் சாமானியத்தில் அதனுட்கொள்ளவில்லை. எனினும், எப்படியோ என்னை நுழைப்பதில்

அவள் திருப்தி கொண்டாள். பதின்வயதின் இளைஞனாகிய நான் அந்த கவுனில் நூதனமாக எனக்கே காட்சி கொடுத்தேன்.

அம்மா என்னை ஒரு போட்டோ எடுத்தாள். ஒரு பிரதியை இந்த கவுனின் மார்பில் ஒட்டினாள். மற்றொன்றைத் தன் தலைக்கு மேல் ஒட்டி வைத்தாள். இந்தப் போட்டோவுக்குள் பொட்டு வைத்த நான். கண்ணுக்கு அழகாக மை தீட்டிய நான். கோண வகிடெடுத்து அழகாக ஜடை பின்னி, ஜடை முனையில் பூ வைத்த நான். வளையல், கொலுசு, ஒட்டியாணம் அணிந்த நான்.

நான் குனியும்போது மார்பில் போட்டோ என்னைக் குத்தி நிமிர்த்தியது. நான் நிமிரும்போது தலைக்குமேல் போட்டோ. என்னைக் குட்டித் தாழ்ந்தது.

என் கவுன் ஓட்டுக்குள் என் புலன்கள் நுழைக்கும்- ஆமை நான்.

முதலில் இது கஷ்டமாக இருந்தது – வாஸ்தவமாய். பின் இது சவுகரியமாய்ப் போச்சு- எதார்த்தமாய். இப்போது இதுவே சுகமாய்ப் போச்சு- நிர்ப்பந்தமாய்.

என்னை, ஆம்பிளையான என்னை, இந்த வனாந்தரங்களில் மேயும் எந்த துஷ்ட மிருகங்களாவது சீண்ட ஓட்டுக்குள் என்னை நுழைத்துக்கொள்வேன். அவை என்னைப் புரட்டிப்பார்க்கும். வெறும் ஓடென்று விலகிப்போகும்.

'அதற்குத்தான் ..... அதனால்தான்'

நான் சொன்னேன்.

நான் நிறுத்தினேன். அது என்னையே பார்த்துக் கொண்டிருந்தது. என்னைப் பார்த்துச் சிரித்தது...

'ஆகவே, நீ தப்பிக்கிறாய்.....' என்றது அது.

'ஆம்.. எல்லாமே எதனிடமிருந்தோ தப்புதல்தான்...'

அது மௌனமாக அறைக்குள் சென்றது. மீண்டும் அறைக்குள்ளிருந்து எதையோ வாரிக் கொண்டு வந்து என்முன் போட்டது.



மேலே வானமூட்டம் இன்னும் விலகவில்லை. கறுப்பு இன்னும் வெளுக்கவில்லை. நிலா காணோம். எந்தச் சேற்றில் போய்ப் புதைந்துவிட்டதோ – பாவம்.

படபடவென்று சரியும் ஒலி என் புலனைத் தாக்க என்முன் குவிந்த பொருள்களை நான் பார்த்தேன்.

'இதெல்லாம் என்ன' – அது.

'இவை என் முகங்கள்' – நான்.

'இத்தனை முகங்கள் உனக்கெதுக்கு?'

'இவை என் பார்வைகள். தேவைகள். சிரமமில்லாமலும், சிரமத்தோடும் சமயா சந்தர்ப்பங்களில் நான் சேர்ந்து அணிந்து கொள்ளும் முகங்கள் இவை.'

'நீ என்னையும் உன்னையும் ஏமாற்றுகிறாய்...' என்று வருத்தத்தோடு அது சொன்னது.

'ஆம்... என்னை நானும் உன்னை நீயும் முறை மாறி என்னை நீயும் உன்னை நானும் ஏமாற்றிக் கொள்ளுதலே நம் விஸ்தரிப்புகள், நம் ஆக்கங்கள், நம் விகசிப்புகள்.'

நான் குனிந்து பார்த்தேன். என் காலடியில் பலவிதமான முகங்கள் பல வர்ணங்களில், பல அளவுகளில் பல கோணங்களில் சிதறிக்

கிடந்தன. சிலது ரொம்பப் பழசு; சிலது ரொம்பப் புதுசு. சிலது பழசாகி இருந்து புதுசானவை. சிலது புதுசாகி இருந்து பழசானவை.

இவற்றில் இடமும் காலமும் மாறிச் சூழ்நிலை தவறி, பாத்திரம் தவறி, முகத்தை மாட்டிக் கொள்ள மாட்டாயா? என்று அது சந்தேகித்தது.

'மாறாது. மாட்டேன். என்முன் முகம் காட்டும் முகங்கள் என் கண்ணாடி. எந்த முகத்தை நான் என் கண்ணாடியில் பார்க்கிறேனோ, அதைப்போலவே இருக்கும் என் முகச் சிதறல்களில் ஒன்றை எடுத்துப் போட்டுக்கொள்வேன். ஏ-க்கு ஏ-யும் இசட்டுக்கு இசட்டும் தான்.'

'அம்மாவிடம் கூடவா...'

'ஆட்சேபமில்லாமல். அவளிடம் என்னிடம் காட்ட ஒரு முகம் இருந்தது. அதேபோல் என்னிடமும் ஒன்று இருக்கிறது.'

'மனைவியிடம் கூடவா...'

'நீ சுவாரசியமாகவே கேட்கிறாய். வாஸ்தவத்தில் இந்த இடத்துக்குப் பல முகங்கள் எனக்குத் தேவை. அவளிடமும் பலமுகம் தயாராகவே தயார் நிலையில் இருந்தன. அதோடு , அவள் என்னின் இருமையையும் கண்டவள். கொண்டவள். நானும் கண்டவன். துய்த்தவன். வினாடிக்கு ஒருமுறை முகம் மாற்றும் சித்தி இதுக்குத் தேவை. அச்சித்தி எனக்கு லபித்திருந்தது. ஆனால், ஒரு விசயம். என் முகத்தை அவளுமோ அவள் முகத்தை நானுமோ இன்றுவரை பார்த்ததில்லை. இவை போலிகள் என்று எங்கள் இருவருக்கும் தெரியும். வாய்விட்டுச் சொல்லிக் கொள்வதில்லை.'

நான் காலடியில் குவிந்திருந்த பல முகங்களில் ஏழெட்டைக் காலால் தள்ளி, 'இவை என் சிநேகிதர்களுக்காக' என்றேன். சிலவற்றைத் தள்ளி , 'இவை என் தெருவுக்காக, ஊருக்காக' என்றேன்.

அது நின்றபடியே நின்றிருந்தது. பார்த்தபடியே கண்டிருந்தது.

'நீ இப்போது போட்டிருப்பதுகூட....'

'பொய்தான். போலிதான்.'

நான் என் முகத்தைக் கழட்டிக் கீழே போட்டேன்.

'இது' அது என் முகத்தைக் காட்டியது.

'இதுவும்' – நான்.

நிமிஷங்கள் கரைந்து நீராயின. அப்புறம் கொஞ்சநாழி அது இருந்தது.

'போய் வருகிறேன்' என்றது.

'சரி..'

கதவைத் திறந்து விடை கொடுத்தேன். வெளியே சென்றது, சற்று நின்றது.

'கடைசியாக ஒன்று. உன்னுடைய முகம்தான் எது...'

'எனக்கு முகமே கிடையாது...'

நான் சொல்லி, கதவைத் தாழிட்டுக் கொண்டேன்.

## நூல்வெளி



புதுச்சேரியைச் சேர்ந்த பிரபஞ்சனின் இயற்பெயர் வைத்தியலிங்கம். இவர் சிறுகதை, புதினம், நாடகம், கட்டுரை என்று இலக்கியத்தின் பல்வேறு தளங்களில் இயங்கி வருபவர். 1995இல் இவருடைய வரலாற்றுப் புதினமான 'வானம் வசப்படும்' சாகித்திய அகாதெமி விருது பெற்றது. இவருடைய படைப்புகள் தெலுங்கு, கன்னடம், இந்தி, பிரெஞ்சு, ஆங்கிலம், ஜெர்மன் உள்ளிட்ட மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

## கற்பவை கற்றபின்...



"இந்த உலகமே நாடகமேடை; அதில் அனைத்து ஆண்களும் பெண்களும் வெறும் நடிகர்களே. ஒவ்வொருவருக்கும் அறிமுகமும் முடிவும் உண்டு. ஒருவருக்கே பல வேடங்களும் உண்டு." – ஷேக்ஸ்பியரின் இக்கருத்தை 'பிம்பம்' சிறுகதையுடன் ஒப்பிட்டுப் பார்க்க.

இனிக்கும் இலக்கணம்

இயல் 5

# பா இயற்றப் பழகலாம்




## ஆசிரியப்பா

பா, செய்யுள், தூக்கு, கவி, கவிதை, பாட்டு ஆகிய சொற்கள் ஒரே பொருளில் வருவன. எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, ஆகியன செய்யுள் உறுப்புகளாகும். பாக்களின் வகைகள், அப்பாக்களின் ஓசைகள், பாக்கள் இயற்றுவதற்குரிய விதிமுறைகள் முதலியவற்றை விளக்குவது யாப்பருங்கலக்காரிகை என்னும் நூலாகும். இது யாப்பு என்னும் கடலைக் கடக்க உதவும் நூலாக உள்ளது.

தமிழ்ச் செய்யுள் வடிவங்கள் பெரும்பாலும் இசையை அடிப்படையாகக் கொண்டவை. ஓசையே தமிழ்ச் செய்யுளை மெருகேற்றும். இவ்வோசை, செய்யுளுக்கு மேலும் அழகு சேர்க்கிறது. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் பாவகைகள் முறையே செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை என்னும் ஓசை வடிவம் கொண்டவை.

செய்யுளில் மோனை, எதுகை, இயைபு போன்றவை இசையைப் பிணைக்கின்றன. சீர் அடிப்படையில் அடிகள் வரையறை செய்யப்படுகின்றன. குறளடி இரண்டு சீர்களாகவும் சிந்தடி மூன்று சீர்களாகவும் அளவடி (நேரடி) நான்கு சீர்களாகவும் நெடிலடி ஐந்து சீர்களாகவும் கழிநெடிலடி ஆறு அல்லது அதற்கு மேற்பட்ட பல சீர்களாகவும் வரும்.

பா இயற்றுவதற்குரிய எளிய வடிவமாக ஆசிரியப்பாவைக் கூறலாம். அகவல் ஓசை பெற்றதால் ஆசிரியப்பாவை 'அகவற்பா' என்றும் கூறுவர். பெரும்பாலும் ஆசிரியப்பா, இரண்டு அசைகளால் அமையும். ஆசிரியப்பாக்களால் ஆன பாடல்களே சங்ககாலத் தமிழில் மிகுதியாக உள்ளன.

## அமைப்பும் படைப்பும்

யாப்பில் 'எழுத்து', அசையை அமைக்க உதவும். அசை என்பது இசை (மாத்திரை) சேர்ந்து வருவதாகும். அசை நேர், நிரை என இருவகையாக அமையும். அவை பின்வருமாறு,

| நேரசை | எ.கா. | நிரையசை | எ.கா. |
|---|---|---|---|
| குறில் தனித்து வருதல் | க | இருகுறில் இணைந்து வருதல் | அக |
| குறில் ஒற்றுடன் வருதல் | கண் | இருகுறில் இணைந்து ஒற்றுடன் வருதல் | அகம் |
| நெடில் தனித்து வருதல் | பா | குறில்நெடில் இணைந்து வருதல் | கலா |
| நெடில் ஒற்றுடன் வருதல் | பார் | குறில்நெடில் இணைந்து ஒற்றுடன் வருதல் | கலாம் |

சீர் ஒன்றின் அசைப் பிரிப்பில் தனி மெய்யெழுத்து வந்தாலோ இரண்டு மெய்யெழுத்துகள் இணைந்து வந்தாலோ அசையாகக் கணக்கில் எடுத்துக்கொள்ளக்கூடாது.

ஆல் – நேரசை – இருமாத்திரை அளவே கொள்ள வேண்டும் ('ல்' அலகு பெறாது)

இகழ்ச்சி – நிரையசை – இருமாத்திரை அளவே கொள்ள வேண்டும் ('ழ்', 'ச்' அலகு பெறாது)

## சீரும் தளையும்

அசைகள் சேர்ந்து அமைந்தால் சீர் பிறக்கும். ஆசிரியப்பாவிற்கு உரிய சீர் இயற்சீர் ஆகும். இதனை ஆசிரிய உரிச்சீர் என்றும் கூறுவர். தேமா, புளிமா ஆகிய இரண்டும் நேரீற்று ஈரசைச் சீர்களாகவும் கருவிளம், கூவிளம் ஆகிய இரண்டும் நிரையீற்று ஈரசைச் சீர்களாகவும் வரும். எனவே, ஆசிரிய உரிச்சீர் நான்கு வகைப்படும். வெண்பாவிற்குரிய தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் ஆகிய நேரீற்று மூவசைச் சீர்களால் அமைந்த 'காய்ச்சீர்' கலந்தும் வரலாம்.




## ஆசிரியத்தளை

மாமுன் நேர் ஒன்றி வந்தால் நேரொன்றாசிரியத் தளையாகும்

நல்லார் சொல்லோ - நல்/லார் - தேமா, சொல்/லோ - நேர் நேர் (தேமா)

விளம்முன் நிரை ஒன்றி வந்தால் நிரையொன்றாசிரியத் தளையாகும்.

கருவினில் திருமுகம் - கரு/வினில் - கருவிளம், திரு/முகம் - நிரை நிரை (கருவிளம்)

இவ்வாறு ஆசிரியப்பாவானது இயற்சீரும் ஆசிரியத் தளையும் பெற்றுவரும்.

## ஆசிரியப்பாவின் பொது இலக்கணம்

- அகவலோசை கொண்டது.
- எல்லா அடிகளும் நான்கு சீர்களைப் (அளவடி) பெற்றுவரும்.
- இயற்சீர் மிகுந்தும் பிறசீர் கலந்தும் வரும்.

- ஆசிரியத்தளை மிகுந்தும் பிற தளை கலந்தும் வரும்.
- நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் (கூவிளங்கனி, கருவிளங்கனி) வராமல் அமையும்.
- இறுதி அடியின் இறுதி எழுத்து பிற எழுத்தால் முடியும் என்றாலும், 'ஏ' என்னும் எழுத்தால் முடிவது சிறப்பு. ஏகாரத்துடன் ஓ, ஈ, ஆய், என், ஐ ஆகிய ஈறுகளாலும் முடியும்.
- மூன்றடிச் சிற்றெல்லையாக அமையும். பேரெல்லை பாடுவோன் எண்ணத்திற்கேற்ப (கற்பனைக்கேற்ப) அமையும்.

## ஆசிரியப்பாவின் வகைகள்

- "கடை அயற்பாதம்"

  இறுதி அடிக்கு முந்தைய அடி மூன்று சீர்களைப் பெற்று வருவது நேரிசை ஆசிரியப்பாவாகும். மற்ற அடிகள் நான்கு சீர்களைப் பெற்றுவரும்.

- "இடைபல குன்றின் இணைக்குறள்"

  முதலடியும் இறுதியடியும் நான்கு சீர்களைப் பெற்று இடையடிகள் இணை இணையாய் இருசீர்களாகவும் (குறளடி) மூன்று சீர்களாகவும் (சிந்தடி) வருவது இணைக்குறள் ஆசிரியப்பாவாகும்.

- "எல்லா அடிகளும் ஒத்து நடைபெறுமாயின் நிலைமண்டில ஆசிரியப்பா". எல்லா அடிகளும் நான்கு சீர்களைப் பெற்று வருவது நிலைமண்டில ஆசிரியப்பாவாகும். 'ஏ' என்ற எழுத்தாலும் 'என்' என்ற அசைச் சொல்லாலும் முடியும். (அசைச்சொல் – யாப்புக்காக ஆக்கப்படும் பொருளில்லாத சொல்)

- "நடு ஆதி அந்தத்து அடைதரு பாதத்து அகவல் அடிமறி மண்டிலமே"

  பாடலில் உள்ள அடிகளை மாற்றி மாற்றி அமைத்தாலும் ஓசையும் பொருளும் மாறாது அமைவது அடிமறிமண்டில ஆசிரியப்பாவாகும்.

  ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம் என்பன ஆசிரியப்பாவின் இனங்கள் ஆகும்.

## ஆசிரியப்பாவில் அமைந்த பாடல்–விளக்கம்

தமிழ்க்கவிஞர் பலர் ஆசிரியப்பாவால் எழுதியுள்ள பாடல்களில் ஆசிரியப்பாவின் இலக்கணங்களைக் கண்டறிந்து பயிற்சி பெறலாம்.

"வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க
நன்மைவந் தெய்துக தீதெலாம் நலிக……"

பாரதியாரின் இப்பாடல் ஒவ்வோரடியும் நான்கு ஈரசைச் சீர்களால் அமைந்து இடையில் காய்ச்சீராகிய மூவசைச் சீர்களைப் பெற்றுவந்த ஆசிரியப்பாவாகும்.

**மேற்காண் பாடலைக் கீழ்க்கண்டவாறு அசையாகப் பிரிக்கலாம்.**

| | | | |
|---|---|---|---|
| நேர் நிரை | நேர் நிரை | நேர் நிரை | நிரை நேர் |
| நேர் நிரை | நேர் நிரை | நிரை நிரை | நேர் நேர் |
| நேர் நிரை | நிரை நேர் | நேர் நேர் நேர் | நேர் நேர் |
| நேர் நேர் நேர் | நேர் நிரை | நேர் நிரை | நிரை நேர் |

மாச்சீர் என்று கூறினால், முதலில் அது ஈரசைச்சீர் என்றும், பிறகு நேரசையை ஈற்றிலே உடைய ஈரசைச்சீர் என்றும், காய்ச்சீர் என்று கூறினால் முதலில் அது மூவசைச்சீர் என்றும், பிறகு நேரசையை ஈற்றிலே உடைய மூவசைச்சீர் என்றும் நினைவுக்கு வரவேண்டும்.

**பாடலின் அசைக்குரிய வாய்பாடு**

| | | | |
|---|---|---|---|
| கூவிளம் | கூவிளம் | கூவிளம் | புளிமா |
| கூவிளம் | கூவிளம் | கருவிளம் | தேமா |
| கூவிளம் | புளிமா | தேமாங்காய் | தேமா |
| தேமாங்காய் | கூவிளம் | கூவிளம் | புளிமா |

( இயற்சீரும்(ஈரசைச்சீர்) காய்ச்சீரும்( மூவசைச் சீர்) பயின்று வந்துள்ளன )

**வாய்பாட்டிற்குரிய தளை**

| | | | |
|---|---|---|---|
| விளம் முன் நேர் | விளம் முன் நேர் | விளம் முன் நிரை | மா முன் நேர் |
| விளம் முன் நேர் | விளம் முன் நிரை | விளம் முன் நேர் | மா முன் நேர் |
| விளம் முன் நிரை | மா முன் நேர் | காய் முன் நேர் | மா முன் நேர் |
| காய் முன் நேர் | விளம் முன் நேர் | விளம் முன் நிரை | மா முன்... |

(நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத் தளை, இயற்சீர் வெண்டளை,

வெண்சீர் வெண்டளை ஆகிய தளைகள் அமைந்துள்ளன )

இவ்வாறு இரண்டசைகளை உடைய எளிய சொற்களைக் கொண்டு ஆசிரியப்பாவிற்குரிய தளைகளோடு பாடல்களை எழுதிப் பழகுதல் வேண்டும்.

**ஆசிரிய விருத்தம்**

ஆசிரிய விருத்தத்தால் அமைந்த பாடல்களே இன்று பெருவழக்கில் உள்ளன. இவ்வகையான பாடல்களை எளிதாகக் கையாளலாம். ஆசிரியப்பாவின் இனங்களுள் ஒன்றே விருத்தம் . ஆறு சீர்களால் அமைந்த பாடலை அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்றும், ஏழு சீர்களால் அமைந்த பாடலை எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்றும் எட்டுச்சீர்களால் அமைந்த பாடலை எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்றும் பாவகையைக் குறிப்பிடுவர். ஆறு அல்லது அதற்கும் மேற்பட்ட எத்தனை சீர்கள் வந்தாலும் அந்த அடி 'கழிநெடிலடி' ஆகும்.

**அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் அமையும் முறை**

அறுசீர்க்கழிநெடிலடிகள் நான்கு கொண்டதாக அமைந்து, நான்கடியும் அளவொத்து வரவேண்டும். முதற்சீரிலும் நான்காம் சீரிலும் மோனை அமைத்தும், முதற்சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை அமைத்தும் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் எழுதலாம்.

*யாப்பிலாப் பாட லேனும்*
*யார்தரும் கவிதை யேனும்*
*மாப்பலாப் போல எண்ணி*
*மடியிலே வாங்கிக் கொண்டு*
*காப்பிலாத் தமிழர் நெஞ்சில்*
*காலமெல் லாமும் வாழும்*
*மூப்பிலாத் தமிழே ! உன்னை*
*முதன்முதல் வணங்கு கின்றேன் !"*

சீர் அமைப்பை வைத்து அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் பல்வேறு வகையாக எழுதப்படுகின்றன.

- ஓரடியுள் அரை அடிக்கு ஒரு விளச்சீரும் இரு மாச்சீர் வருவனவும்
- ஓரடியுள் அரை அடிக்கு இரு மாச்சீரும் ஒரு காய்ச்சீர் வருவனவும்
- ஓரடியுள் நான்கு காய்ச்சீரும் இரு மாச்சீர் வருவனவும் உண்டு.

இப்பாடலில் அடிதோறும்
ஆறு சீர்கள் பெற்று, முதற்சீரிலும் நான்காம் சீரிலும் மோனை அமைந்து நயம் சிறக்கக் காணலாம்.



**கற்பவை கற்றபின்...**

*பச்சைமா மலைபோல் மேனி*
*பவளவாய்க் கமலச் செங்கண்*
*அச்சுதா அமரர் ஏறே!*
*ஆயர்தம் கொழுந்தே என்னும்*
*இச்சுவை தவிர யான்போய்*
*இந்திர லோகம் ஆளும்*
*அச்சுவை பெறினும் வேண்டேன்!*
*அரங்கமா நகரு ளானே!*

– தொண்டரடிப்பொடி ஆழ்வார்

*சீரிய நெற்றி எங்கே?*
*சிவந்தநல் இதழ்கள் எங்கே?*
*கூரிய விழிகள் எங்கே?*
*குறுநகை போன தெங்கே?*
*நேரிய பார்வை எங்கே?*
*நிமிர்ந்தநன் னடைதான் எங்கே?*
*நிலமெலாம் வணங்கும் தோற்றம்*
*நெருப்பினில் வீழ்ந்த திங்கே!*

– கண்ணதாசன்

மேற்கண்ட ஆசிரிய விருத்தங்களை அசையாகவும் அசைக்குரிய வாய்பாடாகவும் வாய்பாட்டிற்குரிய தளையாகவும் எழுதுக.

## இலக்கணத் தேர்ச்சி கொள்

1. ஆசிரியப்பா எத்தனை வகைப்படும் ? அவை யாவை ?
2. ஆசிரியப்பாவிற்குரிய சீரும் தளையும் யாவை ?
3. அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களின் வகைகளையும் அவற்றை இயற்றுவதற்கான விதிகளையும் கூறுக.
4. பொருத்துக

| | | |
|---|---|---|
| அ) நேரிசை ஆசிரியப்பா | – i. | முதலடியும் இறுதியடியும் அளவடிகளாய் வரும் |
| ஆ) இணைக்குறள் ஆசிரியப்பா | – ii) | அடிகளை மாற்றினாலும் ஓசையும்பொருளும் மாறாது வரும் |
| இ) நிலைமண்டில ஆசிரியப்பா | – iii) | இறுதி அடியின் முந்தைய அடி சிந்தடியாய் வரும் |
| ஈ) அடிமறிமண்டில ஆசிரியப்பா | – iv) | எல்லா அடிகளும் அளவடி பெற்று வரும். |

5. பின்வரும் அறுசீர் விருத்தப் பாடல்களில் உள்ள விடுபட்ட சீர்களை ஏற்றவகையில் அமைத்துப் பயிற்சி பெறுக.

### பயிற்சி 1

ஒரே அடியில் 6 சீர் ; 1, 4 சீர்களில் மோனை வரவேண்டும். 1, 2, 4, 5 ஆகியன தேமா அல்லது புளிமாவாக வரவேண்டும். 3, 6 சீர்கள் ஏதேனும் ஒரு காய்ச்சீராக வரவேண்டும். வேறு தளைகள் பார்க்கத் தேவையில்லை. இவ்வகையில் பின்வரும் பயிற்சியை அமைக்க.

மாச்சீர் + மாச்சீர் + காய்ச்சீர் – வாய்பாடு

மண்ணுக் கழகு மரமாகும்
    மரத்திற் கழகு கிளையாகும்
கண்ணுக் கழகு ____________
    கவிதைக் கழகு ____________
விண்ணுக் கழகு ____________
    வீதிக் கழகு ____________
எண்ணுக் கழகு ____________
    எழுத்துக் கழகு ____________

### பயிற்சி 2

மண்ணுக்கு அழகு என்னும் இரு சீர்களின் பின் ஆகும் / தெளிவுடைமை/ தெளிவாகும் / கிழியாமை / பயன்படுதல் / நற்கருத்து.... எனப் பல வகைகளில் சீர்களை அமைத்துக்கொள்ளலாம்.

நாட்டுக் கழகு ____________
    ______ கழகு ________
வீட்டுக் கழகு ____________
    ______ கழகு ____________
காட்டுக் கழகு ____________
    ______ கழகு ____________
ஏட்டுக் கழகு ____________
    ______ கழகு ____________

### பயிற்சி 3

ஒவ்வோரடியும், முதலிரு சீர்கள் ஈரசையாகவும் இறுதிச்சீர் நேரீற்று மூவசைச் சீராகவும் அமைத்துப் பழகுக.

காற்றைத் தந்த வான்வாழ்க !
    ______ ______ ______
______ ______ ______
    ______ ______ ______
______ ______ ______
    ______ ______ ______
______ ______ ______
    ______ ______ ______



# நம்மை அளப்போம்




**பலவுள் தெரிக.**

1. பொருந்தாததைத் தேர்க.

அ) ஆனந்தரங்கர் எழுதிய நாட்குறிப்புகள் பன்னிரண்டு தொகுதிகளாக வெளிவந்துள்ளன

ஆ) ஒவ்வொருநாள் நிகழ்வுக்கும் ஆண்டு, திங்கள், நாள், கிழமை, நேரம், நிகழ்விடம் ஆகியவற்றைக் குறிப்பிடாமல் செய்திகளை எழுதியுள்ளார்

இ) ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு 18ஆம் நூற்றாண்டின் தமிழ்ச் சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது

ஈ) ஐரோப்பாவிலிருந்து இந்தியாவை அடையக் கப்பல்களுக்கு எட்டுத்திங்கள் தேவைப்பட்டன

i) அ, ஆ   ii) ஆ, இ   iii) அ, இ   iv) ஆ, ஈ

2. ஆனந்தரங்கருக்குத் தொடர்பில்லாத குறிப்பு எது?

அ) மொழிபெயர்ப்பாளர்

ஆ) இந்தியாவின் பெப்பிசு

இ) தலைமைத் துவிபாஷி

ஈ) உலக நாட்குறிப்பு இலக்கியத்தின் தந்தை

3. உறுபகை, இடன் ஆகிய சொற்களின் இலக்கணக்குறிப்பு

அ) உரிச்சொல்தொடர், ஈற்றுப்போலி   ஆ) வினைத்தொகை, இடவாகுபெயர்

இ) வினையெச்சம், வினைத்தொகை   ஈ) பெயரெச்சம், பண்புத்தொகை

4. சரியானதைத் தேர்ந்தெடுக்க.

அ) வரை – மலை   ஆ) வதுவை – திருமணம்   இ) வாரணம் – யானை   ஈ) புடவி – கடல்

i) அ, ஆ, இ – சரி; ஈ–தவறு   ii) ஆ, இ, ஈ – சரி; அ–தவறு

iii) அ, இ, ஈ – சரி; ஆ–தவறு   iv) அ, ஆ, ஈ - சரி; இ–தவறு

5. நேரொன்றாசிரியத்தளை எனப்படுவது

அ) காய் முன் நேர்   ஆ) காய் முன் நிரை

இ) கனி முன் நிரை   ஈ) மா முன் நேர்

**குறுவினா**

1. மதீனா நகரம் ஒரு மாளிகை நகரம் என்னும் கூற்றினை உறுதிப்படுத்துக.
2. ஆனந்தரங்கரின் வருணனைத் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருக.
3. நெருங்கின, இரங்கி – உறுப்பிலக்கணம் தருக.

4. "ஊனமில் ஊக்கமும் ஒளிரக் காய்த்தநல்
தீன்எனுஞ் செல்வமே பழுத்த சேணகர்"
– இப்பாடலடிகளில் ஒளிரக் காய்த்தது எது? பழுத்தது எது?
5. ஈரசைச் சீர்களுக்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் யாவை ?

**சிறுவினா**

1. "கலைவலார் மறையவர் கருத்தில் எண்ணியது" - யாது?
2. "மறுவிலாத அரசென இருந்த மாநகர்" – உவமையைப் பொருளுடன் விளக்குக.
3. ஆனந்தரங்கர் ஒரு வரலாற்று ஆசிரியர் என்பதைப் பாடப்பகுதிவழி எடுத்துக்காட்டுக.
4. மேகத்திடம் கூறுவதுபோலத் தோழி தலைவனுக்கு உணர்த்திய இறைச்சிப் பொருள் யாது?
5. ஆசிரியப்பாவின் பொது இலக்கணத்துள் எவையேனும் நான்கினைக் கூறுக.

**நெடுவினா**

1. தாம் வாழ்ந்த காலகட்டத்தின் நாகரிகப் புதையலாக நாட்குறிப்பைப் பயன்படுத்தியவர் ஆனந்தரங்கர் என்பதை நிறுவுக.
2. மதீனா நகரம் ஒரு வளமான நகரம் என உமறுப்புலவர் வருணிக்கும் செய்திகளைத் தொகுத்து எழுதுக.
3. பிம்பம் கதையின் வாயிலாகப் பிரபஞ்சன் தெளிவுபடுத்தும் மனித முகங்களைப் பற்றி விவரிக்க.



## மொழியை ஆள்வோம்

**சான்றோர் சித்திரம்**

### இரசிகமணி டி.கே. சிதம்பரநாதர் (1882 – 1954)

"தமிழில் எல்லாம் உண்டு; தமிழின் கவிச் சுவைக்கு ஈடுமில்லை இணையுமில்லை; தமிழால் அறிவியல் மட்டுமன்று; அனைத்து இயல்களையும் கற்கமுடியும்" எனச் சான்றுகளுடன் எடுத்துச் சொன்ன பெருந்தகை இரசிகமணி டி.கே. சிதம்பரநாதர். இவர், தமது இலக்கிய இரசிகத் தன்மையால் தமிழுக்கும் தமிழருக்கும் புத்துணர்வு ஊட்டியவர். டி. கே. சி. யின் வீட்டுக் கூடத்தில் வட்டவடிவமான தொட்டிக் கட்டில், ஞாயிறுதோறும் மாலை ஐந்து மணிக்குக் கூடிய கூட்டம், இலக்கியத்தைப் பற்றிப்பேசியது. அவ்வமைப்பு 'வட்டத் தொட்டி' என்றே பெயர்பெற்றது. டி. கே. சி. இலக்கியங்களின் நயங்களைச் சொல்லச் சொல்லக் கூட்டத்திலுள்ள அனைவரும் தங்களை மறந்து இலக்கியத்தில் திளைப்பர். தமிழின் இனிமை என்பது மட்டும் அவர்கள் உள்ளங்களில் நிறைந்திருக்கும். வழக்கறிஞராகத் தொழில் புரிவதைவிடத் தமிழின்பத்தில் திளைப்பதையே டி.கே.சி. விரும்பினார். தமிழ்க்கலைகள், தமிழ்இசை, தமிழ் இலக்கியம் ஆகியவற்றின் சுவையையும் மேன்மையையும் தனித்தன்மையையும் எடுத்துச் சொன்னார். கடிதங்களிலும் அவற்றையே வியந்து எழுதினார். அவர்தம் கடிதங்கள் இலக்கியத் தரம் கொண்டு



டி.கே. சி. (1882 – 1954)

புதிய இலக்கிய வகையாகவே கருதப்பட்டன. இதய ஒலி, கம்பர் யார்? முதலான நூல்களும் முத்தொள்ளாயிரம், கம்பராமாயணம் ஆகியவற்றுக்கு எழுதிய உரையும் அவர்தம் இலக்கிய நுகர்வுக்கடலின் சில அலைகள் எனலாம். சென்னை மாநில மேலவையின் உறுப்பினராகவும் அறநிலையத் துறையின் ஆணையராகவும் திகழ்ந்த டி. கே. சி. ஏற்றிய இலக்கியஒளி தமிழ் அழகியலை வெளிச்சப்படுத்தியது.

**வினாக்களுக்கு விடையளிக்க.**

1. அன்று, அல்ல என்பவற்றுக்கான பொருள்வேறுபாடு அறிந்து தொடர் அமைக்க.
2. சொல்லச் சொல்ல, திளைப்பர் – இலக்கணக் குறிப்புத் தருக.
3. ரசிகர் – தமிழ்ச்சொல் எழுதுக. மாநில மேலவை–ஆங்கிலக் கலைச்சொல் தருக.
4. வழக்கறிஞராகத் தொழில் புரிவதைவிடத் தமிழின்பத்தில் திளைப்பதையே டி.கே.சி விரும்பினார் – விடைக்கேற்ற வினா அமைக்க.
5. மேலவை, புத்துணர்வு – இச்சொற்களின் புணர்ச்சி வகையைக் கண்டறிக.

**தமிழாக்கம் தருக.**

*The folk songs of Tamilnadu have in them a remarkable charm just as we find in the folk songs of any other country. But what is special in these Tamil songs is, they not only possess a native charm and the aroma of the soil but have preserved in them a certain literary and artistic quality. This is so because the people who speak the language of these folk songs, the Tamils, have had a great historical past and a wonderful literary tradition. Folk songs are so old and yet so full of life that they are always new and progressively modern. These songs were born several centuries ago; they are being born every generation; they will be born and reborn over and over again!*

**கீழ்க்காணும் பாடலின் முதலடியைக் கவனித்து, பிற அடிகளில் உள்ள சீர்களை ஒழுங்கு செய்க**

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலேஊறுகின்றதீஞ்சுவைத்தண்ணீரே
உகந்ததண்ணீர்இடைமலர்ந்தசுகந்தமணமலரே
மேடையிலேவீசுகின்றமெல்லியபூங்காற்றே
மென்காற்றில்விளைசுகமேசுகத்திலுறும்பயனே
ஆடையிலேஎனைமணந்தமணவாளாபொதுவில்
ஆடுகின்றஅரசேஎன்அலங்கலணிந்தருளே.

**படித்துப்பார்த்துப் படைத்துக்காட்டுக.**

**புத்தகத் திருவிழாவின் தொடக்க நிகழ்ச்சிக்கு வருகை தந்த சான்றோர் குறித்த அறிமுகஉரை**

பேரன்பு கொண்டோரே! பேரறிவுச் செல்வமே பெருஞ்செல்வம் எனக் கருதி வந்திருக்கும் சான்றோரே! இளைய தலைமுறையே! உங்கள் அனைவருக்கும் முதற்கண் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

புத்தக வாசிப்பை மூச்சுக்காற்றாய்ச் சுவாசித்து வாழ்கின்ற படிப்பாளர்களாகிய உங்கள் முன்பு படைப்பாளர் ஒருவரை, மிகச் சிறந்த பண்பாளரை அறிமுகப்படுத்துவதில் பெருமகிழ்வு கொள்கின்றேன்.

சிறுவயது முதலாகத் தனக்குப் பெற்றோர்கள் அளித்த சில்லறைகளைச் சேகரித்து ஆண்டுதோறும் புத்தகம் வாங்கும் வழக்கத்தைக் கொண்டவர். புத்தகங்களோடு வாழ்ந்து வருபவர்; புத்தகத்தை வாங்குவதோடு மட்டுமல்லாமல் முழுமையாக அவற்றை வாசிப்பதும் குறிப்பெடுப்பதும் இளையதலைமுறையினர்க்குத் தன்னம்பிக்கை அளிக்கும் கூட்டங்களில் பேசுவதும் எனப் பல்வேறு பணிகளில் ஈடுபட்டு வருபவர்.

ஷேக்ஸ்பியர் என்னும் மாபெரும் படைப்பாளனின் பிறந்த நாளான ஏப்ரல் 23 உலகம் முழுவதும் புத்தகநாளாகக் கொண்டாடப்படுகிறது. அதற்குக் காரணம் அவரிடம் இருந்த வாசிப்புப் பழக்கமே ஆகும்.

அவ்வகையில் வாசிப்பையே தம் வாழ்க்கையாய்க் கொண்டிருக்கும் நம் சிறப்பு விருந்தினர் நமக்கெல்லாம் முன்மாதிரியானவர். அவர்வழியில் புத்தக வாசிப்பைத் தொடர்வோம்! புதியதோர் உலகம் படைப்போம்! வெல்வோம்!

**உங்கள் பகுதி நூலகத்தில் வாசகர்களுக்கு நூலக உறுப்பினர் அட்டை வழங்க வருகைதரும் அறிஞர் ஒருவரைக் குறித்து அறிமுகஉரை எழுதுக.**

**இலக்கியநயம் பாராட்டுக.**

*செந்நெலும் கரும்பும் விளைந்தனவே – நல்ல*
*தேன்பொழி மலர்களும் விரிந்தனவே*
*இன்னலும் பசியும் போயொழிக – தேசம்*
*எழிலுடன் கூடியே நலமுறுக*

*பிரிவுகள் பேசியே பூசலிட்ட – பழம்*
*பேதமை தனைத்தள்ளி அனைவருமே*
*ஒருதனிக் குடும்பமாய் வாழ்ந்திடுவோம் – நம்முள்*
*ஒற்றுமை ஓங்கிடச் செய்திடுவோம்*

*தமிழன் திருநாள் பொங்கலென்றால் – அதில்*
*தமிழன் பண்புகள் பொங்குமன்றோ?*
*புவியெலாம் சேர்ந்தொரு வீடதிலே – யாரும்*
*புறம்பிலை என்றசொல் தமிழன்றோ?*

*யாதும் ஊரெனச் சாற்றியதும் – மக்கள்*
*யாவரும் கேளிர் என்றதுவும்*
*மேதினிக் குரைத்தவர் நம்முன்னோர் – இன்று*
*வேற்றுமை நாமெண்ணல் சரியாமோ?*

*– பெ. தூரன்*




**மொழியோடு விளையாடு**

**கருத்துப்படத்தைப் புரிந்துகொண்டு பத்தியாக எழுதுக.**



**எண்ணங்களை எழுத்தாக்குக.**



**புதிர்களுக்கான விடைகளைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

(கம்பு, மை, வளை, மதி, இதழ், ஆழி)

1. எலியும் நுழையும் ; எழிலரசி கையும் நுழையும் ----------------------
2. அடிக்கவும் செய்யலாம் ; கோடைக்குக் கூழாகவும் குடிக்கலாம் -----------------
3. கண்ணிலும் எழுதலாம்; வெண்தாளிலும் எழுதலாம். ---------------------
4. அறிவின் பெயரும் அதுதான்; அம்புலியின் பெயரும் அதுவேதான்; ----------------
5. பூவின் உறுப்பும் நானே; புன்னகையின் பிறப்பிடமும் நானே ----------------
6. வண்டியையும் இயக்கும்; பெரும் கப்பலையும் தாங்கும் ----------------

**செய்து கற்போம்**

நீங்கள் படித்துச் சுவைத்த ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம் சார்ந்த ஐந்து பாடல்களைத் திரட்டி வகுப்பறையில் வழங்குக.



**நிற்க அதற்குத் தக**

| நாகரிகம் | கடைப்பிடிப்போம் |
|---|---|
| கலைவாணன் தொலைக்காட்சி பார்த்துக் கொண்டிருக்கிறான். கடைக்குச் சென்ற அவன் தாத்தா பை நிறையப் பொருள்களைத் தூக்கிக் கொண்டு வருகிறார், சுமை தாங்காது உதவிக்கு அழைக்கிறார். தொலைக்காட்சியில் வைத்தகண் வாங்காமல் நிகழ்ச்சியொன்றினைப் பார்த்துக்கொண்டிருக்கும் அவன் என்ன செய்ய வேண்டும்? | |
| உங்களது வீட்டிற்கு விருந்தினர் ஒருவர் வந்திருக்கிறார். முன்னறிவிப்பின்றி வந்திருக்கும் அவர் மிகவும் களைப்புடன் காணப்படுகிறார். நீங்கள் அவரை எவ்விதம் வரவேற்பீர்கள்? | |

**கலைச்சொல் அறிவோம்**

| | | |
|---|---|---|
| ஆவணம் – Document | உப்பங்கழி – Backwater | ஒப்பந்தம் – Agreement |
| படையெடுப்பு – Invasion | பண்பாடு – Culture | மாலுமி – Sailor |



## அறிவை விரிவு செய்

1. மறைக்கப்பட்ட இந்தியா – எஸ். இராமகிருஷ்ணன்
2. பிரபஞ்சன் சிறுகதைகள்




## இணையத்தில் காண்க

*http://www.sirukathaigal.com/tag/பிரபஞ்சன்*



## இணையச் செயல்பாடு

# தமிழ் மின் நிகண்டு




**ஒத்த சொல் அறிவோம்!**

**படிகள்:**

- கொடுக்கப்பட்டிருக்கும் உரலி / விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி 'Visual Thesaurus for Tamil தமிழ் மின் நிகண்டு' என்னும் செயலியைப் பதிவிறக்கி நிறுவிக் கொள்க.
- இப்போது திரையில் தோன்றும் 'தேடும் சொல்' என்னும் பெட்டியில் தேவையான சொல்லை இட்டு அதற்கொத்த பல சொற்களை அறிக.
- எடுத்துக்காட்டாக 'கூதிர்' என்னும் சொல்லை உள்ளீடு செய்து பனிக்காற்று, குளிர், குளிர்காலம் போன்ற வழக்கில் உள்ள சொற்களை அறிக.

**செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :**










**செயல்பாட்டிற்கான உரலி**

https://play.google.com/store/apps/details?id=com.tamilvu.visualthesarurs_mobileapp




படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே*




# திருக்குறள்

## பொச்சாவாமை

1) *இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக தாம்தம்*
*மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.*

தங்களின் மகிழ்ச்சியில் கடமையை மறக்கும்போது மறதியால் கெட்டவர்களை நினைத்துப் பார்த்துக் கொள்க.

2) *உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்*
*உள்ளியது உள்ளப் பெறின்.*

எப்போதும் எண்ணியதையே எண்ணிக்கொண்டிருந்தால், எண்ணியதை அடைதல் எளியதே!

## குறிப்பறிதல்

3) *குறிப்பில் குறிப்புணர் வாரை உறுப்பினுள்*
*யாது கொடுத்தும் கொளல்.**

முகக்குறிப்பில் அகக்குறிப்பை அறிபவரை என்ன பொறுப்பைக் கொடுத்தாவது துணையாக்கிக் கொள்க.

4) *பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்*
*வகைமை உணர்வார்ப் பெறின்.*

கண்ணின் குறிப்புகளை உணர வல்லவற்கு, பிறருடைய பகைமையையும் நட்பையும் அவரது கண்ணே அறிவித்துவிடும்.

## படைமாட்சி

5) *மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்*
*எனநான்கே ஏமம் படைக்கு.*

வீரம், மானம், முன்னோர் வழியில் நடத்தல், நம்பிக்கைக்கு உரியவர் ஆதல் ஆகிய நான்கே படைக்குப் பாதுகாப்பு.

## பகைத்திறம் தெளிதல்

6) *பகைஎன்னும் பண்பில் அதனை ஒருவன்*
*நகையேயும் வேண்டற்பாற்று அன்று.*

பகை என்னும் பண்பற்றதை ஒருவன் விளையாட்டுக்குக் கூட விரும்பக் கூடாது!

7) *வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க*
*சொல்லேர் உழவர் பகை.**

வில் வீரரின் பகையைப் பெற்றாலும், சொல்வன்மை உடைய அறிஞரின் பகையைப் பெறக்கூடாது!

8) *இளைதாக முள்மரம் கொல்க களையுநர்*
*கைகொல்லும் காழ்த்த இடத்து.**

சிறியதாக இருக்கையிலேயே முள்மரத்தைக் களைந்து விடுக! முதிர்ந்துவிட்டால் வெட்டுபவரின் கையையே காயப்படுத்தும்.

**அணி : பிறிதுமொழிதல் அணி**

### மருந்து

9) *மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
*அற்றது போற்றி உணின்.**

உண்டதும், செரித்ததும் அறிந்து உண்டால் மருந்து என ஒன்று வேண்டியதில்லை.

10) *நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்.**

நோயையும் அதன் காரணத்தையும் அதை நீக்கும் வழியையும் ஆராய்ந்து மருத்துவர் செயல்பட வேண்டும்.

**அணி : சொற்பொருள் பின்வரும் நிலையணி**

11) *உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்.*

நோயாளியின் வயதையும் நோயின் அளவையும் குளிர்காலம், வேனிற்காலம் முதலிய பருவங்களையும் அறிந்து மருத்துவர் செயல்படவேண்டும்

12) *உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று*
*அப்பால்நாற் கூற்றே மருந்து.*

நோயாளி, மருத்துவர், மருந்து, மருத்துவ உதவியாளர் – என்று மருத்துவம் நான்குவகையில் அடங்கும்.

### இரவச்சம்

13) *இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்.**

பிறரிடம் கையேந்தி உயிர்வாழும் நிலை இருக்கும் எனில், அப்படி அந்நிலையை உருவாக்கியவன் அலைந்து கெடட்டும்.

14) *இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்*
*பார்தாக்கப் பக்கு விடும்.*

பிறரை எதிர்பார்த்து இரந்து வாழ்தல் என்னும் பாதுகாப்பற்ற படகு, கொடாமை என்னும் பாறை மோதினால் உடைந்துவிடும்.

**அணி : உருவக அணி**



## கற்பவை கற்றபின்...

1. படத்துக்குப் பொருத்தமான திருக்குறளைக் கண்டுபிடிக்க.



அ) வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை

ஆ) இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

இ) உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின்.

2. கவிதைக்குப் பொருந்தும் திருக்குறளைக் கண்டறிக.

கொடி தவித்ததைப் பாரி
அறிந்துகொண்டான்
மயில் தவித்ததைப் பேகன்
உணர்ந்துகொண்டான்
பிள்ளையின் பரிதவிப்பைத்
தாய் அறிவாள்
பளிங்கு முகத்தைப் படித்துக்கொள்
அப்படிப் படித்தவர்களைப்
பிடித்துக்கொள்.

அ) இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து

ஆ) குறிப்பில் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்

இ) இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து

3. மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து -------- நினை.

அ) முகக்குறிப்பை அறிந்தவரை

ஆ) எண்ணியதை எண்ணியவரை

இ) மறதியால் கெட்டவர்களை

ஈ) சொல்லேர் உழவரை

4. பொருள் கூறுக.

அ) ஏமம்

ஆ) மருந்துழைச் செல்வான்

5. இலக்கணக்குறிப்புத் தருக.

அ) கெடுக

ஆ) குறிப்புணர்வார்

## குறுவினா

1. மருத்துவத்தின் பிரிவுகளாகக் குறள் கூறுவன யாவை?
2. படைக்குப் பாதுகாப்பாக இருப்பவை எவை?
3. பகைவர் வலிமையற்று இருக்கும்போதே வென்றுவிடவேண்டும் என்னும் குறட்பாவைக் கூறுக.
4. எப்போது மருந்து தேவையில்லை என்று திருவள்ளுவர் கூறுகிறார்?

## சிறுவினா

1. உருவக அணிக்குத் திருக்குறள் ஒன்றை எடுத்துக்காட்டாகத் தந்து விளக்குக.
2. இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
   கைகொல்லும் காழ்த்த இடத்து. - இக்குறட்பாவில் பயின்றுவரும் அணியை விளக்குக.
3. மருந்து, மருத்துவர், மருத்துவம் ஆகியன பற்றித் திருக்குறள் கூறுவன யாவை?

## நெடுவினா

வாழ்வின் உயர்வுக்கு உறுதுணையாக நீங்கள் கருதும் குறட்பாக்கள் சிலவற்றை விளக்கிக் கட்டுரையாக்குக.

இயல் 6

# பல்கலை நிறுவு





## கற்றல் நோக்கங்கள்

- தமிழர் கலைகளை அவை படைக்கப்பட்ட காலப்பின்னணி, அறிவியல் நுட்பங்களுடன் இணைத்துப் போற்றுதல்
- இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள பல்வேறு உரையாடல் வடிவங்களைச் சுவைத்துப் பின்பற்றுதல்
- வாழும் காலத்து ஆளுமைகளின் திறமைகளை உணர்ந்து முன்னோடியாகக் கொள்ளுதல்
- கலைச்சொல்லாக்கத்தின் இன்றியமையாமையை உணர்ந்து புதிய சொற்களை உருவாக்கிப் பயன்படுத்துதல்



## பாடப் பகுதி

காலத்தை வென்ற கலை

கேள்வி, ஒரு புளியமரம் – ஆத்மாநாம்

குற்றாலக் குறவஞ்சி – திரிகூட ராசப்பக் கவிராயர்

திருச்சாழல் – மாணிக்கவாசகர்

இசைத்தமிழர் இருவர்

கலைச்சொல்லாக்கம்

இயல் 6

# காலத்தை வென்ற கலை




**நுழையும்முன்**

கலையும் அறிவியலும் மனித குல வளர்ச்சியுடன் பின்னிப் பிணைந்தவை. மனிதனின் படைப்புத் திறனால் உருவானது கலையாகும்; அது நம் மனத்தில் அழகுணர்வை ஏற்படுத்தி மகிழ்வைத் தருகிறது. நுண்கலை, பயன்கலை, பருண்மைக்கலை, கவின்கலை, நிகழ்த்துகலை எனக் கலைகள் பலவகைப்படும்.. கலை ஒரு சமூகத்தின் நாகரிகத்தையும் பண்பாட்டு மேன்மையையும் எதிரொலிக்கின்றது. தமிழகத்தில் பழங்காலத்திலேயே சிற்பம், கட்டடம், ஆடல், பாடல் முதலிய கலைகள் சிறப்புற்றிருந்தன. ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் கம்பீரமாகக் காட்சியளிக்கும் தஞ்சைப் பெரிய கோவிலின் கட்டடக் கலைநுட்பம் நம்மை வியப்படையச் செய்கிறது..

கதிரும் நிலாவும் அண்ணா பல்கலைக் கழகத்தில் கட்டட அழகியல் கலைஞர்களுக்கான பட்டப்படிப்பின் (B.Arch.,) இறுதியாண்டு மாணவர்கள். கல்வெட்டுக்கலைப் பயிற்சியுள்ளவர்கள். தொன்மையான கோவில்களுக்குச் சென்று கலையழகையும் நுட்பங்களையும் விருப்பத்துடன் ஒளிப்படம், ஆவணப்படங்களை எடுத்துத் தங்கள் வலைத்தளத்தில் கட்டுரைகளோடு பதிவேற்றுவார்கள்.

கல்லூரியில் மூன்று நாள்கள் விடுமுறை கிடைத்தபோது அவ்விருவரும் தங்களின் பல நாள் கனவான தஞ்சாவூர்க் கோவிலுக்குச் செல்வதென்று முடிவெடுத்தனர். விடியலில் குளிர்காற்றின் மென்மையை அனுபவித்தபடி தஞ்சையில் இறங்கிய இருவரும் உறவினர் வீட்டில் ஓய்வு எடுத்தனர். பின்னர், நிழற்படக் கருவி, வரைபடத் தாள்கள் உள்ளிட்ட பொருள்களைக் கதிர் எடுத்துக்கொள்ள, நிலா கோவிலை நோக்கித் தன் வாகனத்தை ஓட்டினாள்.

கோவிலுக்குள் நுழைந்ததும், ஒளிப்படம் எடுப்பதற்கான அனுமதிச்சீட்டை வாங்கிக்கொண்டு உள்ளே சென்றனர். சுற்றிப் பார்த்து ஆங்காங்கே நின்று ஒளிப்படங்கள் எடுத்தபடி, அதன் நுணுக்கங்களைக் கவனித்து வியந்த இருவரும் சற்றே களைத்தவர்களாய்த் திருச்சுற்று மாளிகையில் அமர்ந்தனர்.

பெரியகோவிலின் கோபுரங்களில் உயரமானது, கேரளாந்தகன் கோபுரம். இராசராசன் 988ஆம் ஆண்டு சேரநாட்டை வெற்றிகொண்டதைப் போற்றும் வகையில் இக்கோபுரத்திற்குக் "கேரளாந்தகன் வாயில் கோபுரம்" எனப் பெயரிடப்பட்டுள்ளது.

நிலா: கதிர், கவனித்தாயா? இந்தக் கோவிலில் இரண்டு கோபுரங்கள் இருக்கின்றன.

கதிர்: ஆமாம். முதலில் உள்ளது கேரளாந்தகன் திருவாயில்; அதை அடுத்து உள்ளது இராசராசன் திருவாயில். இவை சோழர்களின் தனி அடையாளம். ஆமாம் நிலா, இங்குக் கோபுரத்தின் நிழல் விழாது என்று கேள்விப்பட்டிருக்கிறேன், உண்மையா?

நிலா : விமானத்தின் நிழல் விழாது என்பது கட்டுக்கதை. தினமும் இருவேளையும் விமானத்தின் நிழல் முழுவதுமாகவே விழும்.

புதிய குரல்: "தம்பி, நீங்கள் கோபுரமென்றது தவறு. இந்தப் பெண் சொன்னதுதான் சரி". (குரல் வந்த திசையில் பார்த்தபோது அவர்களுக்குப் பின்னால் தூணில் தூய வெண்ணிற ஆடையில் அறிவின் களையுடனும் சோர்ந்த முகத்துடனும் 70 வயது மதிக்கத்தக்க பெரியவர் ஒருவர் தூணில் சாய்ந்து அமர்ந்திருந்தார்.)

பெரியவர்: கோபுரமென்பது வாயில்களின் மேலே அமைக்கப்படுவது. விமானமோ, 'அகநாழிகை'யின்மேல் அமைக்கப்படுவது.

கதிர்: அகநாழிகையா?

பெரியவர் : கருவறையைத்தான் அகநாழிகை என்று அழைப்பார்கள். நீங்கள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தேன். இரண்டு நுழைவாயில் கோபுரங்கள் என்பது பிற்காலச் சோழர்களின் தனிச்சிறப்பு.

நிலா: இதை ஏன் பெரிய கோவில் என்று அழைக்கிறார்கள் ஐயா?

பெரியவர்: (குறு நகையுடன்) தஞ்சைப் பெரிய கோவில் நம் நாட்டிலுள்ள கற்றளிக் கோவில்களிலேயே பெரியதும் உயரமானதும் ஆகும் அம்மா. இராசராச சோழனால் ஏறத்தாழ ஆறு ஆண்டுகள் முயன்று இது கட்டி முடிக்கப்பட்டது. 'தட்சிண மேரு' என்று இராசராசனால் பெருமையுடன் அழைக்கப்பட்ட இக்கோவில் விமானம் 216 அடி உயரம் உடையது. கருவறை விமானம் 13 தளங்களையுடையது.

கதிர்: கற்றளிக் கோயில்களென்றால்.....

பெரியவர்: செங்கற்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டுவதுபோல, கருங்கற்களை அடுக்கிக் கட்டுவதற்குக் கற்றளி என்று பெயர். ஏழாம் நூற்றாண்டில் இரண்டாம் நரசிம்மவர்மன் என்னும் பல்லவ மன்னன் உருவாக்கிய வடிவம் இது. மகாபலிபுரம் கடற்கரைக் கோவில், காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவில், பனைமலைக் கோவில் ஆகியவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். அந்த வகையில் முழுமையாகக் கற்களைக்கொண்டே கட்டப்பட்ட மிகப் பெரிய கோவில் இதுதான்.

11ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த முதலாம் இராசராச சோழன் தஞ்சைப் பெரிய கோவிலை 1003ஆம் ஆண்டு தொடங்கி 1010ஆம் ஆண்டுவரை கட்டினான். 2010இல் இக்கோவிலின் 1000ஆவது ஆண்டு நிறைவடைந்தது.



தஞ்சைப் பெரிய கோவில் – குறுக்கு வெட்டுத் தோற்றம்.

நிலா: பழங்காலத்தில் கோவில்கள் எப்படிக் கட்டப்பட்டன ஐயா?

பெரியவர்: தொடக்கத்தில் மண்ணால் கட்டி, மேலே மரத்தால் சட்டகமிட்டனர். தில்லைக் கோவில், குற்றாலநாதர் கோவில் ஆகியன அவ்வாறு கட்டப்பட்டவை. அதன்மேல் செப்பு, பொன் தகடுகளால் கூரை வேய்ந்தார்கள். அடுத்த நிலையில் செங்கற்களை அடுக்கிக் கோவில் கட்டினார்கள். அந்த வகையில்

சோழன் செங்கணான் எழுபத்தெட்டுக் கோவில்களைக் கட்டியிருப்பதாகத் திருநாவுக்கரசர் தம் பதிகமொன்றில் கூறுகிறார்.

நிலா: கோவில்கள் ஏன் பெரிதாகக் கட்டப்பட்டன?

பெரியவர்: கோவில் என்பது வெறும் வழிபடும் தலம் மட்டுமன்று. அங்கே இசை, நடனம், நாடகம் போன்ற அருங்கலைகள் வளர்க்கப்பட்டன. அது, மக்கள் ஒன்றுகூடும் இடமாகவும் இருந்தது. எனவே, மக்களுக்குத் தெரிவிக்க வேண்டிய செய்திகள் அனைத்துமே அங்கே கல்வெட்டுகளாகப் பொறிக்கப்பட்டன. அதுமட்டுமல்லாமல் பஞ்ச காலத்தில் மக்களுக்கு உதவுவதற்கான தானியக் கிடங்குகளும் கோவிலுக்குள் அமைக்கப்பட்டிருந்தன. கருவூலமாகவும் மருத்துவமனையாகவும், போர்க்காலங்களில் படைவீரர்கள் தங்கக்கூடிய இடமாகவும் கோவில்கள் பயன்பட்டன என்றால் நீங்கள் வியப்படைவீர்கள்.

கதிர்: சரிதான், பல்லவர்கள்தாம் கோவில் கட்டுவதில் வல்லவர்கள் என்று நினைத்திருந்தேன்.

பெரியவர்: செங்கல், சுண்ணம், மரம், உலோகம் முதலியவை இல்லாமலே பிரம ஈசுவர விஷ்ணுக்களுக்கு 'விசித்திர சித்தன்' என்று அழைக்கப்பட்ட முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் குடைவரைக் கோவில்களை அமைத்ததாக மண்டகப்பட்டுக் கல்வெட்டு கூறுகின்றது. அவர்கள்வழி வந்த இராசசிம்மனோ தம் முன்னோர்களையும் விஞ்சும் வகையில் உன்னதச் சிறப்பும் எழிலும் வாய்ந்ததாகக் காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவிலை அமைத்து அழியாப் புகழ் பெற்றான்.

நிலா: இராசசிம்மேச்சுரம் என்று அழைக்கப்பட்ட அக்கோவிலே இராசராசனுக்கு, அதுபோன்றதொரு பெரிய கோவிலைக் கட்ட வேண்டுமென்ற ஆர்வத்தைத் தூண்டியது அல்லவா?

> கட்டடக்கலை என்பது உறைந்துபோன இசை
> – பிரடிரிகா வொன்ஸ்லீவிங்

பெரியவர்: பரவாயில்லையே, நிறையத் தெரிந்து வைத்திருக்கிறீர்கள். ஆனால், தஞ்சைப் பெரிய கோவிலை இராசராசன்தான் கட்டினான் என்பதற்குச் சான்று எங்கே உள்ளது? இக்கோவில் எந்தக் கலைப் பாணியைச் சேர்ந்தது? சொல்லுங்கள் பார்ப்போம்.

கதிர்: இந்தியக் கட்டடக் கலைப்பாணியை நாகரம், வேசரம், திராவிடம் என்று மூன்றாகக் கூறுவர். அதில் தஞ்சைக் கோவில் எண்பட்டை வடிவில் கட்டப்பட்ட திராவிடக் கலைப்பாணியாகும்.

பெரியவர்: முதல் கேள்விக்குப் பதில் சொல்லலையே தம்பி?

நிலா: நான் சொல்கிறேன் ஐயா. 1886ஆம் ஆண்டு ஜெர்மனி அறிஞர் ஷூல்ஸ் ஆறு ஆண்டுகள் தீவிரமாகக் கல்வெட்டுகளைப் படியெடுத்து வாசித்து இக்கோவிலை இராசராச சோழன்தான் கட்டினான் என்று உறுதி செய்தார்.



பெரியவர்: சரியாகச் சொன்னாய் அம்மா. இக்கோவிலில் அரிய ஓவியங்களும் இருக்கின்றன தெரியுமா?

கதிர்: செய்தித்தாள்களில் படித்த நினைவு இருக்கிறது. ஆனால், சரியாகத் தெரியவில்லை.

**பெரியவர் :** 1930ஆம் ஆண்டில் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணிபுரிந்த எஸ். கே. கோவிந்தசாமி தஞ்சைப் பெரிய கோவில் கருவறையின் இரு தளங்களில் உள்ள சுற்றுக்கூடம், சாந்தார நாழிகைப் பகுதிச்சுவர்களில் ஓவியங்கள் காணப்பட்டதை முதன்முதலில் கண்டறிந்தார். அதில், தட்சிணாமூர்த்தி ஓவியம், சுந்தரர் வரலாறு, திரிபுராந்தகர் ஓவியம் முதலியன சுவர் முழுவதுமாகப் பெரிய அளவில் வரையப்பட்டுள்ளன.

**நிலா :** ஃப்ரெஸ்கோ வகை ஓவியங்களைத்தானே சொல்கிறீர்கள்? சோழர் கால ஓவியங்கள் மீதே நாயக்கர் ஆட்சியில் ஓவியங்கள் வரைந்திருந்ததை அறிந்து அதனை வெளியுலகத்துக்குத் தெரியப்படுத்தியவரும் அவர்தானே ஐயா!

**கதிர்:** அந்த ஓவியங்களை நாங்கள் பார்த்துப் படமெடுக்க இயலுமா?

**பெரியவர்:** பொது மக்களுக்கு அனுமதியில்லையப்பா. சிறப்பு அனுமதி பெற்றவர்கள் மட்டுமே பார்க்க முடியும். கோவில்களுக்கோ, தொல்லியல் கண்டுபிடிப்புகள் உள்ள இடங்களுக்கோ செல்பவர்கள் அதன் முக்கியத்துவத்தை உணராமல் சிலைகளைச் சேதப்படுத்துதல், சுவர்களில் கிறுக்குதல், தொல்லிடங்களில் குப்பை போடுதல் போன்ற இழிவான செயல்களில் ஈடுபடுகிறார்கள். நம்முடைய தொன்மையையும் பாரம்பரியத்தையும் பேசும் அந்த இடங்களை நாம் பாதுகாக்க வேண்டாமா? ஏற்கெனவே நாம் பல இடங்களை, அதன் முக்கியத்துவம் உணராமல் கற்களைப் பெயர்த்தும் கோபுரங்களைச் சிதைத்தும் சிலைகளை உடைத்தும் அழித்துவிட்டோமே தம்பி.

**கதிர்:** ஆமாம் ஐயா. நீங்கள் சொல்வது சரியே. வரலாற்றைப் படைத்த நமக்கு அதனைப் பாதுகாக்கத் தெரியவில்லை. தஞ்சைக் கோவிலில் நந்தியும் சிகரமும் ஒற்றைக்கல்லால் ஆனதுன்னு கேள்விப்பட்டிருக்கேன் ஐயா.



திட்பமும் நுட்பமும்



ஃப்ரெஸ்கோ ஓவியங்கள்

ஃப்ரெஸ்கோ என்ற இத்தாலியச் சொல்லுக்குப் 'புதுமை' என்று பொருள். சுண்ணாம்புக் காரைப்பூச்சு மீது அதன் ஈரம் காயும் முன் வரையப்படும் பழமையான ஓவியக் கலைநுட்பம் இது. இவ்வகை ஓவியங்களை அஜந்தா, எல்லோரா, சித்தன்னவாசல் போன்ற இடங்களிலும் காணலாம்.

**பெரியவர் :** இங்குள்ள நந்தி, சோழர் காலத்தைச் சார்ந்தது அன்று. நாம் பார்க்கும் இந்தப் பெரிய நந்தியும் மண்டபமும் நாயக்கர் காலத்தது தம்பி. சோழர் காலத்து நந்தி தற்போது தென்புறத் திருச்சுற்றில் உள்ளது. இன்னொரு செய்தி சொல்கிறேன் கேளுங்கள், அந்தச் சிகரத்திலுள்ள பிரமந்திரக் கல் ஒற்றைக்கல் அன்று. பதின்மூன்று தளங்களை உடைய கருவறை விமானத்தின் மேல் எண்பட்டை அமைப்பில் ஆரஞ்சுப்பழச்சுளை போன்று எட்டுக் கற்கள் நெருக்கமாக வைத்து ஒட்டப்பட்டன.

**நிலா :** புதிய செய்தி ஐயா. கோபுரங்களை உயரமாகக் கட்டுவது என்பது பின்னால் வந்த பழக்கமில்லையா கதிர்? பழைய கோவில்களில் கோபுரங்கள் சிறியதாக இருப்பதைப் பார்த்திருக்கிறேன். நம்முடைய தமிழக அரசின் சின்னமே கோவில் கோபுரம்தானே!

கதிர்: 12ஆம் நூற்றாண்டிலிருந்து கோபுரங்கள் தனிச்சிறப்புப் பெற்றன என்று சொல்லலாம். வெளிக்கோபுரத்தை உயரமாகவும் உட்கோபுரத்தை உயரம் குறைவாகவும் இரண்டு வகைக் கோபுரங்களைக் கட்டும் புதிய மரபைத் தோற்றுவித்தவன் இராசராசன். அதனைத் திருவாயில் என்று சொல்வார்கள். கங்கைகொண்ட சோழபுரம், தாராசுரம், திரிபுவனம் ஆகிய இடங்களில் இரண்டு வாயில்கள் இருப்பதைப் பார்த்திருக்கிறோம்தானே நிலா!

பெரியவர்: நான்கு புறங்களிலும் நான்கு கோபுரங்கள் எழுப்பப் பெறும் மரபு, இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்திலிருந்து தொடங்கியது. கீழ்ப்பகுதியைக் கல்லாலும் மேற்பகுதியைச் செங்கற்களாலும் கட்டியிருப்பர். புகழ்பெற்ற கோவில்கள் பலவற்றிலும் மிகவுயர்ந்த கோபுரத்தை எழுப்பியது விஜயநகர அரசு. காஞ்சி, தில்லை, திருவண்ணாமலை, திருவரங்கம், மதுரை ஆகிய இடங்களில் உள்ள கோவில்களில் உள்ள கோபுரங்கள் எல்லாமே 150அடிக்கு மேல் உயரம் உள்ளவை.

நிலா: இராசராசன் காலத்தில் பெண் அதிகாரிகள் அரசுப்பணிகளில் இருந்திருக்கிறார்கள் தெரியுமா! இராசராசனின் பட்டத்தரசி ஒலோகமாதேவி திருவையாற்றில் கட்டிய கோவில் ஒலோகமாதேவீச்சுரம் என்று வழங்கப்படும். அந்தக் கோவிலில் உள்ள கல்வெட்டில்,

> "உடன் கூட்டத்து அதிகாரம் செய்கின்ற
>
> கோவலூரு டையான் காடந்
>
> னூற்றெண்மனையும் அதிகாரிச்சி
>
> எருதந் குஞ்சிர மல்லியையும்"

என்ற வரிகளில் 'எருதந் குஞ்சிர மல்லி' என்ற பெண் அதிகாரியைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பெரியவர் : அதே கோவிலில் முதலாம் இராசாதிராசன் காலத்திலும் ஓர் அதிகாரிச்சி பற்றிய குறிப்பு இருக்கிறது. அவர் பெயர், அதிகாரிச்சி சோமயன் அமிர்தவல்லி. மகிழ்ச்சிதானே!

கதிர்: ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பெண்கள் அதிகாரிகளாகப் பணிபுரிந்திருக்கின்றனர் என்பது ஆச்சரியமாக இருக்கே! நிலா, இந்தச் செய்திகளைப் பற்றி எனக்குச் சொல்லவேயில்லையே!

நிலா: அது இருக்கட்டும். ஐயா, நாங்கள் இருவரும் தொடர்ச்சியாக, கட்டடக்கலை பற்றி ஆய்வு செய்து வருவதால் ஓரளவு இந்தச் செய்திகள் தெரியும். உங்களைப் பார்த்தால் சாமியாரைப் போல் இருக்கிறீர்கள். ஆனால், எங்களுக்குத் தெரியாத தகவல்களையும் சொல்கிறீர்களே.....

பெரியவர்: இதே ஊரில் வசிக்கும் கல்தச்சன் நான். என் முன்னோர்கள் அல்லவா இப்படிப்பட்ட பெருங்கோவில்களை எழுப்பியிருக்கிறார்கள். கற்களே கிடைக்காத காவிரிச் சமவெளிப் பகுதியில் இவ்வளவு உயரத்தில் ஒரு கற்கோவில். தஞ்சையின் பெருமை இந்தக் கோவில். அடடா! இரண்டு, மூன்று தளங்களை மட்டுமே கொண்டு கோவில் கட்டிவந்த காலத்தில் புதிய மரபு படைத்தவன் இராசராசன். என் தந்தை காலத்தில்கூட, கற்சிற்பங்கள் செய்திருக்கிறோம். அவ்வப்போது இந்தக் கோவிலுக்கு வருவேன். இங்கு வந்துவிட்டால் என் காதில் கற்களைச் செதுக்கும் உளியின் ஓசையும் பெருந்தச்சனின் ஆணைகளும் ஒலிக்கத் தொடங்கிவிடும். அதன் கண்ணியைப் பிடித்துக்கொண்டு அந்த நூற்றாண்டின் பெருந்தச்சர்களான என் முன்னோர்களை வியந்தபடி இங்கே அமர்ந்திருப்பேன்.

(பேசியவாறே விடைபெற்றுச் செல்கிறார் பெரியவர்)

கோவிலை எடுப்பித்தவர்கள் பற்றிய கல்வெட்டில்,

"நாம் கொடுத்தனவும், நம் அக்கன் கொடுத்தனவும், நம் பெண்டுகள் கொடுத்தனவும், கொடுப்பார் கொடுத்தனவும் இந்தக் கல்லிலே வெட்டி அருள்க...."

என்று கோவில் கட்ட உதவியவர்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். தான் மட்டுமே பங்களிக்காமல் மற்றவர்களின் உதவியையும் பெற்றதோடு அதனைக் கல்வெட்டாகவும் ஆவணப்படுத்தியிருக்கும் இராசராசனின் பாங்கு போற்றத்தக்கது. தனக்கு அடுத்தபடியான இடத்தைத் தன் தமக்கை குந்தவை தேவிக்கு (அக்கன்) அளித்துள்ளார். அடுத்து, பெண்டு என்னும் சொல்லால் அவருடைய மனைவியர் கொடுத்த கொடையைக் குறிப்பிடுவதோடு கொடுப்பார் கொடுத்தனவும் என்று சொல்வதன் மூலம் இராசராசன், மற்றவர்களின் கொடையையும் உலகம் அறியும்படி செய்துள்ளார்.

*கதிர் :* *தஞ்சைக் கோவிலை எந்த வகையிலும் மறக்க முடியாது. எத்தனை எத்தனை சிறப்புகள், அடடா! பெரியவர் சொன்ன புதிய தகவல்கள் ஆச்சரியம் இல்லையா நிலா. இப்போது, திரும்பவும் கோவிலைச் சுற்றிப் பார்க்கலாம்; படங்கள் எடுக்கணும். இவ்வளவு தகவல்கள் சொன்னவர் பெயரைக்கூட நாம் கேட்க மறந்து விட்டோமே..... சரி, நாமும் கிளம்புவோம்.*

*(இருவரும் கோவிலை மீண்டும் சுற்றி வருகின்றனர்)*

*நிலா:* *கதிர், இங்கே பாரேன், கோவிலைக் கட்டிய தச்சர்களின் பெயர்களைப் பொறிச்சிருக்காங்க. வீரசோழன் குஞ்சரமல்லன் இராசராசப் பெருந்தச்சன், மதுராந்தகனான நித்தவினோதப் பெருந்தச்சன், இலத்திசடையனான கண்டராதித்தப் பெருந்தச்சன். எடுப்பித்தவன் பெயர் மட்டுமே பொறிக்கப்படும் நிலையில், தச்சர்களின் பெயரும் இந்த அழியாக் கோவிலில் பதித்திருப்பது மேலும் ஒரு புதுமை.*

*கதிர் :* *ஆமாம் நிலா. இந்த வாரம் நம்முடைய வலைத்தளத்தில் தஞ்சைப் பெரிய கோவிலைப் பற்றி விரிவான கட்டுரையையும் படங்களையும் பதிவேற்றுவோம்.*



கற்பவை கற்றபின்...

1. அருகிலுள்ள கோவில் சிற்பங்கள், கோபுரங்கள் குறித்த சிறப்புத் தகவல்களைத் திரட்டிப் படங்களுடன் தொகுப்பேடு உருவாக்குக.
2. 'தட்சிண மேரு' – குறித்துப் பாடத்தில் சொல்லப்படாத பல்வேறு தகவல்களைத் திரட்டி வகுப்பில் கலந்துரையாடுக.

கவிதைப்பேழை

இயல் 6

# ஆத்மாநாம் கவிதைகள்







ஆத்மாநாம், கவிதை என்ற கலை வடிவத்தின் அழகியல் ஊடாக மானுடத்தின் விழுமியங்களை உரத்த குரலில் பேசியவர். கவிதை பாடுதலைச் சமூக அக்கறையாக மாற்றிக்கொண்டவர். இக்கவிதையில் அணிலையும் புளியமரத்தையும் காட்சிப்படுத்தி நம்முடன் உரையாடுகிறார்.

## கேள்வி



*காலை எழுந்ததும்*
*இரை தேடத் துள்ளும்*
*இவ்வணில்*
*இரவு எங்கே உறங்குகிறது*
*மலர்க்கிளைப் படுகையிலா*
*ஆற்றுமணற் சரிவிலா*
*சதுர வட்டக் கோண மயக்கச் சந்து பொந்துகளிலா*
*நிச்சயம் நூற்றுக்கணக்கில் இருக்கும்*
*இவ்வணில்கள்*
*ஒன்றல்ல தம் குழந்தைத்தனமான முகங்களுடன்*
*சிறு பிள்ளைக்கைகளுடன்*
*அனுபவித்து உண்ணும்*
*இவை*
*தங்களைப்பற்றி என்ன கனவு காணும்*
*உணவையும் உறக்கத்தையும் தவிர.*

## ஒரு புளியமரம்



*ஒரு புளியமரம் சமீபத்தில்*
*என் நண்பனாயிற்று*
*தற்செயலாய்*
*அப்புறம் நான் சென்றபோது*
*நிழலிலிருந்து ஒரு குரல்*
*என்னைத் தெரிகிறதா*
*நினைவிருக்கிறதா*
*அன்றொரு நாள்*
*நீ புளியம்பழங்கள்*
*பொறுக்க வந்தபோது*
*என் தமக்கையின் மடியில்*
*அயர்ந்து போனாய்*
*அப்போது குளிர்ந்த காற்றை வீசினேனே*
*உன் முகத்தில் உடலில் எங்கும்*
*வா எப்படியும் என் மடிக்கு.*

### நூல்வெளி



மதுசூதனன் என்ற இயற்பெயரைக்கொண்ட ஆத்மாநாம் தமிழ்க்கவிதை ஆளுமைகளில் குறிப்பிடத்தக்கவர். காகிதத்தில் ஒரு கோடு அவருடைய முக்கியமான கவிதைத் தொகுப்பு. 'ழ' என்னும் சிற்றிதழை நடத்தியவர். கவிதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு என்று மூன்று தளங்களிலும் இயங்கியவர். இவருடைய கவிதைகள் ஆத்மாநாம் கவிதைகள் என்னும் பெயரில் ஒரே தொகுப்பாக்கப்பெற்றுள்ளன.

### கற்பவை கற்றபின்...



உங்களுக்குப் பிடித்த கவிதை ஒன்றைப் படித்து அதன் நுட்பத்தை வகுப்பறையில் பகிர்ந்து கொள்க.

கவிதைப்பேழை

இயல் 6

# குற்றாலக் குறவஞ்சி




**நுழையும்முன்**

சங்க இலக்கியங்கள் வீரர்களை, அரசர்களை, வள்ளல்களை, தனிமனிதர்களைப் பாடின. சமய நூல்கள் கடவுளரைப் பாடின சிற்றிலக்கியங்கள் கடவுளரோடு மனிதர்களையும் பாடின. அவற்றுள் இயற்றமிழின் செழுமையையும் இசைத்தமிழின் இனிமையையும் நாடகத்தமிழின் எழிலினையும் ஒருங்கேகொண்டு முத்தமிழ்க் காவியமாகத் திகழ்வது குற்றாலக் குறவஞ்சி.

குறவஞ்சி என்பது ஒரு வகை நாடக (opera) இலக்கிய வடிவமாகும். இது சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று. பாட்டுடைத் தலைவன் உலா வரக்கண்ட தலைவி, அத்தலைவன் மீது காதல்கொள்ள, குறவர் குலத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தி தலைவிக்குக் குறிகூறிப் பரிசில் பெறும் செய்திகளைக் கூறுவதால் குறவஞ்சி என்னும் பெயர் பெற்றது. இது குறத்திப்பாட்டு என்றும் வழங்கப்படுகின்றது. பரிசில் பெற்றுவரும் சிங்கிக்கும் சிங்கனுக்கும் இடையிலான உரையாடல் சுவைமிக்கது.

### சிங்கனுக்கும் சிங்கிக்கும் உரையாடல் கண்ணிகள்

சிங்கன் : இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்
எங்கே நடந்தாய் நீ சிங்கி? (எங்கே)

சிங்கி : கொத்தார் குழலார்க்கு வித்தாரமாகக்
குறிசொல்லப் போனனடா சிங்கா! (குறிசொல்ல)

சிங்கன் : பார்க்கில் அதிசயம் தோணுது சொல்லப்
பயமா இருக்குதடி சிங்கி! (பயமா)

சிங்கி : ஆர்க்கும் பயமில்லை தோணின காரியம்
அஞ்சாமல் சொல்லடா சிங்கா! (அஞ்சாமல்)

சிங்கன் : காலுக்கு மேலே பெரிய விரியன்
கடித்துக் கிடப்பானேன் சிங்கி? (கடித்து)



சிங்கி : சேலத்துநாட்டில்குறிசொல்லிப்பெற்ற
சிலம்பு கிடக்குதடா சிங்கா! (சிலம்பு)

சிங்கன் : சேலத்தார் இட்ட சிலம்புக்கு மேலே
திருகு முறுகு என்னடி சிங்கி? (திருகு)

சிங்கி : கோலத்து நாட்டார் முறுக்கிட்ட தண்டை
கொடுத்த வரிசையடா சிங்கா! (கொடுத்த)

*சிங்கன் :* நீண்டு குறுகியும் நாங்கூழுப் போல
நெளிந்த நெளிவு என்னடி சிங்கி?
(நெளிந்த)

*சிங்கி :* பாண்டிய னார்மகள் வேண்டும்
குறிக்காகப்
பாடகம் இட்டதடா சிங்கா! (பாடகம்)

*சிங்கன் :* மாண்ட தவளை உன் காலிலே கட்டிய
மார்க்கம் அது ஏது பெண்ணே சிங்கி?
(மார்க்கம்)

*சிங்கி :* ஆண்டவர் குற்றாலர் சந்நிதிப்
பெண்கள்
அணிமணிக் கெச்சம் அடா சிங்கா!
(அணிமணி)

*சிங்கன் :* சுண்டு விரலிலே குண்டலப் பூச்சி
சுருண்டு கிடப்பானேன் சிங்கி?
(சுருண்டு)

*சிங்கி :* கண்டிய தேசத்தில் பண்டுநான் பெற்ற
காலாழி பீலியடா சிங்கா! (காலாழி)

## சொல்லும் பொருளும்

கொத்து - பூமாலை; குழல் - கூந்தல்; கோலத்து நாட்டார் - கலிங்க நாட்டார்; வரிசை - சன்மானம்; நாங்கூழ் - மண்புழு.

## இலக்கணக்குறிப்பு

**மாண்ட** தவளை – பெயரெச்சம்.

## பகுபத உறுப்பிலக்கணம்

பெற்ற – பெறு (பெற்று) + அ

பெறு – பகுதி

பெற்று – ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டியது

அ – பெயரெச்ச விகுதி.

## புணர்ச்சி விதி

பயமில்லை – பயம் + இல்லை

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – பயமில்லை.

### நூல்வெளி



தமிழ்நாட்டின் தென்காசிக்கு அருகில் அமைந்திருக்கும் குற்றாலம் என்னும் ஊரின் சிறப்பைப் புகழ்ந்து, அங்குள்ள குற்றாலநாதரைப் போற்றிப் பாடப்பட்டது குற்றாலக் குறவஞ்சி. இந்நூல், திரிகூட ராசப்பக் கவிராயரின் 'கவிதைக் கிரீடம்' என்று போற்றப்பட்டது. மதுரை முத்துவிசயரங்க சொக்கலிங்கனார் விருப்பத்திற்கு இணங்கப் பாடி அரங்கேற்றப்பட்டது. திரிகூட ராசப்பக் கவிராயர் திருநெல்வேலியில் தோன்றியவர். குற்றாலநாதர் கோவிலில் பணிபுரியும் காலத்தில் சைவசமயக் கல்வியிலும் இலக்கிய இலக்கணங்களிலும் தேர்ச்சி பெற்றார். 'திருக்குற்றாலநாதர் கோவில் வித்துவான்' என்று சிறப்புப் பட்டப்பெயர் பெற்றவர். குற்றாலத்தின்மீது தலபுராணம், மாலை, சிலேடை, பிள்ளைத்தமிழ், யமக அந்தாதி முதலிய நூல்களையும் இயற்றியிருக்கின்றார்.

### கற்பவை கற்றபின்...



1. குறவஞ்சியில் கூறப்பட்டுள்ள அணிகலன்களின் பெயர்களைப் படங்களுடன் திரட்டி அணிகலன்கள் அணியப்படுவதற்கான அறிவியல் காரணங்களையும் இணைத்து, படத்தொகுப்பேடு உருவாக்குக.
2. குறவஞ்சியில் இடம்பெறும் உரையாடல் நயத்தைப் புலப்படுத்துக.

கவிதைப்பேழை

இயல் 6

## திருச்சாழல்




**நுழையும்முன்**

மொழி விளையாட்டின் மூலம் இறைவனின் பெருமை பேசும் செய்யுள் வகை திருச்சாழல் ஆகும். ஒரு பெண் இறைவனைப் பழிப்பது போலவும் இன்னொருத்தி இறைவனது செயலை நியாயப்படுத்துவது போலவும் பாடப்படுவது இது. இவ்வகையில் மாணிக்கவாசகர் இறைவனின் பெருமையைத் தெரிவிக்கும் இருபது பாடல்களைப் பாடியுள்ளார்.

*கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை*
*தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ*
*தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினுங்*
*காயில் உலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ.* 1

*கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த*
*ஆலாலம் உண்டான் அவன்சதுர்தான் என்னேடீ*
*ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட*
*மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ.* 2

*தானந்தம் இல்லான் தனையடைந்த நாயேனை*
*ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ*
*ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்*
*வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ.* 3

*– மாணிக்கவாசகர்*

### சொல்லும் பொருளும்

காயில் – வெகுண்டால்; அயன் – பிரமன்; மால் – விஷ்ணு; ஆலாலம் – நஞ்சு; அந்தம் – முடிவு.

### பாடலின் பொருள்

பெண் 1: சுடுகாட்டைக் கோயிலாகவும் புலித்தோலை ஆடையாகவும் கொண்ட உங்கள் தலைவனுக்குத் தாயும் தந்தையும் இல்லை. இத்தன்மையனோ உங்கள் கடவுள்?

பெண் 2 : எங்கள் கடவுளுக்குத் தாய் தந்தை இல்லாவிடினும் அவன் சினந்தால் உலகம் அனைத்தும் கற்பொடியாகிவிடும்.

பெண் 1: அக்காலத்தில் பாற்கடலைக் கடைந்தபோது உண்டாகிய நஞ்சை, சிவன் உண்டான். அதற்குக் காரணம் யாதோ?

பெண் 2: அந்த நஞ்சை இறைவன் உண்டிருக்காவிட்டால் பிரமன், விஷ்ணு உள்ளிட்ட தேவர்கள் அன்றே அழிந்து ஒழிந்திருப்பார்கள்.

பெண் 1: தான் முடிவு இல்லாதவனாக இருந்தும் அவனை அடைந்த என்னை ஆனந்த வெள்ளத்தில் அழுந்தச் செய்தானே, இது என்ன புதுமை?

பெண் 2: உன்னை ஆனந்த வெள்ளத்தில் அழுந்தச் செய்த திருவடிகள் தேவர்களுக்கும் மேன்மையான பொருளாகும்.

### இலக்கணக்குறிப்பு

சுடுகாடு, கொல்புலி, குரைகடல் – வினைத்தொகைகள்;
நல்லாடை – பண்புத்தொகை.

### உறுப்பிலக்கணம்

**உண்டான் – உண் + ட் + ஆன்**

உண் – பகுதி, ட் – இறந்தகால இடைநிலை

ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி.

### புணர்ச்சி விதி

**கற்பொடி – கல் + பொடி**

லள வேற்றுமையில் வலி வரின் றடவும் – கற்பொடி.



தெரியுமா?

சாழல் என்பது பெண்கள் விளையாடும் ஒரு வகையான விளையாட்டு. ஒரு பெண் வினா கேட்க, மற்றொரு பெண் விடை கூறுவதாக அமைந்திருக்கும். இறைவன் செயல்களையும் அவற்றால் விளங்கும் உண்மைகளையும் விளக்குவது திருச்சாழல் வடிவமாகும். திருமங்கையாழ்வாரும் தமது பெரிய திருமொழியில் இதே வடிவத்தைப் பயன்படுத்தியுள்ளார். மக்கள் வழக்கில் ஒருவர் விடுகதை சொல்லியும் அதற்கு மற்றொருவர் விடை கூறியும் விளையாடுவது இன்றைக்கும் வழக்கில் உள்ளது.

**உலகனைத்தும் – உலகு + அனைத்தும்**

உயிர்வரின் உக்குறள் மெய் விட்டோடும், உலக் + அனைத்தும்

உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே உலகனைத்தும்

**திருவடி – திரு + அடி**

ஏனை உயிர்வழி வவ்வும், திரு + வ் + அடி

உடல் மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே திருவடி.



நூல்வெளி

திருவாசகம் என்பது சிவபெருமான் மீது பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பு ஆகும். இதனை இயற்றியவர் மாணிக்கவாசகர். இது சைவ சமயத்தின் பன்னிரு திருமுறைகளில் எட்டாம் திருமுறையாக உள்ளது. திருவாசகத்தில் 51 திருப்பதிகங்கள் உள்ளன. இவற்றுள் மொத்தம் 658 பாடல்கள் அடங்கியுள்ளன. இந்நூலில் 38 சிவத்தலங்கள் பாடப் பெற்றுள்ளன. பக்திச் சுவையும் மனத்தை உருக்கும் தன்மையும் கொண்டவை திருவாசகப் பாடல்கள். 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்பது முதுமொழி. திருச்சாழல் தில்லைக் கோவிலில் பாடப்பெற்றது. ஜி.யு. போப் திருவாசகம் முழுமையையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். மாணிக்கவாசகர் சைவ சமயக் குரவர் நால்வரில் ஒருவர். திருவாதவூரைச் சேர்ந்தவர். இவர் அரிமர்த்தன பாண்டியனிடம் தலைமையமைச்சராகப் பணியாற்றினார். மாணிக்கவாசகர் இயற்றிய நூல்கள் திருவாசகம், திருக்கோவையார் ஆகியனவாகும்.



கற்பவை கற்றபின்...

இரண்டு அடி வாங்கினால்தான்
திருந்துவாய் என்றால்
வள்ளுவரிடம் வாங்கு.

ஏய்! யாரங்கே ஆற்றில்
பாலைக் கொட்டிவிட்டு ஓலமிடுவது?
அருவி.

பழிப்பது போலப் புகழும் மொழி நுட்பம் இக்கவிதைகளின் பொருளை மெருகேற்றுகிறதா? விவாதிக்க.

விரிவானம்

இயல் 6

# இசைத்தமிழர் இருவர்




**நுழையும்முன்**

இசை! கலைகளின் மகுடம்! உணர்வுகளின் வினையூக்கி. இசை, குருதியைச் சூடேற்றும்; உயிரை உருக்கும்; ஆழ்கடல் அமைதியாய் மனத்தை உறங்க வைக்கும். இரசனையின் முகவரிக்கு இசைமொழியில் கடிதமெழுதும் காற்றின் கவிஞர்களே இசைக்கலைஞர்கள். தமிழகத்தின் காட்டிலும் மேட்டிலும் வயல் சேற்றிலும் தவழ்ந்த இசையைச் சீராட்டி, மெருகூட்டி உலகுக்குத் தந்து மகிழ்ந்தவர் இருவர். இவ்விருவரும் உலக இசைப்பேரேட்டின் தமிழகத்து முத்திரைகள்; அவர்கள், சிம்பொனித் தமிழர் இளையராஜா, ஆஸ்கர் தமிழர் ஏ.ஆர். இரகுமான் ஆகியோர் ஆவர்.

## சிம்பொனித் தமிழர்

ஆசியக் கண்டத்தில் பிறந்து வளர்ந்தவர்களுக்கு, சிம்பொனி இசைக்கோவையை உருவாக்கும் திறன் கைவராது என்பது மேற்கத்திய இசை வல்லுநர்களின் கருத்தோட்டமாகும். இந்தக் கற்பனைவாதத்தை உடைத்து ராயல் ஃபில்ஹார்மோனிக் இசைக்குழுவுக்கு, சிம்பொனி இசைக்கோலத்தை அமைத்துக்காட்டியவர் இசைமேதை (மாஸ்ட்ரோ) இளையராஜா. அவர், தமிழ்நாட்டின் தேனி மாவட்டத்தில் உள்ள பண்ணைப்புரத்தைச் சேர்ந்தவர். அவருடைய இயற்பெயர் இராசையா. தாய் பாடும் தாலாட்டில் தொடங்கித் தமிழ்நாட்டின் அனைத்து இசை வடிவங்களையும் அசைபோட்டு வளர்ந்த தமிழினத்தின் பெருமைக்குரிய இசை மேதை அவர்.



அன்னக்கிளி படத்தில் இசை அமைப்பாளராக அறிமுகமான இளையராஜாவின் இசையோட்டம் தமிழர் வாழ்ந்த திசைகளில் எல்லாம் தென்றலாய் நுழைந்து புதிய வாசல்களைத் திறந்தது. அவரிடமிருந்து புதுப்புது மெட்டுகள் சிறகு விரித்தன. கண்களை மூடிக்கொண்டு இளையராஜாவின் பாடல்களைக் கேட்டால், பாடலின் ஒவ்வொரு சரணத்திற்கு இடையிலும் அவர் சுழற்றும் இசைச் சிலம்பம் நம்மைப் புதிய திசைகளில் பறக்க வைக்கும். அவர், பழந்தமிழ் இசையையும் உழைக்கும் மக்களின் துள்ளல் இசையையும் மனத்தை மயக்கும் வகையில் கலந்து தந்தார். இவர், திரையிசையில் கர்நாடக இசை என்னும் பழந்தமிழிசையின் உன்னதத்தை உணர வைத்தவர்; பல இராகங்களுக்குத் திரையிசையில் கொடுத்த அறிமுக மெட்டுகள் மெல்லிசையில் புதிய உயரங்களைத் தொட்டன.

1970களின் தொடக்கத்தில் பிறமொழிப் பாடல்களைச் சுமந்து திரிந்த தமிழ்ச்செவிகள் விடுதலை பெற்று, தமிழ்ப்பாடல்களை நோக்கித் திரும்பியதற்கு இளையராஜாவே காரணமெனலாம். எழுபது, எண்பதுகளில் மெல்லத் தோன்றிப் புது வேகம்கொண்ட சமூக மாற்றங்களின் குறியீடாக இளையராஜாவின் இசை திகழ்ந்தது. பின்னணி இசையிலும் பாடல் இசையிலும் விடுபட்டுப்போன வாய்மொழித் தன்மை, யதார்த்தம் ஆகியன பொதிந்த அவருடைய இசை, சாமானியரையும் ஈர்த்தது; அவர்களது வாழ்வின் தருணங்களில் தவிர்க்க முடியாத இடத்தைப் பெற்றதோடு அமைப்புக்கு அப்பாற்பட்ட இசை இயக்கமாகவும் மாறியது. அவர், தமிழ்ச் செய்யுளின் யாப்போசைக் கட்டமைப்புக்குள் இருக்கின்ற இசை ஒழுங்கைப் புரிந்துகொண்டு திரைப்பாடல்களைச் செவியுணர் கனிகளாகவும் பண்பாட்டு வெளிப்பாடாகவும் மாற்றிய பெருமைக்குரியவர்.

அவருடைய இசை ஐவகை நிலப்பரப்புகளையும் காட்சிப்படுத்தும் மெட்டுகளைக் கொண்டது. இன்றளவும் நெடுந்தொலைவுப் பயணங்களின் வழித்துணையாக அவரின் இசை இருப்பதற்கு இதுவுமொரு காரணம். வற்றாத நதிகள் பாயும் மலைகள் நிறைந்த ஜம்மு, காஷ்மீரின் பஹார் இன மக்களின் நாட்டுப்புற இசையில் புல்லாங்குழலில் வழிந்தோடும் பஹாடி முதல் மதுரை மக்களின் கிராமிய இசையிலிருந்து முகிழ்த்துச் செவ்வியல் இசையில் கோலோச்சும் ஆனந்தபைரவி (அன்னக்கிளி உன்னைத் தேடுதே) வரை அவரின் இசையில் பண்கள் இழையோடுகின்றன. எம்மொழியில் இசையமைத்தாலும், அவர் அம்மண் மணத்துடன் தம்மை இணைத்து இசையமைப்பதே, மக்கள் அவருடைய இசையில் ஒன்றுவதற்குக் காரணமாகும்.

| பெற்ற விருதுகள் சில: |
|---|
| இந்திய அரசு – பத்ம விபூஷண் விருது |
| சிறந்த இசையமைப்பாளருக்கான தேசிய விருது |
| சிறந்த பின்னணி இசைக்கான தேசிய விருது |
| தமிழ்நாடு – கலைமாமணி விருது |
| மத்தியப்பிரதேசம் – லதா மங்கேஷ்கர் விருது |
| கேரளம் – நிஷாகந்தி சங்கீத விருது |

இந்திய இசைமேதைகள் அனைவராலும் மதிக்கப்படுபவர் இளையராஜா. அவரின், 'எப்படிப் பெயரிடுவேன்?' (HOW TO NAME IT?) என்னும் இசைத்தொகுப்பும் புல்லாங்குழல் இசைக்கலைஞர் ஹரிபிரசாத் சௌராஸியாவுடன் இணைந்து வெளியிட்ட 'காற்றைத் தவிர ஏதுமில்லை' (NOTHING BUT WIND) என்னும் இசைத்தொகுப்பும் இசையுலகின் புதிய முயற்சிகள் எனக் கொண்டாடப்பட்டன. மகிழ்ச்சி, ஏக்கம், நம்பிக்கை, உற்சாகம், வலி போன்ற மனித உணர்வுகளுக்கும் இசை வடிவம் கொடுக்க முடியும் என்பதை "இந்தியா 24 மணிநேரம் (INDIA 24 HOURS)" என்னும் ஆவணக் குறும்படத்தின் பின்னணி இசையில் வெளிப்படுத்தினார்.

மாணிக்கவாசகர் எழுதிய திருவாசகப் பாடல்களுக்கு ஆரட்டோரியோ (Oratorio) என்னும் இசை வடிவில் இசையமைத்துள்ளார். 'இராஜாவின் ரமணமாலை', 'இளையராஜாவின் கீதாஞ்சலி' என்னும் தமிழ் இசைத்தொகுப்புகளையும் கன்னட மொழியில் 'மூகாம்பிகை' என்ற பக்தி இசைத் தொகுப்பினையும் வெளியிட்டுள்ளார். அத்துடன் ஆதிசங்கரர் எழுதிய மீனாட்சி ஸ்தோத்திரம் என்ற பக்திப்பாடலுக்கும் இசையமைத்துள்ளார். பஞ்சமுகி என்ற கர்நாடகச் செவ்வியல் இராகம் அவர் உருவாக்கியதாகும்.

### இளையராஜாவின் இசை நுணுக்கம்

தமிழகத்தின் நாட்டுப்புற இசை வடிவத்தைத் திரையிசையில் தவழவிட்டவராகவே இசைஞானி இளையராஜா அறியப்படுகிறார். ஆனால், மேற்கத்திய இசையை முறைப்படி பயின்ற காரணத்தால் நாட்டுப்புற இசையின்

செவ்வியல் தன்மைகளோடு மேற்கத்திய இசையைக் கலந்து உலவவிட்டார். கவிஞர், மனத்தில் உருவகித்துக் காகிதத்தில் எழுதுவதுபோல், மனத்தின் இசையைக் குறியீடுகளாகக் காகிதத்தில் எழுதிவிடுவார்! இசைஞானி தன் தேடலின் மூலம் மேற்கத்திய இசையுடன் கர்நாடக, இந்துஸ்தானி இராகங்களையும் திரையிசையில் பயன்படுத்தியிருக்கிறார்.

நாட்டுப்புறப் பாடலுக்குக் கர்நாடக இசை வடிவமும் கல்யாணி இராகத்தின் ஆரோகண சுரங்களைக்கொண்டே (ஏறுவரிசைச் சுரங்கள்) 'கலைவாணியே உனைத்தானே' என்னும் பாடலுக்கு மெட்டமைத்திருக்கிறார். மூன்றே மூன்று சுரங்களைக்கொண்டு ஒரு தெலுங்குப் பாடலுக்கு இசையமைத்தும் இருக்கிறார்; நான்கே இசைக்கருவிகளைக்கொண்டு ஒரு பாடலுக்கு இசையமைத்திருக்கிறார். முழுத் திரைப்படத்துக்கும் அரை நாளில் பின்னணி இசையும் அமைத்துக் கொடுத்திருக்கிறார் (நூறாவது நாள்). பிற நாட்டின் இசைவடிவத்தை நம் மண்ணுக்கேற்ற வகையில் மாற்றம் செய்வதோடு திரைப்படப் பின்னணி இசைக்கோவையைக்கூட உணர்வின் மொழியாக மாற்றித் தருவதே அவருடைய தனிச்சிறப்பாகும்.

தமிழ் மட்டுமன்றி இந்தி, தெலுங்கு, மலையாளம், கன்னடம், மராத்தி என நம் நாட்டின் பிற மொழிப்படங்களுக்கும் இசையமைத்திருக்கின்றார். இளையராஜா இசைக்கலைஞர் மட்டுமல்லர்; சிறந்த ஒளிப்படக் கலைஞர்; கவிஞர்; பாடகர்; 'பால்நிலாப் பாதை', 'வெட்டவெளிதனில் கொட்டிக் கிடக்குது' உள்ளிட்ட பல நூல்களை எழுதியிருக்கும் எழுத்தாளரும் ஆவார்.

பரிபாடலில் நோதிறம், பாலையாழ், காந்தாரம் முதலிய பண்கள் காணப்படுகின்றன. சைவத்திருமுறைகளில் காரைக்கால் அம்மையார் நட்டபாடையிலும் இந்தளத்திலும் பாடியுள்ளார்.

தேவாரத்தில் 23 பண்களில் பாடல்கள் உள்ளன. தேவாரத்தில் இல்லாது நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் மட்டும் காணப்படும் பண்கள்: நைவளம், அந்தாளி, தோடி, கல்வாணம், பியந்தை, குறண்டி, முதிர்ந்த இந்தளம் ஆகியவை. சாளரபாணி என்ற பண் ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பாவில் காணப்படுகிறது.

மகாத்மா காந்தி எழுதிய ஒரே பாடலான "நம்ரதா கே சாகர்" என்னும் பாடலுக்கு இசையமைத்து, இந்துஸ்தானி இசைப் பாடகர் அஜொய் சக்கரபர்த்தியைப் பாடவைத்து இசைக்கோவையை வெளியிட்டிருக்கிறார். ஆசியாவிலேயே முதன்முதலில் சிம்பொனி (Symphony) என்னும் மேற்கத்திய செவ்வியல் வடிவ இசைக் கோவையை உருவாக்கியவர் இவரே. சிம்பொனி இசைப் பணியை எழுதக் குறைந்தது ஆறு மாதமாவது ஆகும்; வெறும் பதின்மூன்று நாள்களில் இச்சாதனையை நிகழ்த்தியிருக்கிறார். பண்டைய தமிழரசர்களின் ஆட்சி வட இந்தியா வரையிலும் பரவியிருந்தது. ஆனால், இளையராஜாவின் இசை ராஜாங்கமோ உலகம் முழுவதும் பரவிக் கிடக்கிறது.

## ஆஸ்கர் தமிழர்

அமெரிக்காவின் கோடாக் அரங்கில் ஆஸ்கர் விருதுகள் அறிவிக்கும் தருணம். இன்னும் சில நிமிடங்களில் இசைக்கான விருதுக்குரியவர் அறிவிக்கப்பட இருக்கிறார். அவ்விருதுக்குப் பரிந்துரைக்கப்பட்ட ஐந்து இசையமைப்பாளர்களும் தம்முள் விருதுக்குரியவர் யார்? என அறியும் ஆவலில் அமர்ந்திருக்கின்றனர். அவர்களில் நால்வர் அவ்விருதுக்குப் பலமுறை பரிந்துரைக்கப்பட்டவர்கள்; ஒருவர் மட்டுமே புதியவர். அவருக்கே 2009ஆம் ஆண்டிற்கான சிறந்த திரைப்படப் பின்னணி இசைக்கான ஆஸ்கர் விருது என்று அறிவிக்கப்பட்டது.

அரங்கத்தின் கரவொலி அடங்குவதற்கு முன்பே சிறந்த திரையிசைப் பாடலுக்கான விருதுக்கும் இவரின் பெயரே அறிவிக்கப்படுகிறது. இரண்டு ஆஸ்கர் விருதுகள் ஒருவருக்கே! இரு கரங்களிலும் விருதுகளை ஏந்தியவாறு உரையைத் தொடங்கியவர், தம் தாய்மொழியான தமிழில் உரையை நிறைவு செய்கிறார். ஆம்! அவர்தான், உலக அரங்கில் சாதனை நாயகனாய்த் திகழும் இசைப்புயல் ஏ.ஆர். இரகுமான்.

தம் இசைக்குக் கிடைத்த இரு விருதுகளையும் கையில் ஏந்திய நிலையில், கடந்து வந்த பாதை அவர் கண்முன்னே நிழலாடியது. இவருடைய தந்தை ஆர்.கே. சேகர் மலையாளத் திரைப்பட உலகில் புகழுடன் விளங்கிய இசைக்கலைஞர். இளம்வயதிலேயே ஏ.ஆர். இரகுமான் தம் தந்தையின் இசைப்பயணத்தில் இணைந்து கொண்டார். தந்தையைச் சூழ்ந்திருந்த இசைக்கருவிகள் அவருள் இசை வேட்கையைத் தூண்டின. இசைக்கலைஞர்கள் வியக்கும் வகையில் நான்கு வயதிலேயே ஹார்மோனியம் இசைப்பதில் திறமை பெற்றிருந்தார். இளம் வயதிலேயே தந்தையை இழந்து குடும்பப் பொறுப்புகளை ஏற்கும் சூழல் ஏற்பட்டதனால் பள்ளிப்படிப்புக்கு இடையூறு ஏற்பட்டது.

இசைக்குழுக்களில் இரவெல்லாம் பணியாற்றிவிட்டு நேராகப் பள்ளிக்குச் செல்வார். பள்ளியின் நுழைவுவாயிலில் இவரின் தாயார் காத்திருந்து இவருக்குச் சீருடை அணிவித்தும் உணவளித்தும் வகுப்பிற்கு அனுப்பி வைப்பார். இத்தகைய வாழ்க்கைப் போராட்டத்தால் பள்ளிப்படிப்பு பதினோராம் வகுப்புடனே முடிந்துவிட்டது.

ஏ. ஆர். இரகுமான், 1992ஆம் ஆண்டு ரோஜா என்னும் திரைப்படத்திற்கு இசையமைப்பாளராகத் தமது திரையிசைப் பயணத்தைத் தொடங்கினார். இவரின் இசை, தமிழ்த்திரைப்பட இசையுலகில் புதிய எழுச்சியை ஏற்படுத்தியது. தன் முதல் படத்திற்கே தேசிய விருது பெற்ற முதல் இந்திய இசையமைப்பாளர் என்ற சிறப்பினைப் பெற்றார். தம் இசைப்பங்களிப்பால் இளைஞர் உலகின் இசை ஆளுமையாக வளர்ந்தார். அடுத்தடுத்த படங்களில் அவர் வெளிப்படுத்திய மெல்லிசை, கேட்டவர் நெஞ்சங்களில் எல்லாம் சிம்மாசனமிட்டு அமர்ந்தது. தமிழ் யாப்பிலக்கணத்தின் நால்வகைப் பாக்களில் கலிப்பாவின் ஓசை, துள்ளல் ஓசையாகும். இந்தத் துள்ளலோசைக்கு மயங்காதவர்களே உலகில் இல்லை எனலாம். தோற்கருவியால் துடித்தெழும் இந்தத் துள்ளல் ஓசை, கொண்டாட்ட மனநிலையின் வெளிப்பாடு. தமிழ் மக்களின் நெடிய வாழ்வியல் மரபில், துள்ளல் ஓசைச் சாயல் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும். இதனை நுட்பமாக உணர்ந்த ஏ.ஆர். இரகுமான் தம் இசைக் கட்டத்துக்குள் நின்று இளைஞர்களை ஆடவும் பாடவும் வைத்தார்.

பிங்கல நிகண்டு என்னும் நூலில் 103 பண்கள் காணப்படுகின்றன. பண்கள், பாடும் காலங்களுக்கு ஏற்றவாறு பகல் பண், இரவுப் பண், பொதுப் பண் என்று வகுக்கப்பட்டுள்ளன.



உலகை வெற்றிகொள்ளப் புறப்பட்ட தமிழர்களுடன் வலம்வந்த இசைத்தோழமை ஏ.ஆர். இரகுமான். தொண்ணூறுகளில் தொழில்நுட்பக்கல்வி பயின்று உலகெங்கும் பரவிய தமிழ் இளைஞர்களை இணைத்தது அவர்தம் இசை. அவர், உலகின் பல நாடுகளைச் சேர்ந்த இசை, பண்பாட்டுக்

**பெற்ற விருதுகள் சில:**

| | |
|---|---|
| இந்திய அரசு | – பத்ம பூஷண் விருது |
| தமிழ்நாடு | – கலைமாமணி விருது |
| கேரளம் | – தங்கப் பதக்கம் |
| உத்திரப்பிரதேசம் | – "ஆவாத் சம்மான்" விருது |
| மத்தியப்பிரதேசம் | – "லதா மங்கேஷ்கர்" விருது |
| மொரீஷியஸ் | – தேசிய இசை விருது |
| மலேசியா | – தேசிய இசை விருது |
| ஸ்டான்ஃபோர்ட் பல்கலைக்கழகம் | – சர்வதேச இசை விருது |

குறியீடுகளைத் தம் இசையில் தவழவிட்டார். இணைய வழியில் உலவும் இளைஞர்களின் கனவை, இசையாக மொழிபெயர்த்துக் காலப் பதாகையில் ஒலிவண்ணம் தீட்டினார்.

நாட்டுப்புற இசை, கர்நாடக இசை, இந்துஸ்தானி இசை இவற்றுடன் மேற்கத்திய, உலகளாவிய இசை முறைகளையும் கலந்து, புதிய கணினித் தொழில்நுட்ப உதவியுடன் உலகத்தரத்தில் இசையமைத்ததுடன் பல இளம் பாடகர்களையும் அறிமுகம் செய்தார்.

இரகுமானிடம் எல்லோரும் இரசித்துக் கேட்பது அவரின் 'தாளம் உருவாக்கும் முறை'. ஒரு பாடலுக்கான மெட்டை உருவாக்குமுன் அதற்கான தாளத்தைத்தான் முதலில் உருவாக்குவார். பாடலுக்கான சூழலை மனத்தில் உள்வாங்கிக்கொண்டு, அதற்கேற்ற தாளக்கட்டை உருவாக்கி அதனுள் அமிழ்ந்திருக்கும் பாடலுக்கான மெட்டை வெளிக்கொணர்வார். ஒரு சிறந்த மெட்டு எப்படி ஈர்க்கிறதோ, அதுபோலப் பாடலின் பல்லவிக்கும் சரணத்துக்கும் இடையில் வரும் இசையும் மக்களை ஈர்க்கும்படியாக இசையமைப்பதில் வல்லவர். மெட்டுக்கு இணையான இசைக்கோவையை வழங்கியதில் தனித்துவமானவர் இளையராஜா எனில், அதை அடுத்த கட்டத்துக்கு எடுத்துச் சென்றவர் இரகுமான் ஆவார்.

இவர் இசையமைத்த "வந்தே மாதரம்", "ஜன கண மன" என்னும் இசைத்தொகுதிகள், நவீன இசை வடிவில் நாட்டுப்பற்று உணர்வை மிளிரச் செய்தன. மலையாளம், தெலுங்கு, கன்னடம் உள்ளிட்ட பல தென்னிந்திய மொழிப்படங்களுக்கும் இசையமைத்ததோடு இந்தித் திரைப்பட உலகத்திலும் தம் இசை முத்திரையைப் பதித்தார். மேலைநாட்டுத் திரைப்படங்களுக்கும், நாடகங்களுக்கும் இசையமைத்து உலக இசையமைப்பாளர்கள் வரிசையிலும் தம்மை நிலைநாட்டிக்கொண்டார். வெவ்வேறு கலாச்சார மக்களையும் தம் இசையால் ஒருங்கிணைத்ததுடன் திரையிசையில் சூஃபி இசையை அறிமுகப்படுத்திய சிறப்பும் இவருக்குண்டு.

"ஸ்லம்டாக் மில்லியனர்" என்ற திரைப்படத்தின் இசைக்காக, 'கோல்டன் குளோப்' விருது பெற்றதன் மூலம் உலகளாவிய புகழ் பெற்றார். அவ்விருது பெற்ற முதல் இந்தியரும் இவரே. இவரின் ஆஸ்கர் சாதனை, சாதிக்கத் துடிக்கும் இளைஞர்களுக்கு வாழ்க்கைப் பாடமாகும்; அதே படத்தின் இசைக்காக கிராமி விருதையும் பெற்றார்.

தமிழர் வாழ்வின் எல்லா நிலைகளிலும் இசைக்கென்று ஓர் இன்றியமையாத இடமுண்டு. அதில், இளையராஜா, ஏ.ஆர். இரகுமான் ஆகியோரின் வருகை புகழ் மகுடமாக ஒளிர்கின்றது.

**கற்பவை கற்றபின்...**



தமிழ்த்தாய் வாழ்த்து, நாட்டுப்பண், தமிழில் பிறந்தநாள் பாடல் – போன்றவற்றை நண்பர்களுடன் இணைந்து இசையுடன் பாடிப் பயிற்சி பெறுக.

# கலைச்சொல்லாக்கம்




(பள்ளியின் இணைய இதழுக்காக அகராதியியலர் செழியன் அவர்களுடன் மாணவர்கள் முத்து, தமிழ்க்கனல் நேர்காணல்)

முத்து : வணக்கம் ஐயா !

செழியன் : வணக்கம்.

முத்து : தங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

செழியன் : மகிழ்ச்சி.

தமிழ்க்கனல்: இப்பொழுதுள்ள பேச்சு வழக்கில் ஆங்கிலச்சொற்கள் மிகுதியாகக் கலந்து மக்களால் பேசப்பட்டு வருகின்றன. ஆனால், அதற்குரிய தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்தும் வழக்கம் குறைந்து வருகிறது. இதற்கான காரணத்தைச் சொல்லுங்கள் ஐயா.

செழியன் : அப்படி முழுமையாய்ச் சொல்லிவிடமுடியாது. சான்றாக cellphone என்னும் ஆங்கிலச் சொல்லிற்குக் கைபேசி, செல்லிடப்பேசி, அலைபேசி போன்ற சொற்கள் பயன்பாட்டில் உள்ளன. இவ்வாறான சொற்களை உருவாக்கிக் கொள்ளும் முறைமைக்குக் கலைச்சொல்லாக்கம் என்று பெயர். அறிவியலுக்கு ஏற்புடைய பல கலைச்சொற்கள் வழக்கில் பயன்படுத்தப்படுகின்றன. சில கலைச்சொற்கள் பொருத்தமில்லாமல் உள்ளன. காலத்திற்கேற்ப வளரும் சில துறைகளில் கலைச்சொற்களின் தேவை மிகுதியாக இருக்கிறது. எனவே, நாம் கலைச்சொற்களை உருவாக்கும் பணியில் நம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்.

முத்து : கலைச்சொற்கள் என்றால் என்ன?

செழியன் : ஒரு மொழியில் காலத்திற்கேற்ப, துறைசார்ந்த புதிய கண்டுபிடிப்புகளுக்காக, உருவாக்கிப் பயன்படுத்தப்படும் சொற்களைக் கலைச்சொற்கள் என்கிறோம். ஒரு மொழி தன் வேர்ச்சொற்களைக் கொண்டு புதிய புதிய கலைச்சொற்களை உருவாக்கிக் கொள்ளவேண்டும். இவ்வாறு உருவாக்கிக் கொள்ளும்போது மொழி தன்னைப் புதுப்பித்துக்கொண்டு புதிய செழிப்பினைப் பெற்று மேலும் வளர்ச்சி பெறும். எடுத்துக்காட்டாக website, blog போன்றவை தகவல் தொழில்நுட்பத்தின் புதிய கண்டுபிடிப்புகள். இவற்றிற்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களாக உள்ள இணையம், வலைப்பூ போன்றவை தகவல்தொழில் நுட்பக் கலைச்சொற்கள் ஆகும். கலைச் சொற்கள் பெரும்பாலும் காரணப்பெயர்களாகவே இருக்கும்.

தமிழ்க்கனல் : அகராதியில், கலைச்சொற்கள் குறித்து அறிந்துகொள்ள வாய்ப்பு உள்ளதா?

செழியன் : பொருள் தெரியாத சொற்களுக்குப் பொருள் கூறுவதே அகராதியின் நோக்கம். ஆனால், கலைச்சொல்லாக்கம் என்பது பொருள் தெரிந்த பிறமொழிச் சொற்களுக்குத் தாய்மொழியில் முன்பே உள்ள சொற்களை அடையாளம் காட்டியும் தேவையானவிடத்துப் புதிதாகச் சொற்களை உருவாக்கியும் தருவதாகும்.

முத்து: கலைச்சொற்கள் பயன்படும் துறைகள் பற்றிக் கூறுங்கள் ஐயா.

செழியன்: நம் வாழ்வில் அன்றாடம் பயன்படுத்தும் கருவிகள்,வேளாண்மை,

மருத்துவம், பொறியியல், தகவல் தொடர்பியல் முதலான துறைசார்ந்த கலைச்சொற்கள் இன்றைய அறிவியல் சூழலுக்கேற்பப் பயன்படுத்தப்படுகின்றன.

தமிழ்க்கனல்: அவ்வாறான கலைச்சொற்கள் சிலவற்றைச் சொல்லுங்கள் …

செழியன்: மருத்துவமனை (CLINIC), குருதிப்பிரிவு (BLOOD GROUP), மருந்தாளுநர் (PHARMACIST), ஊடுகதிர் (X-RAY), குடற்காய்ச்சல் (TYPHOID), களிம்பு (OINTMENT) முதலியவை மருத்துவக் கலைச்சொற்கள்; எழுதுசுவடி (NOTE BOOK), விடைச்சுவடி (ANSWER BOOK) பொதுக் குறிப்புச் சுவடி (ROUGH NOTE BOOK), விளக்கச்சுவடி (PROSPECTUS) போன்றவை கல்வி சார்ந்த கலைச்சொற்கள். இவ்வாறு துறை சார்ந்த கலைச்சொற்கள் இலட்சக் கணக்கில் தமிழில் உள்ளன. ஒவ்வொரு துறையிலும் உள்ள புதிய கலைச்சொற்களைத் தொகுத்து அகரவரிசைப்படுத்திக் கலைச்சொல் அகராதிகள் வெளியிடப்படுகின்றன.

முத்து: கலைச்சொல்லாக்கப் பணியின்போது பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் எவையேனும் உள்ளனவா?

செழியன்: தமிழில் கலைச்சொல்லாக்கப் பணி தொடங்குவதற்குமுன் நாம் பின்வரும் விதிமுறைகள் சிலவற்றைக் கருத்தில் கொள்ளல் வேண்டும்.

ஆக்கப்பெறும் சொல் தமிழ்ச்சொல்லாக இருத்தல் வேண்டும்.

பொருள் பொருத்தமுடையதாக, அதே நேரத்தில் செயலைக் குறிப்பதாக அமைதல் வேண்டும்.

வடிவில் சிறியதாக, எளிமையாக இருத்தல் வேண்டும்.

ஓசை நயமுடையதாக இருத்தல் வேண்டும்.

தமிழிலக்கண மரபுக்கு உட்பட்டதாய் இருத்தல் வேண்டும். நல்லவை அல்லாதவற்றைக் குறிக்கக்கூடாது.

தமிழ்க்கனல்: கலைச்சொல் உருவாக்கத்தில் மாணவர்களின் பங்களிப்பு எவ்வாறு இருக்கவேண்டும்?

செழியன்: நாள்தோறும் புதிய கண்டுபிடிப்புகள் உருவாகிக் கொண்டிருக்கும் சூழலில், அதற்கான கலைச்சொல் ஆக்கங்களும் நிகழ்ந்துகொண்டே உள்ளன. பெரும்பாலும் அவை ஏட்டளவில் இருக்கின்றன. அக்கலைச் சொற்களை மக்கள் பயன்பாட்டிற்குக் கொண்டுவரவேண்டும். எடுத்துக்காட்டாக, இ-மெயில், ஸ்மார்ட்ஃபோன், விண்டோஸ் 10, 8G ஆகிய ஆங்கிலச் சொற்களுக்கு இணையாக மின்னஞ்சல், திறன்பேசி, பலகணி 10, 8ஆம் தலைமுறை போன்ற கலைச்சொற்கள் தமிழில் உள்ளன. இப்பணிக்கு இதழ்களும் ஊடகங்களும் துணைநிற்க வேண்டும்.

முத்து: புதிய கண்டுபிடிப்புகளுக்கான கலைச்சொற்களை எங்கிருந்து பெறலாம்?

செழியன்: இதழ்கள், மின்இதழ்கள், தமிழ் இணையக் கல்விக் கழகத்தின் இணையத்தளம் போன்றவற்றிலிருந்து பெறமுடியும். தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் இருபதிற்கும் மேற்பட்ட துறைகளுக்குக் கலைச்சொற்களை வெளியிட்டுள்ளது. பள்ளியில் செயல்படும் கையெழுத்து இதழில் கலைச்சொற்களுக்கெனத் தனியிடம் ஒதுக்கி, மாணவர்களிடையே கலைச்சொற்கள் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தலாம்.

தமிழ்க்கனல்: கலைச்சொற்கள் சிலவற்றை அறிமுகப்படுத்துங்கள் ஐயா….

செழியன்: அன்றாடம் பயன்படுத்தும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்கள்,

| | |
|---|---|
| Smartphone | திறன்பேசி |
| Touch screen | தொடுதிரை |
| Bug | பிழை |
| Gazette | அரசிதழ் |
| Despatch | அனுப்புகை |
| Subsidy | நல்கை |
| Ceiling | உச்சவரம்பு |
| Circular | சுற்றறிக்கை |

| | |
|---|---|
| SubJunior | மிக இளையோர் |
| Super Senior | மீமூத்தோர் |
| Carrom | நாலாங்குழி ஆட்டம் |
| Sales Tax | விற்பனைவரி |
| Customer | வாடிக்கையாளர் |
| Consumer | நுகர்வோர் |
| Account | பற்று வரவுக் கணக்கு |
| Referee | நடுவர் |

மேலும், இவை போன்ற பலதுறைச் சொற்களையும் பயன்பாட்டிற்குக் கொண்டுவர வேண்டும்.

முத்து : தமிழில் கலைச்சொற்களின் இன்றியமையாமையைக் கூறுங்கள் ...

செழியன்: உலகின் தொன்மையான மொழிகளுள் இன்றும் நிலைத்து நிற்கின்ற மொழி, தமிழ்மொழி. காலத்திற்கேற்பத் தன்னைப் புதுப்பித்துக்கொள்ளும் மொழியே வாழும். மருத்துவம், பொறியியல், தொழில்நுட்ப அறிவியல் ஆகியவற்றைத் தமிழ்வழியில் பயில, கலைச்சொல்லாக்கம் இன்றியமையாததாக உள்ளது. தாய்மொழி வழியிலான சிந்தனை மட்டுமே புதிது புதிதான கண்டுபிடிப்புகளுக்கு வழிவகுக்கும். உலகின் எந்த மூலையில் எவ்வகையான கண்டுபிடிப்பு நிகழ்ந்தாலும் உடனுக்குடன் ஜப்பானியர்கள் தங்கள் மொழியில் புதிய சொல்லை உருவாக்கிவிடுவர். தாய்மொழி வழியில் ஜப்பானியர்கள் அறிவியல் தொழில்நுட்பப் பாடங்களைக் கற்பதால் அங்கே நாள்தோறும் புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்கின்றன. கலைச்சொல்லாக்கம் இல்லையென்றால் அவற்றை நாம் ஒலிபெயர்ப்புச் சொல்லாக மட்டுமே பயன்படுத்த முடியும். எனவே, கலைச்சொற்களை நடைமுறைப் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது இன்றியமையாதது.

தமிழ்க்கனல்: நீங்கள் கூறிய தகவல்களை அடிப்படையாகக்கொண்டு கலைச்சொல் அகராதியை உருவாக்கும் பணியை இன்றிலிருந்தே தொடங்குகிறோம். நன்றி ஐயா.

முத்து: கலைச்சொற்கள் தொடர்பான பல பயனுள்ள செய்திகளைப் பகிர்ந்துகொண்டமைக்கு நன்றி ஐயா..

அறிவியல் கலைச்சொற்களைத் தமிழாக்குவதில் உள்ள முறைகள் குறித்து அறிவியல் அறிஞர் வா.செ. குழந்தைசாமி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

| | |
|---|---|
| பழந்தமிழிலக்கியச் சொல்லைப் பயன் படுத்துதல் | வலவன் (PILOT) |
| பேச்சுமொழிச் சொல்லைப் பயன்படுத்துதல் | அம்மை (MEASLES) |
| பிறமொழிச் சொல்லினைக் கடன்பெறல் | தசம முறை (Decimal) |
| புதுச்சொல் படைத்தல் | மூலக்கூறு (Molecule) |
| உலக வழக்கை ஏற்றுக் கொள்ளல் | எக்ஸ் கதிர் (X–ray) |
| பிறமொழித்துறைச் சொற்களை மொழி பெயர்த்தல் | ஒளிச்சேர்க்கை (Photosynthesis) |
| ஒலிபெயர்த்துப் பயன்படுத்தும் சொற்கள் | மீட்டர், ஓம் (Meter, Ohm) |
| உலக அளவிலான குறியீடுகள், சூத்திரங்கள் | $\Sigma$ $\sqrt{A}$ = $\pi r^2$ $H_2O$, Ca |

தமிழில் கலைச்சொற்களை உருவாக்கிடும்போது பழந்தமிழிலக்கியச் சொற்களையும் பேச்சுவழக்குச் சொற்களையும் புதிய சொற்களையும் இயன்றவரை பயன்படுத்தல் வேண்டும். அன்றாட உரையாடலில் நாம் தமிழ்ச்சொற்களையே பயன்படுத்தும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். கலைச்சொல்லாக்கப் பணியில் ஈடுபடுவோர், பிறமொழிச்சொற்களை அப்படியே கையாள்வதையோ ஒலிபெயர்ப்புச் சொற்களாக மாற்றுவதையோ கடன்வாங்குவதையோ தவிர்த்தல் வேண்டும். நாம் கலைச்சொல்லாக்கப் பணியில் ஈடுபடும்போது தமிழில் எண்ணற்ற புதிய சொற்களை உருவாக்குவதோடு படைப்புகள் சார்ந்த அறிவையும் பெறலாம்.



கற்பவை கற்றபின்...

மாணவர் ஒவ்வொருவரும் 25 கலைச்சொற்களைப் பொருளுடன் திரட்டி அகராதியாக்குக.

## இலக்கணத் தேர்ச்சி கொள்

1. கலைச்சொல்லாக்கம் - பொருள் தருக.
2. கலைச்சொல்லாக்கப் பணிகள் தொடங்குவதற்குரிய விதிமுறைகள் யாவை ?
3. பின்வரும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை எழுதுக.
   Personality, Emotion, Plastic, Escalator, Apartment, Straw, Mass Drill, Horticulture, Average
4. SHIP என்னும் ஆங்கிலச் சொல்லின் பழந்தமிழ் இலக்கியப் பெயரைக் கூறுக.
5. உலக அளவில் கணிதச் சூத்திரங்களையும், வேதியியல் குறியீடுகளையும் தமிழில் எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்று வா.செ. குழந்தைசாமி கூறுகிறார்?



தெரிந்து தெளிவோம்

ஒரு சொல்லை மொழிபெயர்க்கும்போதோ அல்லது புதிய சொல்லை உருவாக்கும்போதோ அச்சொல் அதே போன்ற வேறு பல சொற்களை உருவாக்க உதவ வேண்டும். எடுத்துக்காட்டாக , library என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நூலகம் , நூல்நிலையம் ஆகிய சொற்கள் கையாளப்படுகின்றன. இச்சொற்களில் நூலகம் என்னும் சொல்லே மேலும் பல சொற்களை உருவாக்கும் ஆக்கத்திறன் கொண்டது.

library – நூலகம், librarian – நூலகர், library science – நூலக இயல்.

இன்றைய நிலையில் பலரும் கலைச்சொற்களை உருவாக்கிய வண்ணம் உள்ளனர். கற்றறிந்தோர், கற்றறியாதோர், கைவினைஞர்கள், பயிற்றுநர், மாணவர்கள், மகளிர், குழந்தைகள் எனப் பலரும் கலைச்சொற்களைத் தாமாகவே உருவாக்குகின்றனர். அறிவியல் கலைச்சொற்களை உருவாக்கும்போது பல்வேறு சொற்களை ஆள்கின்றனர். எடுத்துக்காட்டாக, Antibiotics – எதிர் உயிர்ப்பொருள், நுண்ணுயிர்க் கொல்லிகள், உயிர் எதிர் நச்சுகள், கேடுயிர்க் கொல்லிகள், நச்சுயிர்க் கொல்லிகள் எனப் பல்வேறு கலைச்சொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர். இக்கலைச்சொற்கள் தமிழில் சொல்லாக்க வளர்ச்சியினை வெளிப்படுத்துவனவாக உள்ளன. ஆனால், கலைச்சொற்களைக் கற்பதிலும் அவற்றைப் புரிந்துகொள்வதிலும் துறைசார்ந்த நிலையில் குழப்பம் ஏற்பட வாய்ப்புள்ளது. இவற்றைத் தவிர்க்க அச்சொற்களைத் தரப்படுத்திப் பயன்படுத்த வேண்டும். இதற்கென குழு ஒன்றை உருவாக்கலாம்.

'தென் ஆப்பிரிக்காவின் பெண்கள் விடுதலை' என்னும் தலைப்பில் கட்டுரை எழுதத் தொடங்கிய பாரதி, Member என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லொன்றை உருவாக்க முனைந்தார்.

மெம்பர் என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் எனக்கு அகப்படவில்லை. இது ஆச்சரியத்திலும் ஆச்சர்யம். அவயவி சரியான வார்த்தையில்லை. அங்கத்தான் கட்டிவராது. சபிகன் சரியான பதந்தான். ஆனால் பொதுஜனங்களுக்குத் தெரியாது. யாரேனும் பண்டிதர்கள் நல்ல பதங்கள் கண்டுபிடித்துக் கொடுத்தால் புண்ணியமுண்டு. அரைமணி நேரம் யோசித்துப் பார்த்தேன்; உறுப்பாளி? ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனதிற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்! கடைசியாக மெம்பர் என்று எழுதி விட்டேன். இன்னும் ஆர, அமர யோசித்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொருமுறை சொல்லுகிறேன்.



## தெரிந்து தெளிவோம்

# நிறுத்தக்குறிகள்

மொழியைக் கற்கும் ஒருவர் படித்தல், எழுதுதல், கேட்டல், பேசுதல் என்னும் பல்வேறு திறன்களை உள்ளடக்கியவராக விளங்கவேண்டும். குறிப்பாகப் படித்தல் என்னும் திறனானது வரிவடிவத்தைக் காணுதல், முறையாக ஒலித்தல், பொருள் உணர்தல் ஆகிய மூன்று செயல்களை உள்ளடக்கியதாகும். இவற்றுள் எந்தச் செயலில் குறைவு ஏற்பட்டாலும் படித்தல் என்பது முழுமையடையாது.

ஒரு தொடரையோ பத்தியையோ கட்டுரையையோ படிக்கும்போது, பொருள் உணர்வுக்கு ஏற்ப, நிறுத்திப் படிக்க வேண்டிய இடத்தில் நிறுத்தியும் சேர்த்துப் படிக்க வேண்டிய இடத்தில் சேர்த்தும் வியப்பு, அச்சம், வினா முதலிய உணர்வுகள் வெளிப்படும் இடங்களில் அவற்றை வெளிப்படுத்தியும் படிக்க வேண்டியது படிப்பவர்தம் கடமையாகும்.

பேருந்து, தொடர்வண்டி, வானூர்தி போன்றவை நிற்கும் இடத்திற்கு 'நிறுத்தம்' என்பது பெயர். அவற்றைப் போலவே, மக்கள் உணர்வின் இயக்கமாக விளங்கும் மொழியின் இயக்கத்திற்கும் நிறுத்தம் உண்டு. வண்டிகள் சாலை விதிகளுக்கு ஏற்ப இயங்கவும் நிறுத்தவும் விலகவும் ஒதுங்காமல் பின்வரவும் எனக் குறிகள் (விளக்குகள், ஒலிகள்) உள்ளமை போலச் சொற்றொடர் நிறுத்தங்களுக்கும், குறிகள் என்னும் அடையாளங்கள் உண்டு. அவற்றிற்கு 'நிறுத்தக்குறிகள்' என்று பெயர். எடுத்துக்காட்டாக,

"மறைமலையடிகள் மரணத்தின்பின் மனிதர்நிலை என்னும்நூலை இயற்றினார்"

மறைமலையடிகளார் எழுதிய நூல்களை அறிந்திராத ஒருவர், நிறுத்தக்குறிகள் இடம்பெறாத இத்தொடரைப் படிக்கும்போது மரணத்துக்குப்பின் அவர் எப்படி நூல் எழுத முடியும்? என்று வினவுவார். ஆனால், மறைமலையடிகள் என்னும் பெயருக்குப்பின் காற்புள்ளியும், மரணத்தின்பின் மனிதர்நிலை என்பவற்றின் முன்னும் பின்னும் மேற்கோள்குறியும் இட்டு,

மறைமலையடிகள், 'மரணத்தின்பின் மனிதர்நிலை' என்னும் நூலை இயற்றினார்.

என்று எழுதும்போது பொருள் தெளிவாகிவிடும் அல்லவா! எனவே, நிறுத்தக்குறிகள் ஒரு தொடரில் உள்ள பொருள்வேறுபாட்டை உணர்த்துவதற்கு அடிப்படையாக விளங்குகின்றன என்க.

நிறுத்தக்குறிகளைப் பயன்படுத்திப் படிக்க முயலும்போது தெளிவாகப் பொருள் உணர்ந்து, படிப்பவர்களும் கேட்பவர்களும் பயன்பெறுவர். நிறுத்தக்குறிகளை இடாமல் எழுதுவதோ இடம் மாற்றி இக்குறிகளை இடுவதோ தொடரின் பொருளையே மாற்றிவிடும். சிலவேளைகளில் முற்றிலும் பிழையான பொருளைத் தந்துவிடும். எனவே, நிறுத்தக்குறிகள் மொழியைத் தெளிவாகப் பேசவும் படிக்கவும் எழுதவும் துணைநிற்கின்றன.

இனி, நிறுத்தக்குறிகள் சிலவற்றையும் அவற்றை எவ்வெவ்விடத்தில் பயன்படுத்தப்படவேண்டும் என்பதையும் எடுத்துக்காட்டுகளுடன் காண்போம்.

## காற்புள்ளி ( , )

பொருள்களைத் தனித்தனியாகக் குறிப்பிடும் இடங்கள், எச்சச் சொற்றொடர்கள், எடுத்துக்காட்டுகள், இணைப்புச்சொற்கள், திருமுகவிளி, இணைமொழிகள் முதலிய இடங்களில் காற்புள்ளி வருதல் வேண்டும்.

• அறம், பொருள், இன்பம், வீடு என வாழ்க்கைப்பேறு நான்கு.

• நாம் எழுதும்போது, பிழையற எழுத வேண்டும்.

• இனியன் நன்கு படித்தான்; அதனால், தேர்ச்சி பெற்றான்.

• ஐயா; அம்மையீர்,

• சிறியவன் பெரியவன், செல்வன் ஏழை.

## அரைப்புள்ளி ( ; )

தொடர்நிலைத் தொடர்களிலும் ஒரு சொல்லுக்கு வேறுபட்ட பொருள் கூறும் இடங்களிலும் அரைப்புள்ளி வருதல் வேண்டும்.

• வேலன் கடைக்குச் சென்றான்; பொருள்களை வாங்கினான்; வீடு திரும்பினான்.

• சீர் – மாறுபாடு இல்லாதது; அளவு; இயல்பான தன்மை; ஒழுங்கு; சமம்; நேர்த்தி; அழகு; சீதனம்; செய்யுளின் உறுப்பு

## முக்காற்புள்ளி ( : )

சிறுதலைப்பு, நூற்பகுதி எண், பெருங்கூட்டுத் தொடர் முதலிய இடங்களில் முக்காற்புள்ளி வருதல் வேண்டும்.

• சார்பெழுத்து :

• பத்துப்பாட்டு 2:246

• எட்டுத்தொகை என்பன வருமாறு:

## முற்றுப்புள்ளி ( . )

தொடரின் இறுதி, முகவரி இறுதி, சொற்குறுக்கம், நாள் முதலிய இடங்களில் முற்றுப்புள்ளி வருதல் வேண்டும்.

• உருவுகண்டு எள்ளாமை வேண்டும்.

• தலைமையாசிரியர், அரசு மேனிலைப் பள்ளி, காஞ்சிபுரம்.

• தொல்.சொல்.58.

• 18/02/2018.

## வினாக்குறி ( ? )

ஒரு வினாத்தொடர், முற்றுத்தொடராகவும் நேர்கூற்றுத் தொடராகவும், இருப்பின், இறுதியில் வினாக்குறி வருதல் வேண்டும்.

• அது என்ன? (முற்று)

• நீ வருகிறாயா? என்று கேட்டான். (நேர்கூற்றுத் தொடர்)

### வியப்புக்குறி ( ! )

வியப்புக்குறி, வியப்பிடைச் சொல்லுக்குப் பின்பும் நேர்கூற்று வியப்புத்தொடர் இறுதியிலும் அடுக்குச் சொற்களின் பின்னும் வியப்புக்குறி வருதல் வேண்டும்.

- எவ்வளவு உயரமானது!
- என்னே தமிழின் பெருமை! என்றார் கவிஞர்
- வா! வா! வா! போ! போ! போ!

### விளிக்குறி ( ! )

அண்மையில் இருப்பாரை அழைப்பதற்கும், தொலைவில் இருப்பாரை அழைப்பதற்கும் விளிக்குறி பயன்படுத்த வேண்டும். வியப்புக்குறியும் விளிக்குறியும் ஒரே அடையாளக்குறி உடையன.

- அவையீர் !
- அவைத்தலைவீர் !

### மேற்கோள்குறி ( ' ', " " )

ஒற்றை மேற்கோள்குறி, இரட்டை மேற்கோள்குறி என இருவகைப்படும்.

### ஒற்றை மேற்கோள்குறி வரும் இடங்கள்

ஓர் எழுத்தேனும் சொல்லேனும் சொற்றொடரேனும் தன்னையே குறிக்கும் இடம், கட்டுரைப்பெயர், நூற்பெயர் குறிக்கும் இடம், பிறர் கூற்றுப்பகுதிகள் முதலான இடங்களில் ஒற்றைக்குறி வருதல் வேண்டும்.

- 'ஏ' என்று ஏளனம் செய்தான்.
- பேரறிஞர் அண்ணா 'செவ்வாழை' என்னும் சிறுகதை எழுதினார்.
- 'கம்பனும் மில்டனும்' என்னும் நூல் சிறந்த ஒப்பீட்டு நூல் ஆகும்.
- 'செவிச்செல்வம் சிறந்த செல்வம்' என்பர்.

### இரட்டை மேற்கோள்குறி வருமிடங்கள்

நேர்கூற்றுகளிலும் மேற்கோள்களிலும் இரட்டைக்குறி வருதல் வேண்டும்.

- "நான் படிக்கிறேன்" என்றான்.
- "ஒழுக்கமுடைமை குடிமை" என்றார்.

நிறுத்தக்குறிகள் எல்லாம் வெறும் அடையாளங்கள் அல்ல. அவையெல்லாம் பொருள்பொதிந்த அடிப்படையில் தோன்றியவை என்பதை மாணவர்கள் நன்குணர்ந்து அவற்றைப் பின்பற்றிப் பேசவும் எழுதவும் வேண்டும்.

பழங்காலத்தில் பனை ஓலைகளிலோ கல்வெட்டுகளிலோ ஒரு பாடல் அல்லது உரைநடைப் பகுதியை எழுதி முடித்ததும் அதனை எழுதி முடித்தமைக்கு அடையாளமாக அதன் இறுதியில் சுழியம் இடுதல் (O) அல்லது இணைகோடுகள் இடுதல்(//) அல்லது கோடு இடுதல் ( / ) என்னும் வழக்கம் இருந்துள்ளது. எனினும், பல்வேறு வகையான நிறுத்தக்குறிகளை நமக்கு அறிமுகப்படுத்தி எவ்வெவ்விடங்களில் அவற்றைப் பயன்படுத்த வேண்டுமென விளக்கியவர்கள் ஐரோப்பியர்களே ஆவர். தமிழ்மொழியின் இலக்கணநெறிகளுக்கு ஏற்ப அவற்றைப் பயன்படுத்திச் சொற்றொடர்களைப் பிரித்துப் பொருளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.



## நம்மை அளப்போம்




**பலவுள் தெரிக.**

1. கூற்று 1

   தஞ்சைப் பெரியகோவிலிலுள்ள ஓவியங்களை எஸ்.கே. கோவிந்தசாமி கண்டறிந்தார்

   கூற்று 2

   அங்குள்ள சோழர்காலத்து ஓவியங்கள் ஃபிரெஸ்கோ வகையைச் சார்ந்தவை

   அ) கூற்று 1 சரி கூற்று 2 தவறு    ஆ) கூற்று இரண்டும் தவறு

   இ) கூற்று 1 தவறு கூற்று 2 சரி    ஈ) கூற்று இரண்டும் சரி

2. 'ழ' என்னும் பெயரில் கவிஞர் ஆத்மாநாமால் வெளியிடப்பட்டது; 'கவிதைக் கிரீடம்' என்று போற்றப்படுவது.

   அ) சிற்றிதழ் , குற்றாலக் குறவஞ்சி    ஆ) கவிதைநூல், திருச்சாழல்

   இ) நாளிதழ், நன்னகர் வெண்பா    ஈ) கட்டுரை நூல், குற்றாலக் கோவை

3. கீழுள்ளவற்றைப் பொருத்தி விடை தேர்க

   அ) விரியன் - 1) தண்டை

   ஆ) திருகுமுருகு - 2) காலாழி

   இ) நாங்கூழ்ப்புழு - 3) சிலம்பு

   ஈ) குண்டலப்பூச்சி - 4) பாடகம்

   i) 3 4 2 1    ii) 3 1 4 2    iii) 4 3 2 1    iv) 4 1 3 2

4. பெண்கள் விளையாடும் விளையாட்டு வகைகளுள் ஒன்று

   அ) சாழல்    ஆ) சிற்றில்    இ) சிறுதேர்    ஈ) சிறுபறை

5. ஈறுபோதல், முன்னின்ற மெய்திரிதல், தனிக்குறில் முன்ஒற்று உயிர்வரின் இரட்டும், உடல்மேல் உயிர்வந்து ஒன்றுதல் ஆகிய வரிசையில் புணர்ந்த சொல்

   அ) மூதூர்    ஆ) வெற்றிடம்    இ) நல்லாடை    ஈ) பைந்தளிர்

**குறுவினா**

1. இந்தியக் கட்டடக்கலையின் மூன்று வகைகள் யாவை?
2. ஒலோகமாதேவீச்சுரம் கோவில் கல்வெட்டில் காணலாகும் பெண் அதிகாரிகளின் பெயர்களிலிருந்து நீங்கள் அறிவது யாது?
3. அயர்ந்து, எழுந்த – பகுபத உறுப்பிலக்கணம் தருக.
4. தொடர் அமைத்து எழுதுக – அன்றொருநாள், நிழலிலிருந்து

**சிறுவினா**

1. ஃபிரெஸ்கோ ஓவியங்கள்; கற்றளிக் கோவில்கள் குறித்து நீவீர் அறிவன யாவை ?
2. கலைச்சொல்லாக்கத்திற்கும் அகராதிக்கும் உள்ள வேறுபாடு யாது ?

3. சிங்கி பெற்ற பரிசுப் பொருட்களாகக் குற்றாலக் குறவஞ்சி கூறுவன யாவை ?

4. உணவும் உறக்கமும் அணில் கனவாம்; உங்கள் கனவை உங்கள் சொற்களில் விளக்குக.

5. தமிழகப் பெண்கள் பாடிக்கொண்டே விளையாடும்போது வெளிப்படுத்தும் மேன்மையான கருத்துகளாகத் திருச்சாழல் உணர்த்துவன யாவை?

**நெடுவினா**

1. 'கல்லும் கதை சொல்லும்' – என்னும் தொடர் தஞ்சைப் பெரிய கோவிலுக்குப் பொருந்துவதை விளக்கி எழுதுக.

2. சிம்பொனித் தமிழரும் ஆஸ்கர் தமிழரும் இசைத்தமிழுக்கு ஆற்றிய பணிகளை நும் பாடப்பகுதி கொண்டு தொகுத்தெழுதுக.



## மொழியை ஆள்வோம்

**சான்றோர் சித்திரம்**

நாடகத்தமிழை வளர்த்த நல்லறிஞராய்த் திகழ்ந்த சங்கரதாசு சுவாமிகள், நாடகங்களை உருவாக்கிய ஆசிரியர்களுக்கெல்லாம் முன்னோடியாகவும் முதல்வராகவும் விளங்கினார். பெரும்புலவர்கள், சுவாமிகளின் பாடல் திறத்தையும் உரையாடல் தரத்தையும் உணர்ந்து நெஞ்சாரப் பாராட்டியுள்ளனர். இளமையில் புலவரேறு பழநி தண்டபாணி சுவாமிகளைத் தேடிச் சென்று, தமிழறிவைப் பெற்ற இவர் தம்முடைய 16 ஆவது வயதிலேயே கவியாற்றல் பெற்று வெண்பா, கலித்துறை இசைப்பாடல்களை இயற்றத் தொடங்கிவிட்டார். இரணியன், இராவணன், எமதருமன் ஆகிய வேடங்களில் நடித்துப் புகழடைந்தபோது அவருடைய வயது 24. வண்ணம், சந்தம் பாடுவதில் வல்லவராயிருந்த சுவாமிகளின் 'சந்தக்குழிப்புகளின்' சொற்சிலம்பங்களைக் கண்டு அக்காலத்தில் மக்கள் வியப்புற்றனர்.



சங்கரதாசு சுவாமிகள்
(1867 – 1922)

சங்கரதாஸ் சுவாமிகள் 'சமரச சன்மார்க்க சபை' என்னும் நாடகக் குழுவை உருவாக்கினார். இந்தக் குழுவில் பயிற்சி பெற்ற எஸ்.ஜி. கிட்டப்பா நாடகக் கலைத்துறையில் பெரும்புகழ் ஈட்டினார். மேடை நாடகம் தரம் குன்றிய நிலையில், மதுரை வந்த சுவாமிகள், 1918இல், 'தத்துவ மீனலோசனி வித்துவ பால சபை' என்னும் நாடக அமைப்பை உருவாக்கி ஆசிரியர் பொறுப்பேற்றார். இங்கு உருவானவர்களே டி.கே.எஸ். சகோதரர்கள். நாடகத்தின்மூலம் மக்களுக்கு அறவொழுக்கத்தையும் தமிழின் பெருமையையும் பண்பாட்டையும் தம் சுவைமிகுந்த பாடல், உரையாடல் வழியே உணர்த்திய சங்கரதாசு சுவாமிகளை நாடகத் துறைக் கலைஞர்கள், 'தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர்' என்று உளமகிழ்ந்து போற்றுகின்றனர்.

1. தமிழ்ச்சொல்லாக்குக – சன்மார்க்கம், வித்துவ பால சபை

2. நாடகத் தமிழை வளர்த்த நல்லறிஞராய்த் <u>திகழ்ந்தவர்</u> சங்கரதாசு சுவாமிகள் – அடிக்கோடிட்ட வினையாலணையும் பெயரை வினைமுற்றாக்கித் தொடரை எழுதுக.

3. ஈட்டினார் – பகுபத உறுப்பிலக்கணம் தருக.

4. தன்னன்ன தானேன தன்னானே – இந்தச் சந்தத்தில் பொருள் பொதிந்த இரண்டு அடிகள் கொண்ட பாடல் எழுதுக.

(எ.கா.) இந்திய நாட்டினில் வாழ்வதையே

இன்பமாய்க் கருதிடல் வேண்டுமப்பா . . .

5. தமிழ் நாடகத் தலைமையாசிரியர் – சிறப்புப்பெயருக்கான காரணத்தை அளிக்க.

### தமிழாக்கம் தருக.

*The oldest documented forms of art are visual arts, which include creation of images or objects in fields including today painting, sculpture, printmaking, photography, and other visual media. Music, theatre, film, dance, and other performing arts, as well as literature and other media such as interactive media, are included in a broader definition of art or the arts. Until the 17th century, art referred to any skill or mastery and was not differentiated from crafts or sciences. Art has had a great number of different functions throughout its history, making its purpose difficult to abstract or quantify to any single concept. This does not imply that the purpose of Art is "vague", but that it has had many unique, different reasons for being created.*

### தொடர் மாற்றம்

1. மூன்று நாள்கள் கல்லூரிக்கு விடுமுறை. மாணவர்கள் தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் கோவிலுக்குச் சென்றனர். சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்தனர் (கலவைத் தொடராக மாற்றுக)

2. தஞ்சைக் கோவில் எண்பட்டை வடிவில் கட்டப்பட்ட திராவிடக் கலைப்பாணியாகும் (வினாத் தொடராக்குக)

3. என்னே! மதுரை மீனாட்சிஅம்மன் கோவில் சிற்பக் கலை (செய்தித் தொடராக்குக)

4. நான் வாரத்தின் இறுதிநாள்களில் நூலகத்திற்குச் செல்வேன் (பொருள்மாறா எதிர்மறைத் தொடராக மாற்றுக)

### மெய்ப்புத்திருத்துநர் பணிவேண்டி நாளிதழ் முதன்மையாசிரியருக்குக் கீழ்க்காணும் விவரங்களுடன் தன்விவரக்குறிப்பு ஒன்று எழுதுக.

(பெயர், வயது, பாலினம், பிறந்த நாள், பெற்றோர், முகவரி, அலைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, அறிந்த மொழிகள், எடை, உயரம், குருதிவகை, கல்வித்தகுதி)

### இலக்கியநயம் பாராட்டுக.

"தண்டலை மயில்கள் ஆட, தாமரை விளக்கம் தாங்க,

கொண்டல்கள் முழவின் ஏங்க, குவளைகண் விழித்து நோக்க,

தெண் திரை எழினி காட்ட, தேம்பிழி மகர யாழின்

வண்டுகள் இனிது பாட, மருதம் வீற்றிருக்கும் மாதோ"

– கம்பர்




## மொழியோடு விளையாடு

**எண்ணங்களை எழுத்தாக்குக.**



**தேர்க்கவி (இரத பந்தம்)**

**தேர்க்கவி – எழுதிப்பழகுக**

*சித்திரகவி வகைகளுள் ஒன்று தேர்க்கவி. தேர் வடிவத்தினுள் சொற்களை அமைத்துப் பாடுவது.*







*கல் செல் நீ நிமிர்ந்துநட*

*கற்பந்து நீயே தகர் தடை*

*தீ மிதி நிமிர்ந்து நில்.*

**விடுபட்ட இடத்தில் அடுத்து வரவேண்டிய சொற்களைக் கண்டறிந்து எழுதுக.**

1. தனிமொழி – அறிவு ; ________ – வண்ண மயில் ; பொதுமொழி – ________

2. கார்காலம் – ________; குளிர்காலம் – ஐப்பசி, கார்த்திகை; ________ – மார்கழி, தை

3. எழுத்து, சொல், ________________ , யாப்பு, ________________ .

4. எழுத்து , ________________ , சீர், தளை, ________________ , தொடை

5. சேரன் - வில், சோழன் - ________________, ________________ - மீன்

**செய்து கற்போம்**

நீவிர் வசிக்கும் பகுதிக்கு அருகில் உள்ள வழிபாட்டுத்தலங்கள், சுற்றுலாத்தலங்கள் போன்றவற்றிற்குச் சென்று அங்கு உமக்குக் கிடைக்கும் கலையனுபவங்களைக் கட்டுரையாக்குக.



**நிற்க அதற்குத் தக**

நம் நாட்டின் பெருமைகளில் ஒன்று தொன்மைச் சின்னங்கள். அவை நம் வரலாற்றைப் பறைசாற்றுபவை. கோவில்களிலும் தொன்மையான இடங்களிலும் கல்வெட்டுகளிலும் சிலர் கிறுக்குவதை, சிதைப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? நம்முடைய பெருமையை நாமே சிதைக்கலாமா? அவற்றை அழியாமல் பாதுகாக்க நாம் என்ன செய்யப்போகிறோம்? பட்டியலிடுக.



மதுரையிலுள்ள சமணர் படுகை.

**கலைச்சொல் அறிவோம்**

நுண் கலைகள் – Fine Arts

ஆவணப்படம் – Documentary

கல்வெட்டு – Inscription / Epigraph

தானியக்கிடங்கு – Grain Warehouse

பேரழிவு – Disaster

தொன்மம் – Myth



**அறிவை விரிவு செய்**

சிவானந்த நடனம் – ஆனந்த குமாரசுவாமி

தஞ்சைப்பெருவுடையார் கோயில் – இராசராசேச்சுரம் – கோயில் நுட்பம் – குடவாயில் பாலசுப்பிரமணியன்

ஆத்மாநாம் கவிதைகள்




**இணையத்தில் காண்க**

http://www.thebigtemple.com/architecture1.html – தஞ்சை கோவிலின் இணையத்தளம்

Photos on art–and–archaeology web site – தொல்லியல் துறையின் இணையத்தளம்

http://www.tamilvu.org/ta/courses–degree–c012–c0123–html–c01233l1–15035 – குறவஞ்சி இலக்கியம்.

http://www.tamilvu.org/slet/l4100/l4100pd2.jsp?bookid=116&pno=338 – சாழல் வடிவம் – விளக்கம்.

## சாலைப் பாதுகாப்பு

எட்டாவது படிக்கையில், கால் எட்டாத பருவத்தில் இருசக்கர ஊர்தியை ஓட்டும் மகனைப் பெருமையுடன் பார்க்கும் பெற்றோர், கல்லூரி படிக்கும்போது நச்சரித்து வாங்கிய புதுவண்டியை மிகவேகமாக ஓட்டுவதைப் பார்க்கும்போது அடிவயிறு கலங்குவது உண்மை!. வேகம், விவேகம் அன்று! எந்தச் சாலையில், எந்தப் பகுதியில் எவ்வளவு வேகத்தில் போகவேண்டும் என்பதை அரசு, குறியீடுகளாக நட்டுவைத்திருப்பதைப் பார்த்து அதன்படி பயணித்தல் நல்லது. முன்னால் செல்லும் ஊர்திகளை முந்தும் பெருவிருப்பத்துடன் தங்கள் வண்டிகளை விரட்டுவதில் கிளர்ச்சி அடைகின்றனர் இக்காலத்தில் சிலர்.

பச்சை விளக்கு எரிகிறதா - செல்க!

மஞ்சள் விளக்கு எரிகிறதா - விரைவாகச் செல்க!

சிவப்பு விளக்கு? - காவலர் இல்லையெனில் மிகவிரைவாகச் செல்க ......என்பதான போக்கு மாறவேண்டும். சாலையில் ஊர்தி ஓட்டுவதில் இராணுவக் கட்டுப்பாடு வேண்டும்.

### தலைக் கவசம் – உயிர்க் கவசம்

'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போய்விட்டது' என்ற கூற்று, முற்றிலும் பொருந்துவது ஊர்தி ஓட்டுநர்களுக்குத்தான். அரசும் நீதிமன்றமும் அடுக்கடுக்காக அறிவுறுத்தியும், அபராதம் போட்டும் கவசம் அணிவதில் சுணக்கம்! சிலர் வாங்கி வைத்த கவசத்தை இருக்கைக்கு அடியிலும், சிலர் பெட்ரோல் கலனிலும் வைத்துவிட்டுக் காவலரைப் பார்க்கும்போது மட்டும் ஒற்றைக் கையால் எடுத்து மாட்டும் அழகு இருக்கிறதே! ஏமாற்றுகிறார்களாம்! வரும் தலைமுறைக்கு வழிகாட்டியாக அல்லவா இருக்க வேண்டும்.

### கீழ்வருவன தவிர்க்க

மது அருந்தி ஊர்தி ஓட்டுதல்

மக்கள் நெரிசலில் வேகமாக ஓட்டுதல்

முறையான உரிமம் வாங்கும் முன் ஊர்திகளை ஓட்டுதல்

### ஒளிர்தலும் எரிதலும்

ஊர்தியில் உள்ள விளக்குகளைச் சரியாகப் பயன்படுத்தும் முறையைப் போக்குவரத்து அலுவலகங்களிலும் ஓட்டுநர் பள்ளிகளிலும் முறைப்படி கற்றுக்கொண்டு அவற்றைப் பயன்படுத்தவேண்டும். ஊர்தியின் வேகம் குறைதல், வலப்பக்கமாகவோ, இடப்பக்கமாகவோ திரும்புவதற்கான சைகைகள் போன்றவற்றுக்கு இவ்விளக்குகள் பயன்படுகின்றன.

### முகப்பு விளக்குகள் ஒளிரவேண்டும் – எரியவிடக்கூடாது!

எதிரில் வரும் ஊர்தி ஓட்டுநர்களின் கண்களைக் கூசவைக்கும் அளவுக்கு முகப்பு விளக்கு விளக்குகளை எரியவிடுவது அவர்களைத் தடுமாற வைக்கும். ஆயுத பூசைக்குப் பூ வைத்துப் பொட்டு வைக்கும்போது மறக்காமல் முகப்பு விளக்கின் நடுவில் கருப்புப் பொட்டு வைத்துவிடுவது நன்று!

### போதையின் பாதை

மது - ஓட்டுநருக்கு, சாலைக்கு, உயிருக்குக் கேடு! போதையில் ஊர்தி ஓட்டுதல் விதிமீறல்.

போக்குவரத்துச் சட்டப்படி ஆறுமாத சிறைத் தண்டனை அல்லது ரூபாய் 2000/- தண்டத் தொகை (முதல் முறை).

மீண்டும் போதையில் செய்யும் பயணம், இரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனை அல்லது ரூபாய் 3000/- தண்டத் தொகை, அல்லது இரண்டுக்கும் வழிவகுக்கும்.

### கவனத்தில் கொள்க

- தலைதெறிக்கும் வேகத்தில் செல்லாதீர்கள் - தலை தெறிக்கும்!
- நடைமேடை நடப்பவர்களுக்கே – ஓட்டுநர்களுக்கு இல்லை!
- போதையுடன் ஓட்டாதீர்கள் - வாழ்க்கையின் பாதை முடிந்துவிடும்!
- உரிமத்துடன், விவேகமுடன் ஓட்டுங்கள் - வாழ்க்கை ஒளிரும்!

இயல் 7

# வையத் தலைமை கொள்





## கற்றல் நோக்கங்கள்

- கருத்துகளைத் தொகுத்துக் கட்டுரைக்கும் திறன் பெறல்
- கவிதையில் புரட்சிக்கருத்துகள் எழுச்சியுடன் வெளிப்படுத்தப்படும் நயம் அறிந்து சுவைத்தல்
- சங்க இலக்கியத்தில் காட்சிப்படுத்தப்பட்டுள்ள நாட்டுச் சிறப்பினை இன்றைய நிலையுடன் ஒப்பிட்டுக் கற்றல்
- ஆக்கப்பெயர்களின் இன்றியமையாமை, நடைமுறைத் தேவை ஆகியவற்றை அறிந்து பயன்படுத்துதல்



## பாடப் பகுதி

காற்றில் கலந்த பேரோசை – சுந்தர ராமசாமி

புரட்சிக்கவி – பாரதிதாசன்

பதிற்றுப்பத்து – குமட்டூர்க் கண்ணனார்

சிந்தனைப் பட்டிமன்றம்

ஆக்கப்பெயர்கள்

# காற்றில் கலந்த பேரோசை




– சுந்தர ராமசாமி

**நுழையும்முன்**

ஒருமுறை திருவாங்கூரில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டது. வெள்ளப் பெருக்கினால் ஏற்பட்ட துன்பத்தைத் துடைக்கப் பள்ளி மாணவர்களும் குழுக்கள் அமைத்துச் செயல்பட்டனர். ஒரு குழுவினர் நாஞ்சில் நாட்டின் வடக்குப் பகுதியில் உள்ள தோவாளை என்னும் இடத்திற்குச் சென்று பணியை மேற்கொண்டனர். அங்கிருந்த கிராம மக்களிடம் வெள்ளப் பெருக்கினால் ஏற்பட்ட பாதிப்புகள் குறித்துப் பேசி நிதி திரட்டினர். அக்குழுவிற்குத் தலைவராக இருந்த ஜீவா அப்போது பள்ளி இறுதிப்படிப்புப் படித்துக்கொண்டிருந்தார். அரசியல் சிந்தனையிலும் பொதுவுடைமைச் சிந்தனையிலும் கூர்வாளாய் மெருகேற்றிக்கொண்ட ஜீவா, சமூக நலனுக்காகத் தம்மை ஈடுபடுத்திக்கொண்ட முதல் நிகழ்வு அது.

நண்பர் ஒருவரிடம் 'ஜீவா மறைந்துவிட்டார்' என்றேன். 1963 ஜனவரி மாதம் பதினெட்டாம் தேதி. நண்பகல் வேளை. செய்தி, தபால் நிலையத்துக்கு வந்து ஒரு மணி நேரம்கூட ஆகியிருக்கவில்லை. 'ஆ!' என்று கூவி ஸ்தம்பித்து நின்ற நண்பர், இரண்டொரு நிமிஷங்களுக்குப்பின் 'கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கும்போதா?' என்று கேட்டார். 'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?' எனக் கேட்க எண்ணியவன் 'தெரியாது' என்ற சொல்லோடு நிறுத்திக்கொண்டேன்.

அரைமணி நேரத்திற்குப்பின் மற்றொரு நண்பர் காதில் இச்செய்தியைப் போட்டபோது, அவரிடமிருந்தும் அதே கேள்வி பிறந்தது ஆச்சரியத்தை அளித்தது. இருவரது வாயிலிருந்தும் ஒரே கேள்வி புறப்பட்டதைத் தற்செயலான காரியம் என எண்ணி மறந்துவிடுவதும் சுலபம்தான். ஆனால், நான் அவ்வாறு எண்ணவில்லை. அதற்குக் காரணமும் உண்டு.

## மேடையில் வாழ்ந்த மனிதர்

நண்பர்களைப் பொறுத்தவரையில் ஜனப்பிரளயத்தின் முன்னால் நின்று சங்கநாதம் எழுப்பிக் கொண்டிருக்கும்போதே, அண்டம் முட்ட எழுந்து நாற்றிசையிலும் அலையலையாய்ப் பரவும் அப்பேரோசையில் அவர் கலந்துவிடுவதே ஜீவாவின் முத்திரைகொண்ட மரணமாக இருக்கும் போலும். அப்போதுதான் நாடகத்தின் இறுதிக் காட்சி, முந்திய காட்சிகளுடன் பொருந்தி அமையும் போலும். மேடையில் வாழ்ந்த மனிதன், வாழ்ந்த இடத்தில்தானே மறைந்திருக்கவும் வேண்டும்? இவ்வாறு எண்ணுகிறது பேதை மனசு.

ஜீவா என்ற தொண்டன் தமது இறுதிமூச்சு நிற்பதுவரையிலும் கர்ஜித்துக்கொண்டுதான் இருந்திருப்பான் என்பதில் இவர்களுக்கு எத்தனை நம்பிக்கை! எனவேதான் 'மூச்சு நின்றுவிட்டது' என்று நான் சொன்னபோது 'பேச்சு நின்றபோதா?' எனத் திருப்பிக் கேட்கிறார்கள். எத்தனை அர்த்தபுஷ்டியான கேள்வி! ஜீவா தமது அரிய சேவையால் சர்வசாதாரண உள்ளங்களில்கூட எழுப்பியிருக்கும் சித்திரம்தான் எத்தனை ஜீவகளையுடன் காட்சி தருகிறது!

## நெஞ்சோடு வளர்ந்த கனவு

ஜீவா தமக்கென ஒரு தத்துவத்தைச் சிருஷ்டித்துக்கொண்டவர் அல்லர். அவர்,

தான் நம்பிய தத்துவத்தை, அச்சில் உயிரிழந்து கிடக்கும் அதன் சித்தாந்தக் கருத்துகளைத் தமது அரிய திறமையால், கலை நோக்கால், கற்பனையால், உயிர்பெறச் செய்து, மனிதன்முன் படைத்தவர். மின்சக்திக்கு ஒளியுருவம் கொடுத்தவர் அவர்.

அவருடைய வாழ்வை, அதன் மையமான போக்கை எண்ணிப் பார்க்கையில், ஒரு கனவு, சிறு பிராயத்திலிருந்தே நெஞ்சோடு வளர்ந்த ஒரு கனவு, அவருக்கு இருந்திருக்கத்தான் வேண்டும் என்று தோன்றுகிறது. மனித வெள்ளத்தை அவர்களில் ஒருவனாய் முன்னின்று தலைமை தாங்கி இட்டுச் சென்று, அதிஉன்னதமான ஓர் எதிர்காலத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே அது.

### கொள்கையும் நம்பிக்கையும்

'மனிதச் சிந்தனையே, கற்பனைக்கும் எட்டாத பேராற்றலே, நீ சிந்தித்தவற்றில் சிறந்தவற்றை என்னிடம் ஒரே ஒருமுறை கூறு. அதனை நான் எட்டுத் திசையிலும் பரப்பி மனித ஜாதியை நீ சொன்ன இடத்திற்கு அழைத்து வருகிறேன். சந்தேகப்படாதே. செய்துகாட்டுகிறேன். என்னைப் பயன்படுத்திக்கொள். முடிந்தமட்டும் என்னைப் பயன்படுத்திக்கொள். கைமாறு வேண்டாம். என்னை நீ பயன்படுத்திக்கொள்வதே நீ எனக்குத் தரும் கைமாறு'. இதுவே அவருடைய பிரார்த்தனை. இந்த அடிப்படையான மனோபாவத்திலிருந்து பிறந்தது அவருடைய கொள்கை; அவருடைய நம்பிக்கை.

### பேச்சு நடை

பேச்சுக்கலை, அவர் பெற்ற வரம் என்றுதான் சொல்ல வேண்டும். அதோடு அவர் பேசுகையில் வெளிப்படும் உத்திகளும், பேச்சை அமைக்கும் அழகும் வெகு நூதனமாகவும் நளினமாகவும் இருக்கும். பேச்சுக்கலையை விளக்கும் பாடப்புத்தகங்கள் எத்தனையோ விதிகள் கூறும். ஜீவா அவற்றைக் காலடியில்போட்டு மிதித்தவர். அவருடைய பாணி இரவல்பாணி அல்ல; கற்று அறிந்ததும் அல்ல.



நம் நாட்டு மக்களின் தரத்தையும் அனுபவ அறிவையும் பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் நன்றாகத் தெரிந்துகொண்ட ஒரு மனிதன், விஷயத்தைக் கலைநோக்கோடு அணுகிக் கற்பனையும் கலந்து நாளடைவில் வெற்றிகரமாக அமைத்துக் கொண்ட பேச்சுப்பாணி அது.

அதோடு, உழுது விதைத்தால் நல்ல அறுவடை காணவேண்டும் என்பதில் ஜீவாவுக்கு நிர்ப்பந்தமுண்டு. இந்தத் தேசத்தில் பேச்சு, அதற்குரிய பயனைத் தர வேண்டுமென்றால், அது எவ்வாறு அமைய வேண்டும் என்பதும் அவருக்குத் தெரியும்.

### இரண்டு கைப்பிடி விசயம்

விசயத்தை வண்டி வண்டியாகக் குவித்துச் சின்ன மூளைகளைக் குழப்பி வாதனைக்கு உள்ளாக்குவது பல பிரசங்கிகளுக்குப் பொழுதுபோக்கு. ஜீவா இதற்கு எதிரி. ஒரு சில கருத்துகளை விரிவாகச் சொல்லிப் புரியவைத்துவிட்டால் போதும் என்பதே அவருடைய எண்ணம்.

வாண வேடிக்கைக்காரன் நாழிக்குள் திணிக்கும் மருந்துபோல் இரண்டு கைப்பிடி விசயம்தான் எடுத்துக்கொள்வார். மேடைமீது ஏறி அதற்கு நெருப்பு வைத்ததும் அதிலிருந்து வர்ணஜாலங்கள் தோன்றும்; பச்சையும் சிவப்பும் மஞ்சளும் உதிரும்; குடை குடையாய் இறங்கி வரும்; மாலை மாலையாய் இறங்கி வரும்.

**பசுமையான எண்ணங்கள்**

பேச்சுக்கலை அவருடைய காலடியில் விழுந்து கிடந்தது. இப்போது மேடையில் ஒரு நாற்காலி காலியாகிவிட்டது. அது என்றும் காலியாகவே கிடக்கும்.

'நான் ஒரு பள்ளி மாணவன், படித்துக்கொண்டிருக்கிறேன், படித்துக் கொண்டே இருப்பேன்' என்ற எண்ணம் எப்போதும் அவர் மனசில் பசுமையாக இருந்தது போலிருக்கிறது. அவர் கரைத்துக் குடித்துவிட்ட ஒரு விஷயத்தைப் பற்றி ஒரு கற்றுக்குட்டி அவரிடம் பேசினாலும் அதையும் காது கொடுத்துக் கேட்பார். தனக்குத் தெரியாத விஷயங்கள் பிறருக்குத் தெரிந்திருக்கும் என்ற எளிய உண்மை எப்போதும் அவர் நினைவில் நிற்கும்.

**ஆற்றில் விழுந்த கிளை**

ஆற்றில் ஒரு கிளையைப் போடுகிறோம். அது ஆற்றோடு செல்கிறது. நீரோட்டத்தில் சிக்கிக் கனவேகமாக ஓடுகிறது. சுழியில் அகப்பட்டுச் சுழல்கிறது. சில சமயம் கரையோடு ஒதுங்குகிறது. மீண்டும் ஓடுகிறது. ஒரு சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்த சொரிமுத்து ஆற்றில் கிளையைப் போட்டாற்போல் வாழ்ந்திருக்க வேண்டியவர்தான். ஆனால் அவரோ இயற்கையின் விதிகளை மறுத்து எதிர்நீச்சல் போடத் துணிந்தார். அவரை அறிஞர் என்கிறோம்; கற்றுக்கொடுக்க யாருமில்லை. பழந்தமிழ் இலக்கியத்தை யாரும் அவர் காதில் ஓதவில்லை. சொரிமுத்துவுக்கும் தலைவர் ஜீவாவுக்குமுள்ள இடைவெளி கொஞ்சம் தூரமல்ல. அதையொரு கணம் எண்ணிப் பார்த்தால், அவருடைய சாதனை தெரியவரும்.

'என் வாழ்வு என் கைகளில்' என்று நம்பியவர் அவர். அவருடைய வாழ்க்கையை ஆராய்ந்து பார்க்கிறபோது அவருடைய நம்பிக்கை பலித்திருக்கிறது என்றே சொல்ல வேண்டும். கடவுளின் 'முன்னேற்பாடுகளை' முடிந்த மட்டும் அவர் தகர்த்து எறிந்துவிட்டார். நீரில் விழுந்த கிளை மலைக்குச் சென்றுவிட்டது. எனினும், மரணம் இன்னும் கடவுளுக்குத்தான் சொந்தம். பேரோசை காற்றில் கலந்துவிட்டது.

('காற்றில் கலந்த பேரோசை' கட்டுரையின் சுருக்கப்பட்ட வடிவம்)

நூல்வெளி



ஜீவா என்றழைக்கப்படும் ப. ஜீவானந்தம் தொடக்கத்தில் காந்தியவாதியாகவும் பிறகு சுயமரியாதை இயக்கப் போராளியாகவும் பொதுவுடைமை இயக்கத் தலைவராகவும் செயல்பட்டார்; சிறந்த தமிழ்ப் பற்றாளர்; எளிமையின் அடையாளமாகத் திகழ்ந்தவர்.

நாகர்கோவிலைச் சேர்ந்த சுந்தர ராமசாமி, நவீனத் தமிழ் எழுத்தாளர்களுள் ஒருவர். பசுவய்யா என்ற புனைபெயரில் கவிதைகள் எழுதியவர். ரத்னாபாயின் ஆங்கிலம், காகங்கள் உள்ளிட்ட சிறுகதைகளை எழுதியிருப்பதுடன் ஒரு புளியமரத்தின் கதை, ஜே.ஜே. சில குறிப்புகள், குழந்தைகள் பெண்கள் ஆண்கள் ஆகிய புதினங்களையும் எழுதியுள்ளார். செம்மீன், தோட்டியின் மகன் ஆகிய புதினங்களை மலையாளத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்துள்ளார். பாடப்பகுதியாக உள்ள இக்கட்டுரை 1963இல் தாமரை இதழின் ஜீவா பற்றிய சிறப்புமலரில் வெளியானது.

கற்பவை கற்றபின்...



1. நான் விரும்பும் நாட்டிற்குழைத்த தலைவர் – மேடைப்பேச்சுக்கான கவியுரை உருவாக்குக.
2. ஜீவானந்தம் பற்றிய செய்திகளைத் திரட்டி வகுப்பறையில் படித்துக் காட்டுக.

## புரட்சிக்கவி




**நுழையும்முன்**

மக்களாட்சிக்கு முன்புவரை சட்டம், நிருவாகம், நீதி ஆகியவை அரசனிடமே குவிந்து இருந்தன. இந்நிலை சிறிது சிறிதாக மக்கள் புரட்சியால் மாற்றப்பட்டுத் தற்பொழுது மக்களாட்சிமுறை பல்வேறு நாடுகளில் மலர்ந்துள்ளது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியன மக்களாட்சியின் அடிப்படைக்கூறுகள். மக்களாட்சிச் சிந்தனைகளைப் பரப்பியதில் இலக்கியத்திற்கும் பெரும்பங்கு உண்டு. அரசு என்பது மக்களுக்கானதே என்று காலந்தோறும் இலக்கிய வடிவங்களின் மூலம் கவிஞர்கள் வலியுறுத்தி வருகின்றனர்.

### முன்கதைச் சுருக்கம்

*அரசன் ஒருவன் தன் மகள் அமுதவல்லிக்குக் கவிதை எழுதும் கலையினைப் பயிற்றுவிக்க விரும்புகிறான். அதற்காக அமைச்சரிடம் கருத்துரை கேட்கிறான். அமைச்சர் உதாரன் பெயரை முன்மொழிந்து, 'அவன் அழகும் அறிவும் இளமையும் வாய்ந்தவன்' என்று கூறுகிறார். தன் மகள் எளிய கவிஞரோடு காதல் வயப்படுவாளோ என எண்ணி அரசன் தயங்குகிறான். அதற்கு அமைச்சர் ஓர் உத்தியைக் கூறுகிறார்.*

*அதன்படி உதாரன் பார்வையற்றவன் என்று அமுதவல்லியிடம் கூறுகின்றனர். இதுபோலவே உதாரனிடம் அமுதவல்லி தொழுநோயாளி என்று தெரிவிக்கின்றனர். இருவருக்கும் இடையில் திரையிடப்படுகிறது. உதாரன், அமுதவல்லிக்குக் கவிதை எழுதும் கலையைக் கற்றுத் தருகிறான்.*

*ஓர் இரவுப்பொழுதில் அழகிய நிலவினைக் கண்டு உதாரன் தன்னை மறந்து கவிதை ஒன்றைப் பாடுகிறான். பார்வையற்ற ஒருவன் நிலவின் அழகைக் கண்டு எவ்வாறு கவிபாட முடியும் என்று ஐயம் கொண்ட அமுதவல்லி திரையினை விலக்கினாள். அழகிய ஆண் மகன் இருக்கக் கண்டு அவனை விரும்பத் தொடங்குகிறாள். உதாரனும் அழகான அமுதவல்லியைக் கண்டு விருப்பம் கொள்கிறான். இருவருக்கும் இடையே அன்பு மலர்கிறது.*



இவர்களின் விருப்பம் அரசனுக்குத் தெரியவருகிறது. இதனை விரும்பாத அரசன், உதாரனைக் குற்றவாளியாக்கி மரண தண்டனை விதிக்கிறான். அமுதவல்லி அதை எதிர்க்கிறாள். அதனால், சினம்கொண்ட மன்னன் இருவருக்கும் சேர்த்தே மரண தண்டனை விதிக்கிறான்.

இதனைத் தொடர்ந்து வரும் இக்காவியத்தின் இறுதிப்பகுதி இங்குப் பாடமாக இடம்பெற்றுள்ளது.

பா வகை: எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### உயிர் எமக்கு வெல்லமல்ல

'காதலனைக் கொலைக்களத்துக் கனுப்பக் கண்டும்
கன்னிஎனை மன்னிக்கக் கேட்டுக்கொண்ட
நீதிநன்று மந்திரியே! அவன் இறந்தால்
நிலைத்திடும்என் உயிர்எனவும் நினைத்து விட்டாய்!
சாதல்எனில் இருவருமே சாதல் வேண்டும்,
தவிர்வதெனில் இருவருமே தவிர்தல் வேண்டும்;
ஓதுகஇவ் விரண்டில் ஒன்று மன்னவன்வாய்!
உயிர் எமக்கு வெல்லமல்ல!' என்றாள் மங்கை.

### கடைசிப் பேச்சு

கொலைக்களத்தில் கொலைஞர்களும் அதிகா ரங்கள்
கொண்டவரும் காதலரும் ஓர்பால் நின்றார்;
அலைகடல்போல் நாட்டார்கள் வீடு பூட்டி
அனைவருமே வந்திருந்தார். உதார னுக்கும்
சிலைக்குநிகர் மங்கைக்கும் 'கடைசி யாகச்
சிலபேச்சுப் பேசிடுக' என்றுசொல்லித்
தலைப்பாகை அதிகாரி விடைதந் திட்டான்;
தமிழ்க்கவிஞன் சனங்களிடை முழக்கம் செய்வான்;

பேரன்பு கொண்டவரே, பெரியோ ரே,என்
பெற்றதாய் மாரே, நல் இளஞ்சிங் கங்காள்!
நீரோடை நிலங்கிழிக்க, நெடும ரங்கள்
நிறைந்துபெருங் காடாகப், பெருவி லங்கு
நேரோடி வாழ்ந்திருக்கப் பருக்கைக் கல்லின்
நெடுங்குன்றில் பிலஞ்சேரப், பாம்புக் கூட்டம்
போராடும் பாழ்நிலத்தை அந்த நாளில்
புதுக்கியவர் யார்? அழகு நகர்உண் டாக்கி!

சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கியநல் வாய்க்காலும் வகைப்ப டுத்தி
நெற்சேர உழுதுழுது பயன்வி ளைக்கும்
நிறைஉழைப்புத் தோள்களெலாம் எவரின் தோள்கள்?
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெலாம் செய்துதந்த கைதான் யார்கை?
பொற்றுகளைக் கடல்முத்தை மணிக்கு லத்தைப்
போய்எடுக்க அடக்கியமூச் செவரின் மூச்சு?*

### ஒருமனிதன் தேவைக்கே இந்தத் தேசம்

அரசனுக்கும் எனக்கும் ஒரு வழக்குண் டாக
அவ்வழக்கைப் பொதுமக்கள் தீர்ப்ப தேதான்
சரியென்றேன்; ஒப்பவில்லை! இவளும் நானும்
சாவதென்றே தீர்ப்பளித்தான்; சாக வந்தோம்!
ஒருமனிதன் தேவைக்கே இந்தத் தேசம்
உண்டென்றால், அத்தேசம் ஒழிதல் நன்றாம்!
இருவர் இதோ சாகின்றோம்! நாளை நீங்கள்
இருப்பதுமெய் என்றெண்ணி இருக்கின் றீர்கள்!

### மாசில்லாத உயர் தமிழ்

'தமிழ்அறிந்த தால் வேந்தன் எனை அழைத்தான்
தமிழ்க்கவிஎன் றெனை அவளும் காத லித்தாள்!
அமுதென்று சொல்லுமிந்தத் தமிழ், என் ஆவி
அழிவதற்குக் காரணமாயிருந்த தென்று
சமுதாயம் நினைத்திடுமோ? ஐயகோ! என்
தாய் மொழிக்குப் பழிவந்தால் சகிப்ப துண்டோ?
உமைஒன்று வேண்டுகின்றேன் மாசில் லாத
உயர்தமிழை உயிர்என்று போற்று மின்கள்!

### மக்களுக்கே ஆளும் உரிமை

அரசனுக்குப் பின்னிந்தத் தூய நாட்டை
ஆளுதற்குப் பிறந்தஒரு பெண்ணைக் கொல்ல
அரசனுக்கோ அதிகாரம் உங்க ளுக்கோ?
அவ்வரசன் சட்டத்தை அவம தித்தான்
சிரம் அறுத்தல் வேந்தனுக்குப்பொழுது போக்கும்
சிறியகதை! நமக்கெல்லாம் உயிரின் வாதை!
அரசன்மகள் தன்நாளில் குடிகட் கெல்லாம்
ஆளுரிமை பொதுவாக்க நினைத்தி ருந்தாள்!

### ஆழ்க எந்தன் குருதி

*வாழியஎன் நன்னாடு பொன்னா டாக!*
*வாழியநற் பெருமக்கள் உரிமை வாய்ந்தே*
*வீழியபோய் மண்ணிடையே விண்வீழ் கொள்ளி*
*வீழ்வதுபோல் தனித்தாளும் கொடிய ஆட்சி!*
*ஏழையினேன் கடைசிமுறை வணக்கம் செய்தேன்!*
*என் பெரியீர், அன்னையீர், ஏகு கின்றேன்!*
*ஆழ்க என்றன் குருதியெலாம் அன்பு நாட்டில்*
*ஆழ்க' என்றான்! தலை குனிந்தான் கத்தி யின்கீழ்!*

#### கொலையாளி உயிர் தப்பல்

*படிகத்தைப் பாலாபி ஷேகம் செய்து*
*பார்ப்பதுபோல் அமுதவல்லி கண்ணீர் வெள்ளம்*
*அடிசோர்தல் கண்டார்கள் அங்கி ருந்தோர்*
*ஆவென்று கதறினாள்! 'அன்பு செய்தோர்*
*படிமீது வாழாரோ?' என்று சொல்லிப்*
*பதைபதைத்தாள்! இதுகேட்ட தேச மக்கள்*
*கொடிதென்றார்! கொடுவாளைப் பறித்தார்; அந்தக்*
*கொலையாளர் உயிர்தப்ப ஓட லானார்!*

#### செல்வமும் உரிமையும் மக்களுக்கே

*கவிஞனுக்கும் காதலிக்கும் மீட்சி தந்தார்!*
*காவலன்பால் தூதொன்று போகச் சொன்னார்;*
*'புவியாட்சி தனிஉனக்குத் தாரோம் என்று*
*போய்உரைப்பாய்' என்றார்கள்! போகா முன்பே*
*செவியினிலே ஏறிற்றுப் போனான் வேந்தன்!*
*செல்வமெலாம் உரிமைஎலாம் நாட்டா ருக்கே*
*நவைஇன்றி எய்துதற்குச் சட்டம் செய்தார்!*
*நலிவில்லை! நலம்எல்லாம் வாய்ந்த தங்கே!*

### சொல்லும் பொருளும்

ஓதுக – சொல்க; முழக்கம் – ஓங்கி உரைத்தல்; கனிகள் – உலோகங்கள்; மணி – மாணிக்கம்; படிகம் – பளபளப்பான கல்; படி – உலகம்; மீட்சி – விடுதலை; நவை – குற்றம்.

### இலக்கணக் குறிப்பு

ஓதுக, பேசிடுக, ஆழ்க, வாழிய – வியங்கோள் வினைமுற்றுகள்; அலைகடல் – வினைத்தொகை; தமிழ்க்கவிஞர் – இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பேரன்பு, நெடுங்குன்று – பண்புத்தொகைகள்.

ஒழிதல் – தொழிற்பெயர்; உழுதுழுது – அடுக்குத்தொடர்.

### பகுபத உறுப்பிலக்கணம்

நின்றார் – நில்(ன்) + ற் + ஆர்

நில் – பகுதி ('ல்' 'ன்' ஆனது விகாரம்), ற் – இறந்தகால இடைநிலை, ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி.

செய்வான் – செய்+வ்+ஆன்

செய் – பகுதி, வ் –எதிர்கால இடைநிலை, ஆன் –ஆண்பால் வினைமுற்று விகுதி.

அழைத்தான் – அழை + த் + த் + ஆன்

அழை – பகுதி, த் – சந்தி, த் – இறந்தகால இடைநிலை, ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி.

வேண்டுகின்றேன் – வேண்டு + கின்று + ஏன்

வேண்டு – பகுதி, கின்று –நிகழ்கால இடைநிலை, ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

ஆழ்க – ஆழ் + க

ஆழ் – பகுதி, க – வியங்கோள் வினைமுற்று விகுதி.

பறித்தார் – பறி + த் + த் + ஆர்

பறி – பகுதி, த் – சந்தி, த் – இறந்தகால இடைநிலை, ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி.

### புணர்ச்சி விதி

நீரோடை – நீர் + ஓடை

உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே – நீரோடை

சிற்றூர் – சிறுமை+ ஊர், ஈறு போதல் சிறு + ஊர்

தன்னொற்றிரட்டல் – சிற்று + ஊர்

உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும் – சிற்ற் + ஊர்

உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே – சிற்றூர்

கற்பிளந்து – கல் + பிளந்து

ல ள வேற்றுமையில் வலிவரின் றடவும் – கற்பிளந்து

மணிக்குலம் – மணி + குலம்

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும் – மணிக்குலம்

அமுதென்று – அமுது + என்று

உயிர்வரின் உக்குறள் மெய் விட்டோடும் – அமுத் + என்று

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – அமுதென்று

புவியாட்சி – புவி + ஆட்சி

இ ஈ ஐ வழி யவ்வும் – புவி + ய் + ஆட்சி

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – புவியாட்சி



## தெரிந்து தெளிவோம்

ஒரு மூல மொழிப் பிரதியின் உள்ளடக்கத்தை அப்பிரதிக்கு இணையான இலக்கு மொழிப் பிரதியின் வழியாக வெளிப்படுத்துதலே மொழிபெயர்ப்பு. தழுவல், சுருக்கம், மொழியாக்கம், நேர்மொழிபெயர்ப்பு என்பவற்றை மொழிபெயர்ப்பின் வகைகளாகக் கொள்ளலாம்.

**தமிழிலிருந்து பிற மொழிக்கு**

சங்க இலக்கிய மொழிபெயர்ப்பு

ஏ.கே.ராமானுஜம் – Love Poems from a Classical Tamil Anthology

ம.லெ. தங்கப்பா – Hues And Harmonies From An Ancient Land

**பிற மொழியிலிருந்து தமிழுக்கு**

"அந்நியன்" – ஆல்பர் காம்யு, "உருமாற்றம்"– காப்கா – ஜெர்மனியிலிருந்து

'சொற்கள்'– ழாக் பிரெவர், "குட்டி இளவரசன்"– எக்சுபெரி – பிரெஞ்சிலிருந்து

"உலகக் கவிதைகள்"– தொகுப்பு: பிரம்மராஜன்



## நூல்வெளி

வடமொழியில் எழுதப்பட்ட பில்கணீயம் என்னும் காவியத்தைத் தழுவி, தமிழில் பாரதிதாசனால் 1937இல் எழுதப்பட்டது புரட்சிக்கவி. பாரதியின் மீது கொண்ட பற்றின் காரணமாகக் கனக சுப்புரத்தினம் என்னும் தம் பெயரைப் பாரதிதாசன் என்று மாற்றிக்கொண்டார். மொழி, இனம், குடியாட்சி உரிமைகள் ஆகியவை பற்றித் தம் பாடல்களில் உரக்க வெளிப்படுத்தியமையால் புரட்சிக் கவிஞர் என்றும் பாவேந்தர் என்றும் அழைக்கப்பட்டார். பிரெஞ்சு மொழியில் அமைந்த தொழிலாளர் நலச் சட்டத்தைத் தமிழ் வடிவில் தந்தவர். குடும்ப விளக்கு, பாண்டியன் பரிசு, இருண்ட வீடு, சேர தாண்டவம், ஆகிய காப்பியங்களையும் எண்ணற்ற பாடல்களையும் இயற்றியவர். 'குயில்' என்னும் இலக்கிய இதழை நடத்தியுள்ளார். இவருடைய 'பிசிராந்தையார்' நாடகத்துக்குச் சாகித்திய அகாதெமி விருது வழங்கப்பட்டது. 'வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே' என்ற இவரின் தமிழ் வாழ்த்துப் பாடலைப் புதுவை அரசு தனது தமிழ்த்தாய் வாழ்த்தாக ஏற்றுக் கொண்டுள்ளது. தமிழக அரசு இவருடைய பெயரால் திருச்சியில் ஒரு பல்கலைக்கழகத்தை நிறுவியுள்ளது.



## கற்பவை கற்றபின்...

1. மக்களாட்சியின் சிறப்பைப் பற்றிக் கட்டுரை எழுதுக.
2. பாரதிதாசனாரின் 'புரட்சிக் கவி' குறுங்காவியத்தை முழுமையாகப் படித்துச் சுவைத்து உங்கள் கருத்தைப் பதிவு செய்க.

# பதிற்றுப்பத்து




**நுழையும்முன்**

நாட்டில் வாழும் உயிர்கள் இன்புற்று வாழ வேண்டும். அவ்வாழ்வு சிறக்க நாட்டின் அரசன் மக்களின் நல்வாழ்வை உறுதிப்படுத்த வேண்டும். வள்ளுவர், "உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேரா தியல்வது நாடு" என்று குறிப்பிடுகிறார். பசியும் நோயும் பகையும் இல்லாதிருப்பதே சிறந்த நாடு என்று அறிவுறுத்துகிறார்.

## பாடல் பின்னணி

உதியன் சேரலாதனுக்கும் வேண்மாளுக்கும் மகனாகப் பிறந்தவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவன் வடக்கே இமயமலைவரை படையெடுத்துச் சென்று, வெற்றி பெற்று, இமயத்தில் வில்லினைப் பொறித்தவன். தமிழின் சிறப்பை உலகறியச் செய்தவன். கடம்பர்களை வென்று, தன் வீரர்களுக்குக் கவசமாக விளங்கியவன். சேரலாதனின் நாடு காத்தற் சிறப்பையும் கொடைச் சிறப்பையும் குமட்டூர்க் கண்ணனார் புகழ்வதாகப் பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் உள்ள இப்பாடல் அமைந்துள்ளது.

### நிரைய வெள்ளம்

*பதிபிழைப்பு அறியாது துய்த்தல் எய்தி*
*நிரையம் ஒரீஇய வேட்கைப் புரையோர்*
*மேயினர் உறையும் பலர்புகழ் பண்பின்*
*நீபுறம் தருதலின் நோய்இகந்து ஒரீஇய*
*யாணர்நன் னாடும் கண்டுமதி மருண்டனென்*

*மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க்கு எஞ்சாது*
*ஈத்துக்கை தண்டாக் கைகடும் துப்பின்*
*புரைவயின் புரைவயின் பெரிய நல்கி*
*ஏமம் ஆகிய சீர்கெழு விழவின்*
*நெடியோன் அன்ன நல்லிசை*
*ஒடியா மைந்தநின் பண்புபல நயந்தே.*

*(15: 30–40)*

*– குமட்டூர்க் கண்ணனார்.*



*உறுபசி ஓவாப்பிணி செறுபகை இன்மையால்*
*புலம்பெயர்ந்து செல்லாது வாழும் மக்கள்!*
*சான்றோர் புகழும் ஆட்சிச் சிறப்பில்*
*துயரம் தொலைந்த புதுவள நன்னாடு!*
*மண்ணுலக உயிர்கள் மாண்புடன் வாழ*
*ஈகையால் நீளும்கை! எதிரிகளை அழிக்கும்கை!*
*இடையறாது இடையறாது*
*பெரும்பொருள்கொடுத்துப்*
*பாதுகாப்பு அளிக்கும் பெருவிழாத் தலைவன் என*
*நற்புகழ் குறையாத வலிமைமிகு உந்தன்*
*பண்புபல நினைந்தும் கண்டும்*
*பெருவியப்பு அடைந்தேன்; மதிமிரண்டு போனேன்!*

**திணை : பாடாண்திணை**

பாடாண் திணையானது ஒரு மன்னனின் புகழ், வலிமை, வள்ளன்மை, அருள் முதலானவற்றை ஆய்ந்து கூறுவதாகும். பாடப்படும் ஆண்மகனின் உயர்பண்புகளைக் கூறுவது இத்திணையின் நோக்கமாகும்.

**துறை: செந்துறைப் பாடாண்பாட்டு**

செந்துறையாவது உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுதல். இது செந்துறைப் பாடாண் பாட்டு எனப்படும்.

**வண்ணம் : ஒழுகு வண்ணம்**

வண்ணம் என்பது ஒலிநய (சந்தம்) வேறுபாடு ஆகும்.

> வண்ணந் தாமே நாலைந் தென்பக.
>
> தொல். பொ. 524

ஒழுகு வண்ணம் என்பது ஒழுகிய ஓசையாற் செல்வதாகும்.

> ஒழுகு வண்ண மோசையி னொழுகும்.
>
> தொல். பொ. 538

**தூக்கு: செந்தூக்கு**

தூக்கு என்பது செய்யுள் அடிகளை வரையறை செய்வதாகும். செந்தூக்கு என்பது வஞ்சிப்பாவின் இறுதியடி போன்றோ, ஆசிரியவடியின் இறுதி போன்றோ அமையும்.

> வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே.
>
> தொல் . பொ. 383

பா வகை : நேரிசை ஆசிரியப்பா

**சொல்லும் பொருளும்**

பதி - நாடு; பிழைப்பு - வாழ்தல்; நிரையம் - நரகம்; ஒரீஇய - நோய் நீங்கிய; புரையோர் - சான்றோர்; யாணர் – புது வருவாய்; மருண்டெனன் - வியப்படைந்தேன்; மன்னுயிர் -நிலைபெற்றுள்ள உயிர்த்தொகுதி; தண்டா - ஓயாத; கடுந்துப்பு - மிகுவலிமை; ஏமம் - பாதுகாப்பு; ஒடியா - குறையா; நயந்து – விரும்பிய.

**முதல் 29 அடிகளின் கருத்துச் சுருக்கம்:** (சேரலாதனே! பகை நாட்டில் ஓராண்டுவரை தங்கிப் போர் செய்வாய். பகைவர்க்கு நரகத் துன்பத்தைத் தரும் உன் வீரர்கள் உன்னுடனே வெள்ளமென வருவர். பகைநாட்டில் நீ மூட்டிய தீயால் அந்நாட்டின் பழைய அழகு அழிந்தது. காய்ந்த வயல்களில் வீரர்கள் தங்கினர். இத்துன்பத்தை மறந்து உன்னை எதிர்த்து அழிந்த பகைவர் நாடுகளைக் கண்டு வந்தேன். பல வளங்களை உடைய உன் நாட்டில் தொடர்ச்சியான விழாக்களைக் கொண்டாடும் பழமையான ஊரில் உன் வெற்றி முரசு கொட்டுகிறது. நெடுஞ்சேரலாதனே! கலைஞர்கள் உன்னை வாழ்த்தி இசைக்கின்றனர்.)

**பாடலின் பொருள்**

"சேரலாதனே, உன் குடிமக்கள் எப்பொழுதும் நல்ல செயல்களையே செய்து வருபவர்கள் பசி, பிணி அறியாத அவர்கள் நாட்டை விட்டுப் புலம்பெயராமல் உன் நாட்டிலேயே சுற்றத்தாரோடு வாழ விரும்புவர். அவ்வாறான குடிமக்களால் நீ

போற்றப்படுகிறாய். இப்பெரிய நிலவுலகத்தில் வாழும் அனைத்து உயிர்களுக்கும் இடையறாது கொடுக்கும் பண்புடையவனே, நீ சான்றோர்களுக்கு அரிய பொருள்கள் நல்குவாய். எப்பொழுதும் விழாக்கள் நிகழும் நாட்டிற்கு நீ உரிமை உடையவன். நெடியோன் போன்ற புகழினை உடைய உன் நாட்டின் வளத்தையும் பகை நாட்டின் அழிவையும் கண்டு வியப்படைகிறேன்."

சேரநாடு செல்வவளம் மிக்கது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன் நாட்டையும் மக்களையும் கண்ணெனக் காத்தான். ஆகவேதான், அவன் நாட்டு மக்கள் வேற்று நாட்டுக்குச் செல்ல விரும்புவதில்லை. புது வருவாய்ப் பெருக்கமும் ஈத்துவக்கும் இன்பமும் உடையவன் சேரலாதன்.

### இலக்கணக் குறிப்பு

துய்த்தல் – தொழிற்பெயர்; ஒரீஇய – சொல்லிசை அளபெடை; புகழ்பண்பு – வினைத்தொகை; நன்னாடு – பண்புத்தொகை; மருண்டனென் – தன்மை ஒருமை வினைமுற்று; ஒடியா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

### பகுபத உறுப்பிலக்கணம்

மருண்டனென் – மருள்(ண்) + ட் + அன் + என்

மருள் – பகுதி, 'ள்' 'ண்' ஆனது விகாரம்

ட் – இறந்தகால இடைநிலை, அன் – சாரியை

என் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

துய்த்தல் – துய் + த் + தல்

துய் – பகுதி, த் – சந்தி, தல் – தொழிற்பெயர் விகுதி

### புணர்ச்சி விதி

மண்ணுடை – மண் + உடை

தனிக்குறில்முன் ஒற்று உயிர்வரின் இரட்டும் – மண்ண் + உடை

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – மண்ணுடை

புறந்தருதல் – புறம் + தருதல்

மவ்வீறு ஒற்றழிந்து உயிரீறு ஒப்பவும் வன்மைக்கு இனமாத் திரிபவும் ஆகும் – புறந்தருதல்.

#### நூல்வெளி



எட்டுத்தொகையில் அமைந்த புறத்திணை நூல்களுள் ஒன்று பதிற்றுப்பத்து. சேர மன்னர்கள் பத்துப்பேரின் சிறப்புகளை எடுத்தியம்பும் இது, பாடாண் திணையில் அமைந்துள்ளது. முதல் பத்துப் பாடல்களும் இறுதிப் பத்துப் பாடல்களும் கிடைக்கவில்லை. ஒவ்வொரு பாடலின் பின்னும் துறை, வண்ணம், தூக்கு, பாடலின் பெயர் என்பவை இடம்பெற்றிருக்கின்றன; பாடலில் வரும் சிறந்த சொற்றொடர் அப்பாடலுக்குத் தலைப்பாகத் தரப்பட்டிருக்கிறது. பாடப்பகுதிப் பாடலுக்குச் சேரலாதனின் படைவீரர் பகைவர்முன் நிரையபாலரைப் போலப் (நரகத்து வீரர்கள்) படைவெள்ளமாக நின்றதால் 'நிரைய வெள்ளம்' என்று தலைப்பு இடப்பட்டுள்ளது. பாடப்பகுதியான இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவனைப் பாடிய குமட்டூர்க் கண்ணனார், உம்பற்காட்டில் 500 ஊர்களையும் தென்னாட்டு வருவாயுள் பாதியையும் பரிசாகப் பெற்றார்.

#### கற்பவை கற்றபின்...



பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து (738)

என்ற குறள்வழி நாட்டிற்கு அழகு சேர்ப்பன குறித்துக் கலந்துரையாடுக.

விரிவானம்

இயல் 7

## சிந்தனைப் பட்டிமன்றம்







தமிழர் சிந்தனைக்கான வெளிப்பாட்டு வடிவங்களில் சிறப்பானதொரு வடிவம் பட்டிமன்றமாகும். முரண்பாடான பல கருத்துகளை விளக்கவும் நிலைநாட்டவும் பட்டிமன்றம் உதவுகின்றது. பண்பட்ட முறையில் கருத்துகளை முன்வைத்துப் பேசுகையில் சிந்தனையாற்றலையும் பேச்சுத்திறனையும் மொழியாளுமையையும் வளர்த்தெடுக்கிறது.

அரசு மேல்நிலைப் பள்ளி – அரங்கம்

முன்னிலை: தமிழாசிரியர் தங்கமணி

நடுவர்: மாணவர் இளங்கோ

**இளைஞர்களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுவது**

| வீடா? | நாடா? |
|---|---|
| மாணவர்கள் எழில், எலிசபெத் | மாணவர்கள் அமுதா, அப்துல்லா |

### நடுவரின் முன்னுரை

பெருமதிப்பிற்குரிய தமிழாசிரியர் அவர்களே! என் இனிய நண்பர்களே! வணக்கம்.

இளமை என்றாலே அறிவு, துணிவு ஆகிய இரண்டின் கலவை எனலாம் அறிவூக்கத்திற்கும் படைப்பூக்கத்திற்கும் அடித்தளமிடப்படும் பருவம் இது.

இந்தச் சிந்தனைப் பட்டிமன்றத்திற்கு இளைஞர்களை முதன்மைப்படுத்திய தலைப்பு ஏன் வழங்கப்பட்டது என்று பலரும் எண்ணலாம்.

இந்திய மக்கள் தொகையில் இன்று சரிபாதி இளைஞர்கள் அல்லவா! நம்முடைய பங்களிப்பு இன்றி வீடோ, நாடோ எந்தவித வளர்ச்சியையும் அடைந்துவிட முடியாது. எனவேதான், தலைப்பு இளைஞர்களை மையப்புள்ளியாக வைத்துச் சுழல்கிறது.

(கரவொலி....)

ஆண் மாணவர்கள் மட்டும் ஏன் கைதட்டுகிறார்கள்? எனக்குப் புரிந்துவிட்டது. இன்றைய தமிழ்ச் சமுதாயம் 'இளைஞர்' என்ற சொல்லிற்கு 'இளவயது ஆண்கள்' என்றே பொருள்கொண்டு பழகிவிட்டது. இளைஞர் என்ற சொல் இருபாலரையும் குறிக்கின்ற பொதுச்சொல் என்றே புரிந்துகொள்வோம். கவிஞர் தாராபாரதி எழுச்சியுடன்,

"வீட்டுக்கு உயிர் வேலி!
வீதிக்கு விளக்குத்தூண்!
நாட்டுக்குக் கோட்டை மதில்!
நடமாடும் கொடிமரம் நீ"

என்று இளைஞர்களைப் பார்த்துப் பாடினார். அறிவியல் யுகத்தைத் தாங்கும் தூண்களாகத் திகழும் இளைய சமுதாயத்திற்கு வீடும் நாடும் துணைபுரிகிறதா?

இந்தக் கேள்விக்கு விடை தேட முனைகிறது இந்தச் சிந்தனைப் பட்டிமன்றம். இளைஞர்களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுவது வீடே! என்று நண்பர் எழிலைப் பேச அழைத்து என் தொடக்கவுரையை முடிக்கின்றேன். வணக்கம்.

**எழில்:** பட்டிமன்றங்கள் பலவும் இன்று நீர்த்துப்போய்விட்ட காலகட்டத்தில் சிறப்பான ஒரு தலைப்பைத் தந்து சிந்தனைக் களமாக மாற்றியிருக்கின்ற தமிழாசிரியர் தங்கமணி அம்மா அவர்களே! நல்ல தீர்ப்பைத் தரவிருக்கின்ற நடுவர் அவர்களே! நண்பர்களே! வணக்கம்.

இளைஞர்களின் முன்னேற்றப் பாதையில் முதல் படிக்கல்லாகவும் அவர்கள் கொடுமுடியைத் தொடுவதற்கு அடித்தளமாகவும் விளங்குவது இல்லம்தானே. அன்பையும் அறிவையும் உணர்த்தும் உரைகல்லாக வீடல்லவா விளங்குகிறது. பிறக்கின்ற ஒவ்வொரு குழந்தைக்கும் தாயின் முகம்தானே முதல் பாடப்புத்தகம்.

குழந்தைகளுக்கு உலகத்தைத் தாய்தான் முதன்முதலில் அறிமுகப்படுத்துகிறார். 'தங்கமக பூம்பாதம், தண்ணிபட்டா கொப்பளிக்கும்' என்று அன்பு காட்டிப் பிள்ளையை வளர்த்து, வாழ்வின் ஒவ்வொரு நிலையையும் உணரவைக்கின்றார்.

சொல்லப்போனால் 'கற்றல்' என்பதே வீட்டிலிருந்துதான் தொடங்குகிறது. தந்தையோ அதைத் தொடர்கிறார். அடித்தளம் பலமாக இருந்தால்தானே கட்டடம் வலிமையாக அமையும். எனவே, அடித்தளம் வீட்டுச்சூழல். அதன்மீதுதான் நமது வெற்றி கட்டி எழுப்பப்படுகிறது. நடுவர் எடுத்தாண்ட கவிஞாயிறு தாராபாரதியின் கவிதையை நானும் துணைக்கு அழைக்கிறேன்.

**"எத்தனை உயரம் இமயமலை – அதில்**
**இன்னொரு சிகரம் உனது தலை!**
**எத்தனை ஞானியர் பிறந்த தரை – நீ**
**இவர்களை விஞ்சிட என்ன தடை?"**

என்று முழங்கிய கவிஞரின் வழியில் நான் முன்னேற வீடுதான் என்னைத் தாங்குகிறது. ஆகவே, நடுவர் அவர்களே! இளையோர் முன்னேற்றத்தின் முகமும் அகமுமாக அமைவது வீடே! என்று தீர்ப்பு வழங்க வேண்டுகிறேன். நன்றி வணக்கம்.

**நடுவர்:** நான் எதிர்பார்க்கவே இல்லை. நல்ல தொடக்கத்தை நிகழ்த்திவிட்டார் எழில். மிகச் சிறப்பாகப் பேசி அமர்ந்திருக்கும் எழிலின் கருத்தை மறுத்துப் பேச வருகிறார் நண்பர் அப்துல்லா. வாருங்கள், உங்களுக்காகக் கரவொலி காத்திருக்கின்றது.

**அப்துல்லா:** மழை பெய்கிறபோது எல்லோரும் வெளியில் இருந்து வீட்டுக்குள் ஓடுவோம். ஆனால், எட்டயபுரத்து இளம்புயல் மகாகவி பாரதி வீட்டுக்குள்ளிருந்து வெளியே ஓடிவருவார். மழையில் நனைந்துகொண்டே,

**"எத்தனை கோடி இன்பம் வைத்தாய்**
**எங்கள் இறைவா"**

என்று பாடுவார். பாட்டுக்குள் புயல்வைத்த பாரதிக்கும் இந்த அவைக்கும் என் பணிவான வணக்கம்.

வீடு அஃதொரு சிறிய கூடு. அதற்குள்தான் எத்தனை முரண்பாடு. குடும்பத்திற்குள் இருந்த குதூகலமான உரையாடல் தற்போது தொலைந்து போய்விட்டது. ஆனால், கல்வியே வீட்டில் இருந்துதான் தொடங்குகிறது என்று எதிரணி சொல்கிறது.

நடுவர் அவர்களே! வீடு என்னும் சிறிய வட்டத்தைத் தாண்டி நாட்டை நாடிய பின்தான் நல்வாழ்வு துளிர்க்கத் தொடங்குகிறது. பாரதியையே எடுத்துக்கொள்வோம், பாரதி வீதிக்கு வந்தார். உலகத்தைப் படிக்கத் தொடங்கினார். அதுவே, பாரதிக்குப் புதிய திசைகளை அறிமுகப்படுத்தியது.

"தமிழா! பயப்படாதே.

வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் போட்டு ஐரோப்பிய சாஸ்திரங்களை எல்லாம் தமிழில் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்"

என்று நமக்குக் கட்டளையிட்டார்.

'தேடுகல்வி இலாததோர் ஊரைத் தீயினுக்கு இரையாக மடுத்தல்'

என்று கல்விக்கூடங்களின் இன்றியமை யாமையைச் சினத்துடன் எடுத்துக்காட்டினார்.

வீடு என்பது உறவுகளுக்குள்ளேயே நம்மைச் சுற்றவைக்கிறது. ஆனால், நாட்டின் கல்விச்சாலையோ புத்தகங்களின் ஊடே உலகத்தைத் திறந்து காட்டுகின்றது. வேறுபாடுகளைக் கடந்து புதிய நண்பர்களையும் உறவினர்களையும் அடையாளம் காட்டுகிறது. மேலும், இந்த யுகம் அறிவியல் தொழில்நுட்பக் கல்வி யுகம் என்று அறிஞர்கள் சொல்வதை, நாடுதான் நமக்கு அறிமுகப்படுத்துகிறது. எனவே, எல்லோரையும் இணைக்கின்ற பொதுவெளி, நாடுதான் என்பதை எதிரணியினர் உணர வேண்டும். நடுவர் அவர்களே! நல்ல தீர்ப்பைத் தருமாறு வேண்டி விடைபெறுகின்றேன். நன்றி வணக்கம்.

**நடுவர்:** அன்பு நண்பர் அப்துல்லாவின் உரைவீச்சு நம் எல்லோரின் உள்ளங்களையும் கொள்ளைகொண்டது. எரிமலையாகக் கொதித்துவிட்டார். சரி, தோழி எலிசபெத்தின் நிலையைப் பார்த்தால்தான் இரக்கமாக இருக்கின்றது. வருக வருக. உங்கள் கருத்தோட்டங்களை அள்ளித் தருக.

**எலிசபெத்:** வீட்டினுள் உலகத்தை எனக்கு அறிமுகப்படுத்திய என் பெற்றோரைப் போற்றுகின்றேன். கற்றோர் நிறைந்த அவையை வணங்குகின்றேன். வீடு என்றால் எடுத்தெறிந்து பேசுகிற அளவிற்கு எதிரணிக்கு எளிதாகப் போய்விட்டதா? வீடு என்பது நீங்கள் நினைப்பதுபோலச் சிறு கூடு அன்று. அது நமது பண்பாட்டையும் மரபையும் காத்து நிற்கும் கருவூலம். எந்தவொரு தேடலும் இல்லத்திலிருந்துதான் தொடங்குகிறது. அன்பின் தலைவாசலாக, அறிவின் நாற்றங்காலாக வீடுதான் விளங்குகிறது. எப்படித் தெரியுமா?

பெற்றோர் பாடிய தாலாட்டும், தாத்தா பாட்டி சொன்ன கதைகளும் நமக்கான கைவிளக்குகள் அல்லவா! என்னை உப்பு மூட்டைதூக்கிச் சுமந்த, என் உடன் பிறந்தவர்களின் முதுகிலிருந்துதான் நேசத்திற்கான உள்ளுணர்வு பிறந்து வளர்ந்தது.

உணவு எப்படி உற்பத்தியாகிறது என்று காட்டுவதற்காக என்னை விளை நிலத்திற்கு அழைத்துச் சென்ற பெற்றோர்களே என் முதல் பேராசிரியர்கள். பனையோலையில் காற்றாடி செய்யப் பழக்கியதும் நுங்கைத் தின்று அந்தக் காய்களில் வண்டி கட்டி விளையாடக் கற்றுக்கொடுத்ததும் எனக்குப் படைப்பாற்றலைச் சொல்லிக்கொடுத்ததும் என் வீடுதான். குழந்தைப் பருவத்தைச் சரியாகக் கடந்து வருவதற்குக் கற்றுக்கொண்டால் இளமைப் பருவம் இனிதே வளமடையும். எனவே, இல்லம் என்கிற வீடுதான் இளைஞர்களின் முன்னேற்றத்திற்குக் கலங்கரை விளக்கமாக நின்று வழிகாட்டுகிறது. நடுவர் அவர்களே! நீங்களும் உங்கள் வாழ்க்கையைத் திரும்பிப் பார்த்துத் தீர்ப்புச் சொல்லுங்கள். நன்றி வணக்கம்.

**நடுவர்:** கிடைத்த வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்திக்கொண்டார் எலிசபெத். நன்று தோழி, உங்கள் நாவன்மைக்கு என் நல்வாழ்த்துகள். இப்போது அமுதாவின் நேரம், வாருங்கள் அமுதா! புதிய விடியலுக்கான வெளிச்சமாக உங்கள் பேச்சு அமையட்டும்.

**அமுதா:**

"நல்லதோர் வீணை செய்தே அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ!
சொல்லடி சிவசக்தி – எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்
வல்லமை தாராயோ – இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?"



என்று எனக்கு நாட்டு நலத்தைப் புதிய வழித்தடத்தில் கற்றுக்கொடுத்த முண்டாசுக் கவிஞனை முதலில் வணங்கி அவைக்கு என் பணிவான வணக்கத்தைச் சொல்லி மகிழ்கிறேன்.

வீட்டைப் பற்றிய எண்ணங்களை விசாலப் பார்வையில் பார்க்காமல் எலிசபெத் ஏன் இப்படிக் குறுகிப் போனார் என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. வீடு அப்படி என்ன பெரிதாய்க் கற்றுக் கொடுத்துவிட்டது? ஆண்களுக்கு வேண்டுமானால் அது அறிவின் உறைவிடமாக இருக்கலாம். ஆனால், பெண்களுக்கு அது தங்கக் கம்பிகளால் செய்யப்பட்ட கூண்டுதான். வீடு எப்படிப்பட்ட சொலவடைகளைச் சொல்லிக் கொடுத்தது? எத்தகைய கதைகளைப் போதித்தது? 'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு?', 'பெண்புத்தி பின்புத்தி' என்றுதானே சொன்னது. நான் பள்ளிக்கூடத்திற்கு வந்தபின்தான்

"பெண்மை வெல்க என்று கூத்திடுவோம்"

என்று பாரதி முழங்கியதையும்

"பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டில்
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே"

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முழங்கியதையும் அறிய முடிந்தது.

இன்று விஞ்ஞானிகளாக, கல்வியாளர்களாக, கவிஞர்களாக இளம் பெண்கள் கம்பீரமாக நடைபோடுவதற்கு நாடல்லவா கற்றுக் கொடுத்தது? ஊராட்சி மன்றங்களையும் சட்ட மன்றங்களையும் பார்த்த பின்தானே பெண்களுக்கான உரிமைகளைப் பெண்களே உணரத் தொடங்கினார்கள். எனவே, நடுவர் அவர்களே நாடுதான் நம்பிக்கையோடு இளைஞர்களை வழிநடத்துகிறது. எதிர்காலத்தை வளமாக்கத் துணைபுரிகிறது. எனவே, இளைஞர்களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுவது நாடே! என்ற தீர்ப்பினை வழங்குமாறு கேட்டு நிறைவு செய்கிறேன். நன்றி வணக்கம்.

**நடுவர்:** அன்புத்தோழி அமுதாவின் கருத்து மழையில் எல்லோருமே கரைந்து நெகிழ்ந்து போனோம். இரண்டு அணிகளும் மிகச் சிறப்பாகத் தங்கள் தரப்பு வாதங்களை முன் வைத்திருக்கின்றன.

இளைஞர்களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுவது வீடா? நாடா? இந்தத் தலைப்பு ஆழமான கேள்வியை

முன்வைக்கிறது. 'நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம்' என்றார் பாவேந்தர் பாரதிதாசன். 'வீட்டிற்கோர் புத்தக சாலை வேண்டும்' என்று அறிஞர் அண்ணா கூறினார். எத்தனை பேர் அதைச் செய்தோம்? பிறகெப்படி வீடு பல்கலைக்கழகமாக மாறும்? வீடு என்பது இளைஞர்களின் குழந்தைப் பருவத்தை எப்படிக் கட்டமைக்கிறது? பெற்றோரையும் உறவினரையும் எப்படி அறிமுகப்படுத்துகிறது? அமுதா சொன்னதைப்போல மரபார்ந்த பார்வையுடன் பெண்களுக்கான உரிமை உணர்வை வீடு மதிக்கிறதா?

பாச உணர்ச்சியை வளர்த்தெடுக்கிறது. ஆனால், பரந்து விரிந்த பகுத்தறிவை வீடு தருகிறதா? ஆனால், வீட்டைத் தாண்டி நாட்டுக்குள் வந்தால்தான் சங்ககாலப் புலவர் கணியன் பூங்குன்றனின் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற மேன்மையான பார்வையைப் பெறுகின்றோம். புரட்சிக் கவிஞர் பாரதிதாசனோ,

"விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை
மானுட சமுத்திரம் நானென்று கூவு
புவியை நடத்து; பொதுவில் நடத்து!"

என்று உலகத்தையே வீடாகக் காட்டுகிறார். வீடு என்பது நாட்டின் ஓர் அலகு மட்டுமே. நம் அனைத்து அறிவுத் தேவைகளையும் அது தந்துவிடுமா என்று நாம் சிந்திக்கவேண்டும். நாடு என்பது பன்முக ஆளுமை உடையது. நாடு, எத்தனை வகையான கல்விக் கூடங்களைத் தருகிறது? கல்வியில் எத்தனை வகையான படிப்புகள் இருக்கின்றன? நமக்கான மேற்படிப்பை எப்படித் தேர்வு செய்வது? எந்த வகையான வேலை வாய்ப்புக்குச் செல்வது? என்று இந்தத் தேடுதல்களுக்கான வாசல்களை இளைஞர்களுக்காகத் திறந்து வைத்திருக்கிறது.

ஆண் பெண் சமத்துவச் சிந்தனை, பேதங்களைக் கடந்த தோழமை, கல்வி சார்ந்த உயர்ந்த கருத்துகள் ஆகிய எல்லாவற்றையும் வழங்கி முழுமையான முன்னேற்றத்திற்குப் பெரிதும் வழிகாட்டுவது நாடே! நாடே! என்று எனது தீர்ப்பினைக் கூறி,

"செந்தமிழ் நாடெனும் போதினிலே – இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே – எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே!"

என்று பாடிய மகாகவி பாரதியின் அடிகளைச் சிந்தனையில் ஏந்திப் பட்டிமன்றத்தை நிறைவு செய்கிறேன்.

நன்றி, வணக்கம்!



தெரியுமா?

பட்டிமன்றம் ஒரு சுவையான விவாதக்களம். அது தமிழில் பழங்காலம் தொட்டே அறிமுகமான அறிவார்ந்த பேச்சுக்கலை வடிவம். வாழ்வியல் சிந்தனைகளை மக்கள் முன்பு வலிமையாக வைக்கும் வாதுரை அரங்கம். "பட்டிமண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்" என்று மணிமேகலைக் காப்பியம் குறிப்பிடுகின்றது.



கற்பவை கற்றபின்...

மனித வாழ்வை உயர்த்துவதற்குப் பெரிதும் தேவை பணமே! கல்வியே! என்பது பற்றி ஒரு சொற்போர் நிகழ்த்துக.

இனிக்கும் இலக்கணம்

இயல் 7

# ஆக்கப்பெயர்கள்




உலகிலுள்ள அனைத்துப்பொருள்களும் பெயரிடப்பட்டு அழைக்கப்படுகின்றன. முன்னோர்கள் சில பொருள்களுக்குக் காரணம் கருதியும் சில பொருள்களுக்குக் காரணமின்றியும் பெயர் வைத்தனர். இலை, மண், கல், நாற்காலி, காற்றாடி எனப் பெயர்களை நினைவில் கொண்டுவரும்போது இவற்றுள் காரணத்தோடு வரும் பெயர்களை உணர்ந்துகொள்ள முடிகிறது. காலப்போக்கில் பொருளின் மாற்றத்தால் அவை பயன்படுத்தப்படும் நிலைமைக்கேற்றவாறு காரணப்பெயர்கள் சிலநேரங்களில் இடுகுறிப்பெயர்களாகி விடுகின்றன.

மரத்தால் செய்யப்பட்டுப் பின்புறம் சாய்ந்துகொள்ளவும் கைகளை வைத்துக்கொள்ள வசதியாகவும் நான்கு கால்களைக் கொண்ட இருக்கைக்கு நாற்காலி எனக் காரணம் கருதிப் பெயர் வைத்தனர்.

ஆனால், இன்று நான்கு கால்கள் இல்லாத இருக்கை சிலவற்றையும் நாற்காலி என்றே அழைக்கிறோம். ஒருகாலத்தில் காரணம் கருதி வழங்கப்பட்ட ஒரு பொருளுக்கான பெயர் இன்று இடுகுறியாக வழங்கப்படுகிறது.

காலச் சூழலுக்கேற்றவாறு நம் பயன்பாட்டிற்கெனப் பல்வேறு பெயர்களைப் புதியதாக ஆக்கிக்கொள்கிறோம். அவை இடுகுறியாகவும் இருக்கலாம்; காரணமாகவும் இருக்கலாம். இவ்வாறு, புதியதாக ஆக்கப்படும் சொல் ஆக்கப்பெயர் என அழைக்கப்படுகின்றது. ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு என்பது பழமொழி. இதில் ஆத்திரம் கொண்ட ஒருவனைக் குறிப்பிட காரன் என்னும் விகுதி சேர்த்து ஆத்திரக்காரன் என்னும் சொல்லை உருவாக்குகிறோம்.

பெயர் அல்லது வினைச்சொற்களுடன் விகுதிகளைச் சேர்த்து ஆக்கப்படும் பெயர்ச்சொற்கள் ஆக்கப் பெயர்கள் (Derivative noun) எனப்படும். இவ்வாறு பெயர்ச்சொற்களை ஆக்கப் பயன்படும் விகுதிகளை ஆக்கப்பெயர் விகுதிகள் என்பர்.

**தமிழில் ஆக்கப்பெயர் விகுதிகள்**

காரன், காரர், காரி, ஆள், ஆளர், ஆளி, தாரர், மானம்

ஆக்கப் பெயர்களில் விகுதிகளே தனிச்சிறப்பு உடையன. தமிழ்ச்சொற்களோடு இவ்வகையான விகுதிகள் சேரும்போது எண்ணற்ற புதுச்சொற்கள் உருவாகித் தமிழின் சொற்களஞ்சியம் விரிவடைகின்றது. தமிழ்மொழியில் ஆக்கப்பெயர்கள் பேச்சு வழக்கிலேயே மிகுதியாக உள்ளன.

மலர்ந்த மலரைக்
கண்டு வாடினாள்
பூக்காரி

இத்துளிப்பாவில் பூ விற்கும் பெண், பூக்காரி என்று அழைக்கப்படுகிறார். மேலும், நெசவு செய்பவரை நெசவாளி/நெசவாளர் என்றும் உழைப்பவரை உழைப்பாளி/ உழைப்பாளர் என்றும் அழைக்கப்படுகிற ஆக்கப்பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன.



**தெரியுமா?**

வண்டிக்காரன், சினிமாக்காரன், மாட்டுக்காரன், வீட்டுக்காரன், ஆட்டோக்காரன் போன்ற சொற்கள் எல்லாம் காரன் விகுதி சேர்க்கப்பட்ட ஆக்கப்பெயர்கள் என்பதை அறிவீர்களா?

அறிவியல், திறமைசாலி, கோழைத்தனம், சமத்துவம், பெண்ணியம், பேச்சாளன், ஏற்றுமதி முதலான சொற்கள் ஆக்கப்பெயர்ச்சொற்களே என்பதை உணரவேண்டும். இச்சொற்களில் இயல், சாலி, தனம், துவம், இயம், ஆளன், மதி ஆகிய விகுதிகள் சேர்ந்து ஆக்கப் பெயராக்கப்பட்டுள்ளன.

> **கண்டறிக:** குரங்காட்டி, வண்டியோட்டி, பழந்தின்னி, வாயாடி, குடித்தனம், நீதிமான் இச்சொற்களைப் பிரித்து ஆக்கப்பெயர் விகுதிகளைக் கண்டறிக.

ஆக்கப்பெயர்ச்சொற்களை ஈற்றில் நிற்கும் விகுதிகளைக் கொண்டு மூவகையாகப் பிரிக்கலாம். அவை

1. பெயருடன் சேரும் விகுதிகள்
2. வினையுடனும் எச்சத்துடனும் சேரும் விகுதிகள்
3. பெயருடனும் வினையுடனும் சேரும் விகுதிகள்

### 1. பெயருடன் சேரும் விகுதிகள் (காரன், காரர், காரி, ஆள், ஆளர், ஆளி, தாரர்)

| பெயர் + விகுதி | = ஆக்கப்பெயர் |
|---|---|
| வண்டி + காரன் | = வண்டிக்காரன் |
| சமையல் + காரர் | = சமையல்காரர் |
| வேலை + காரி | = வேலைக்காரி |
| பணி + ஆள் | = பணியாள் |
| ஆணை + ஆளர் | = ஆணையாளர் |
| குற்றம் + ஆளி | = குற்றவாளி |
| விண்ணப்பம் + தாரர் | = விண்ணப்பதாரர் |

காரன், காரி, காரர் ஆகிய ஆக்கப்பெயர் விகுதிகள் உடைமை, உரிமை, உறவு அல்லது தொடர்பு, தொழில் அல்லது ஆளுதல் என்னும் நான்கு பொருள்களில் வரும்.

| | | |
|---|---|---|
| வீடு + காரன் – | வீட்டுக்காரன் – | உடைமை |
| தமிழ்நாடு + காரி– | தமிழ்நாட்டுக்காரி– | உரிமை |
| உறவு + காரர்– | உறவுக்காரர்– | உறவு |
| தோட்டம் + காரர்– | தோட்டக்காரர்– | தொழில் |

தொழிற்பெயர் விகுதிகளுடன் 'ஆளர்' என்னும் ஆக்கப்பெயர் விகுதி சேர்ந்து சொற்கள் உருவாகின்றன.

| தொழிற்பெயர் விகுதி | தொழிற்பெயர் | ஆக்கப்பெயர் |
|---|---|---|
| சி | ஆட்சி | ஆட்சியாளர் |
| அல் | செயல் | செயலாளர் |
| தி | செய்தி | செய்தியாளர் |
| மதி | இறக்குமதி | இறக்குமதியாளர் |
| வை | பார்வை | பார்வையாளர் |
| வு | தேர்வு | தேர்வாளர் |
| பு | அழைப்பு | அழைப்பாளர் |

'ஆளர்' 'ஆளி' முதலான விகுதிகள் இருபாற்பொதுப்பெயர்களை உருவாக்கத் துணை நிற்கின்றன.

| ஆளர் | | | | |
|---|---|---|---|---|
| உதவி | + ஆளர் | = | உதவியாளர் |
| காப்பு | + ஆளர் | = | காப்பாளர் |
| மேல் | + ஆளர் | = | மேலாளர் |
| கண்காணிப்பு | + ஆளர் | = | கண்காணிப்பாளர் |
| தயாரிப்பு | + ஆளர் | = | தயாரிப்பாளர் |

| ஆளி | | | |
|---|---|---|---|
| நெசவு | + ஆளி | = | நெசவாளி |
| முதல் | + ஆளி | = | முதலாளி |
| தொழில் | + ஆளி | = | தொழிலாளி |
| பயன் | + ஆளி | = | பயனாளி |
| கூட்டு | + ஆளி | = | கூட்டாளி |

### 2. வினையுடனும் எச்சத்துடனும் சேரும் விகுதிகள்

*வினையடியுடன் 'மானம்' என்னும் விகுதி சேர்ந்து புதிய சொற்கள் உருவாகின்றன.*

| வினை | | விகுதி | | ஆக்கப்பெயர் |
|---|---|---|---|---|
| அடை | + | மானம் | = | அடைமானம் |
| கட்டு | + | மானம் | = | கட்டுமானம் |
| தேய் | + | மானம் | = | தேய்மானம் |

### 3. பெயருடனும் வினையுடனும் சேரும் விகுதிகள்

*பெயருடன் சேர்ந்து வரும் விகுதிகள்.*

| பெயர் | விகுதி | ஆக்கப்பெயர் |
|---|---|---|
| அச்சு | அகம் | அச்சகம் |

*வினையுடன் சேர்ந்து வரும் விகுதிகள்*

| வினை | விகுதி | ஆக்கப்பெயர் |
|---|---|---|
| பயில் | அகம் | பயிலகம் |

*இவ்வாறு, தமிழில் எண்ணற்ற ஆக்கப் பெயர்ச்சொற்கள் விரவிக் கிடக்கின்றன. இவ்வகையான சொற்கள் நம் மொழிக்குப் புதிய புதிய சொற்களை உருவாக்குவதோடு நில்லாமல், மொழி காலந்தோறும் வளர்வதற்கும் துணைநிற்கின்றன.*

**அறிக :**

இன்று வழக்கிலுள்ள ஆக்கப்பெயர்களைப் பட்டியலிடுக. அவை எவ்வெவ்விகுதி கொண்டு ஆக்கப்பட்டுள்ளன என்பதை ஆய்க.



**கற்பவை கற்றபின்...**

1. நீங்கள் வாழும் சூழலில் பயன்படுத்தப்படும் ஆக்கப்பெயர்களைப் பட்டியலிடுக.
2. படிப்பவர், படிப்பாளி இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை ஆராய்க.

## இலக்கணத் தேர்ச்சி கொள்

### பயிற்சி 1

**கீழ்க்காணும் பத்தியில் உள்ள ஆக்கப் பெயர்களை எடுத்தெழுதுக :**

*எங்கள் பள்ளியில் நடைபெற்ற புத்தகத் திருவிழாவிற்குக் காவல்துறை ஆணையாளர் சிறப்பு அழைப்பாளராகக் கலந்துகொண்டு உரையாற்றினார். அவர், "மாணவர்களாகிய நீங்கள் படிப்பகங்களைப் பயன்படுத்தி விண்ணியல், மண்ணியல் போன்ற துறைகளில் சிறந்து விளங்கவேண்டும். நல்ல நண்பர்களைக் கூட்டாளி ஆக்கிக்கொண்டு உதவியாள் இல்லாமலே ஒரு நிறுவனத்தின் மேலாளராகவோ முதலாளியாகவோ ஆகலாம்" என்று கூறி மாணவர்களை ஊக்கப்படுத்தினார்.*

### பயிற்சி 2

**அடைப்புக்குள் உள்ள ஆக்கப்பெயர் விகுதிகளைக் கொண்டு விடுகதைகளுக்குரிய ஆக்கப்பெயர்களைக் கண்டறிக :**

1. வேவு பார்த்திடுவான்; ஓசையின்றிச் சென்றிடுவான் (*ஆளி*) – ________
2. அறிவைத் தேடிப் போகுமிடம்; உலகம் அறிய உதவுமிடம் (*அகம்*) – ________
3. வந்தால் மகிழ்ச்சி இது; உழைத்தால் கிடைக்கும் இது (*மானம்*) – ________
4. வேட(ஷ)ம் போட்டவன் வேடதாரி; பட்டம் வாங்கினவன் ? (*தாரி*) – ________
5. அளந்து அளந்து கொட்டிடுவான்; அகம் மகிழத் தந்திடுவான் (*ஆள்*) – ________



# நம்மை அளப்போம்




## பலவுள் தெரிக

1. 'ஜனப்பிரளயம் ' என்னும் வடமொழிச் சொல்லுக்குரிய தமிழ்ச்சொல் எது?

   அ) மக்கள் அலை   ஆ) உயிர் அலை   இ) மக்கள் வெள்ளம்   ஈ) மக்கள் அவை

2. கூற்று: எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான பதிற்றுப்பத்து, புறம் சார்ந்த நூல்.

   காரணம்: சேரமன்னர் பதின்மரின் சிறப்புகளைக் கூறுகிறது இந்நூல்.

   அ) கூற்று சரி; காரணம் தவறு   ஆ) இரண்டும் சரி

   இ) இரண்டிற்கும் தொடர்பில்லை   ஈ) கூற்று தவறு; காரணம் சரி

3. 'அழகும் அறிவும் இளமையும் வாய்த்தவன்' – யார் யாரிடம் கூறியது?

   அ) அமைச்சர் கவிஞரிடம்   ஆ) மன்னர் அமைச்சரிடம்

   இ) அமைச்சர் மன்னரிடம்   ஈ) மன்னர் அமுதவல்லியிடம்

4. அடையாறுப் பாலத்தின் சுவற்றில் எழுதாதீர்கள் - இவ்வரியில் உள்ள சொற்பிழைகளின் திருத்தம்

   அ) அடையாற்றுப் பாலத்தின் சுவற்றில்   ஆ) அடையாறுப் பாலத்தின் சுவரில்

   இ) அடையாறுப் பாலத்தின் சுவற்றில்   ஈ) அடையாற்றுப் பாலத்தின் சுவரில்

5. ஆக்கப்பெயர் விகுதி பெறாத சொல்லைத் தேர்க.

   அ) காவலாளி   ஆ) மேலாளர்   இ) உதவியாள்   ஈ) ஆசிரியர்

## குறு வினா

1. 'நாழிக்குள் திணிக்கும் மருந்துபோல்' என்னும் உவமையை ஜீவானந்தம் பேச்சுடன் ஒப்பிடுக.
2. உழைப்பாளர்களின் தோள் வலிமையால் விளைந்தன யாவை ?
3. அலைகடல், புதுக்கியவர் – இலக்கணக் குறிப்புத் தருக.
4. செந்துறைப் பாடாண்பாட்டு – துறை விளக்கம் எழுதுக.

## சிறு வினா

1. ஜீவாவின் பேச்சுநடை குறித்துச் சுந்தரராமசாமி கூறுவன யாவை?
2. "உயர்தமிழை உயிரென்று போற்றுமின்கள்" – இடம் சுட்டிப் பொருள்விளக்கம் தருக.
3. பெருங்காடு, உழுதுழுது – பிரித்துப் புணர்ச்சி விதி எழுதுக.
4. 'சேரநாடு செல்வ வளம் மிக்கது' என்ற கூற்றிற்குரிய காரணங்களைக் குறிப்பிடுக.
5. ஆக்கப்பெயர் விகுதிகள் தற்கால வாழ்வியலில் மிகுந்துள்ளன – ஏன் ?

### நெடு வினா

1. சுந்தர ராமசாமியின் "காற்றில் கலந்த பேரோசை" என்னும் தலைப்பு ஜீவாவின் வாழ்க்கைக்கு எங்ஙனம் பொருந்தும் என்பதை விளக்குக.

2. பாரதிதாசன் ஒரு 'புரட்சிக்கவி' என்பதை உதாரன் பாத்திரம் வாயிலாக மெய்ப்பிக்க.

3. சிந்தனைப்பட்டிமன்றத்தின் நிகழ்வுகளைச் சுவை குன்றாமல் தொகுத்து எழுதுக.




## மொழியை ஆள்வோம்

### சான்றோர் சித்திரம்


மயிலை சீனி. வேங்கடசாமி
(1900 – 1980)

தமிழ் மொழியில் மறந்ததும் மறைந்ததுமான சிறந்த செய்திகள், அளவுகடந்து உள்ளன. அவற்றை வெளிக்கொணர்ந்து, வீரிய உணர்வுடன் வெளியிட்டவர் அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி ஆவார். அவர் எழுதிய கட்டுரைகள் அனைத்தும் புதிய புதிய செய்திகளைப் புலப்படுத்திய விந்தைப் படைப்புகள். இராமேசுவரத் தீவு, உறையூர் அழிந்த வரலாறு, மறைந்துபோன மருங்காப்பட்டினம் போன்ற தனித்தன்மைகொண்ட அவர்தம் கட்டுரைகள் வரலாற்றில் புதிய வெளிச்சம் பாய்ச்சின. கொங்கு நாட்டு வரலாறு, துளுவ நாட்டு வரலாறு, சேரன் செங்குட்டுவன், மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன், மூன்றாம் நந்திவர்மன் முதலிய நூல்கள் அவர் நமக்கு வழங்கியுள்ள வரலாற்றுச் செல்வங்கள். அவருடைய 'களப்பிரர் காலத் தமிழகம்' என்னும் ஆய்வு நூல், இருண்ட காலம் என்று ஆய்வாளர்களால் வருணிக்கப்பட்ட களப்பிரர் காலத்திற்கு ஒளியூட்டி, வரலாற்றுத் தடத்தைச் செப்பனிட்டது.

நகராட்சிப் பள்ளி ஆசிரியராக நெடுங்காலம் பணியாற்றிய அவர் தன்னுணர்வால், உறுதியான உழைப்பால், தமிழ்ப்பற்றால் பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் மதித்துப் போற்றும் பணிகளைச் செய்தார். ஆங்கிலம், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளைக் கற்றுத் தேர்ந்தவர். சிறந்த வரலாற்றாசிரியர், நடுநிலை பிறழாத ஆய்வாளர், மொழியியல் அறிஞர், இலக்கியத் திறனாய்வாளர் என்றெல்லாம் போற்றப்பட்ட பன்முகச் சிறப்புக் கொண்டவர். அவருக்கு மதுரைப் பல்கலைக்கழகம் 1980ஆம் ஆண்டு, 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் பட்டமளித்துப் பாராட்டியது. கிறித்துவமும் தமிழும், சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும், மறைந்து போன தமிழ்நூல்கள் போன்ற பல நூல்களால் தமிழ் ஆய்வு வரலாற்றில் மயிலை சீனி. வேங்கடசாமி அழியாச் சிறப்பிடம் பெற்றுள்ளார்.

1. மறந்ததும் மறைந்ததும் – இதுபோன்ற இரண்டு தொடர்களை உருவாக்குக.

   (எ.கா.) படித்ததும் படைத்ததும்

2. <u>அழிந்த</u> வரலாறு, <u>புதிய</u> வெளிச்சம் – அடிக்கோடிட்ட சொற்களின் எச்ச வகைகளை எழுதுக.

3. அழியாச் சிறப்பிடம் – இலக்கணக்குறிப்புத் தருக.

4. முதலிய, முதலான – பொருளறிந்து சொற்றொடர் அமைக்க.

5. பத்தியில் உள்ள உயர்வு சிறப்பு உம்மையைக் கண்டு எழுதுக.

**தமிழாக்கம் தருக.**

Balu: Hi, Good evening.

Velu: Hi Balu, Good evening.

Balu: Yesterday you were watching the Republic day function the whole day.

Velu: Yes, I was touched by one award ceremony.

Balu: Which award?

Velu: Param vir Chakra award, highest award for army personnel.

Balu: Why were you touched?

Velu: Most of the awards were received by the wives of soldiers posthumously.

Balu: Why? What do you mean by posthumous?

Velu: it means 'after death'. Many soldiers had laid down their lives protecting the border of our Motherland. They have sacrificed their lives to save our Country. So that we can be free and safe.

**மரபுச்சொற்களைத் தொடரில் அமைத்து எழுதுக.**

சான்று: எதிர்நீச்சல்

வாழ்க்கையில் எத்தனை தோல்விகள் வந்தாலும் அவற்றைக் கடந்து எதிர்நீச்சல் போட்டு வெற்றி பெறவேண்டும்.

சொந்தக்காலில் நிற்றல்

தாளம் போடுதல்

மதில்மேல்பூனை

நிறைகுடம்

கைதூக்கிவிடுதல்

கண்ணாயிருத்தல்

அவசரக்குடுக்கை

முதலைக்கண்ணீர்

கானல்நீர்.

**வரைபடம் கொண்டு விவரிக்க**

நீங்கள் பேருந்து நிறுத்தத்தில் நின்று கொண்டிருக்கிறீர்கள். வழி தெரியாத ஒருவர், உங்களிடம் வந்து நகலகத்திற்கு வழி கேட்கிறார். கீழ்க்காணும் வரைபடத்தைக் கொண்டு, அப்புதியவருக்கு வழிகாட்டுங்கள்.....



**இலக்கியநயம் பாராட்டுக.**

*சுதந்திரம் தருகிற மகிழ்ச்சியைக் காட்டிலும்*
*சுகம்தரும் உணர்ச்சியும் வேறுண்டோ?*
*பதம்தரும் பெருமையும் பணம்தரும் போகமும்*
*பார்த்தால் அதைவிடக் கீழன்றோ?*
*இதம்தரும் அறங்களும் இசையுடன் வாழ்தலும்*
*எல்லாம் சுதந்திரம் இருந்தால்தான்*
*நிதம்தரும் துயர்களை நிமிர்ந்துநின் றெதிர்த்திட*
*நிச்சயம் சுதந்திரம் அது வேண்டும்.*

– நாமக்கல் கவிஞர்.

*பெட்டிக்கு வந்த பின்*
*எல்லாக் காய்களும் சமம்தான்*
*சதுரங்கக் காய்கள்.*

– இஸ்ஸா

• சதுரங்க விளையாட்டின்போது வெவ்வேறு அதிகாரங்களைப் பெறும் காய்கள் பெட்டிக்குள் வந்தபின் சமமாகின்றன. மனிதர் நிலையும் அத்தன்மையதே.



## மொழியோடு விளையாடு

**சொல்லெடுத்துத் தொடர் அமைக்க.**

கீழுள்ள கட்டத்தினுள் நுழைந்து சொற்களை எடுத்தும் தேவையான சொற்களைச் சேர்த்தும் தொடர்கள் அமைக்க. (அடைபட்ட பகுதியில் உள்ள சொற்களைத் தவிர்க்கவும்)

(எ-கா.) மாணவர்கள் வகுப்பறையினுள் நுண்கலைகளையும் கற்க வேண்டும்.




**செய்து கற்போம்**

நல்ல சிந்தனைகளை விதைத்த தலைவர்கள் பற்றிய செய்திகளைத் திரட்டி ஒப்படைவு உருவாக்குக.

படித்துப் பார்த்துப் படைக்க.

| | | |
|---|---|---|
| *பத்தாவது தடவையாக*<br>*விழுந்தவனுக்கு*<br>*முத்தமிட்டுச் சொன்னது பூமி*<br>*'ஒன்பது முறை எழுந்தவனல்லவா நீ!'*<br>– ஈரோடு தமிழன்பன் | *எப்போதும் மத்தாப்பு*<br>*கொளுத்தி விளையாடுகிறது*<br>*மலையருவி*<br>– கழனியூரன் | ______<br>______<br>______ |

– ஹைக்கூ என்பதற்குத் தமிழில் "துளிப்பா" என்று பொருளுண்டு தெரியுமா?

– கவிதைகளுக்குப் பொருத்தமாகத் தலைப்பிடுக.



## நிற்க அதற்குத் தக

**உம்முடைய பொறுப்பை உணர்ந்து கட்டங்களை நிறைவு செய்க.**

| அடையாளம் | பெருமிதம் |
|---|---|
| இந்தியன் | ஒருமைப்பாட்டுணர்வுடன் சமூகக் கூட்டமைப்பில் இணைந்து வாழ்கிறேன். |
| தமிழன் | |
| மாணவன் | |
| மகன் / மகள் | |
| சகோதரன் / சகோதரி | |
| தோழன் / தோழி | |

## கலைச்சொல் அறிவோம்

**உத்திகள்** – Strategies, **சமத்துவம்** – Equality, **தொழிற்சங்கம்** – Trade Union

**பட்டிமன்றம்** – Debate, **பன்முக ஆளுமை** – Multiple Personality, **புனைபெயர்** – Pseudonym



**அறிவை விரிவு செய்**

ஜீவா – வாழ்க்கை வரலாறு – கே. பால தண்டாயுதம்.

சொல்லாக்கம் – இ. மறைமலை




**இணையத்தில் காண்க**

http://www.bdu.ac.in/bharathidasan/ – பாரதிதாசன் படைப்புகள் முழுமையும்.

சுந்தர ராமசாமியின் சிறுகதைகள்.

இயல் 8

# யாரையும் மதித்து வாழ்





## கற்றல் நோக்கங்கள்

- கடிதம், எண்ணங்களை வலுவாக வெளிப்படுத்தும் ஓர் ஊடகம் என்பதைக் கற்று, கடிதம் எழுதுதல்
- இலக்கியம்வழி இயற்கை மனிதனுக்கு உதவுவதையும் உணர்த்துவதையும் அறிந்து மதிப்பளித்தல்
- பாலினச் சமத்துவத்தைப் புரிந்துகொண்டு சமூக வாழ்வியலில் நடைமுறைப்படுத்துதல்
- பிழையின்றி எழுதுவதற்கும் பிழைகளைத் திருத்தி எழுதுவதற்கும் பயிற்சி பெறுதல்



## பாடப் பகுதி

தாகூரின் கடிதங்கள்

ஒவ்வொரு புல்லையும் – இன்குலாப்

தொலைந்து போனவர்கள் – அப்துல் ரகுமான்

மனோன்மணீயம் – பெ. சுந்தரனார்

செவ்வி – நர்த்தகி நடராஜ்

மெய்ப்புத்திருத்தம்

இயல் 8

# தாகூரின் கடிதங்கள்




**நுழையும்முன்**

செய்தியை உரியவருக்குத் தெரிவிப்பதற்காக எழுதி அனுப்பப்படுவது கடிதமாகும். அதுவே, உரிய வடிவுடன் பொருட்செறிவாலும் கற்பனை நயத்தாலும் மொழிவளத்தாலும் கடித இலக்கியமாக உருப்பெறுகின்றது. உரைநடையில் மட்டுமன்றிக் காப்பியங்களிலும் சிற்றிலக்கியங்களிலும்கூடக் கடித இலக்கியம் காணப்படுவது அதன் காலத்தொன்மையை விளக்கும். கவித்துவ இயல்பு கொண்ட தாகூரின் கடிதங்கள் கற்பனை, நகைச்சுவை, ஆழ்ந்த சிந்தனை ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளன.

## சிதறிய கடிதங்கள்

*சிலாயிதக்,*
*9 ஆகஸ்ட் 1894*

*ஆறு ஒரேயடியாகக் கரை தளும்ப நிரம்பி இருக்கிறது. எதிர்க் கரையே தென்படவில்லை. ஓரோரிடத்தில் சுழல்களாகப் பொங்குகிறது. மீண்டும் ஓரோரிடத்தில் துள்ளி எழும் வெள்ளத்தைத் தன் இருகரங்களாலும் அடக்கி, அமுக்கிச் சமமாகப் பரவச் செய்தவாறு ஓடுகிறது. இறந்துபோன ஒரு சின்னஞ்சிறு பறவை, ஆற்றுவெள்ளத்தில் மிதந்து வருவதை இன்று கண்டேன். அதனுடைய சாவின் வரலாறு மிகவும் நன்றாகப் புரிந்துவிட்டது.*

*எங்கேயோ ஓர் ஊரின் எல்லையில் ஒரு தோப்பின் மாமரக் கிளையில் அதன் கூடு இருந்தது. இருட்டும் வேளையில் அது அதன் கூட்டுக்குத் திரும்பித் தன் துணையுடன் மிருதுவான சிறகின் வெம்மையில் தானும் தன் சிறகுகளை விரித்துக்கொண்டு உடல் சோர்ந்து உறங்கியது. திடீரென்று இரவில் 'பத்மா' (கிழக்கு வங்காளத்தின் பெரிய நதி) சற்று ஒருபுறமாகப் புரண்டாள். அவ்வளவுதான்! மரத்தின் கீழிருந்த மண் சரிந்து விழுந்தது. கூட்டை விட்டுச் சிதறிவிழுந்த பறவை ஒருகணம் கண் விழித்தது. அதன் பிறகு கண் விழிக்க வேண்டிய அவசியமே அதற்கு இராமல் போய்விட்டது.*

*நாட்டுப்புறங்களில் இருக்கும்போது, எல்லாவற்றையும் விழுங்கவல்ல இந்த மாபெரும் இயற்கையே சிறந்து விளங்குகிறது. பட்டணத்திலோ, மனித சமுதாயம்தான் மிகவும் முக்கியமானதாகத் தலைதூக்கி நிற்கிறது. அங்கே மனிதனுடைய கொடூரமான தன்மை வெளிப்படுகிறது. தன் சுகதுக்கத்திற்கு முன் மற்ற உயிர்களின் சுகதுக்கங்களைப் பற்றி மனிதன் எண்ணுவதுகூட இல்லை.*

*ஐரோப்பாவிலும் மனிதனுக்குத்தான் முக்கியமான இடம். அவனுடைய வழியோ மிகச் சிக்கலானது. அவர்கள் மற்ற பிராணிகளைச் சாதாரணமான உயிர்களென்றே நினைத்து விடுகிறார்கள். பாரத நாட்டினர், மனிதன் விலங்காக மாறுவதையோ, விலங்கு மனிதனாக மாறுவதையோ பற்றி எதுவும் தவறுதலாக எண்ணுவது இல்லை. அதனால்தான் நமது சாத்திரங்கள் எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டுவதை, நடக்கமுடியாத ஓர் அதிசயம் என்று விட்டுவிடவில்லை.*

*நாட்டுப்புறங்களில் இயற்கையோடு ஒன்றி உடனுக்குடன் இணைந்து பழகும்போது என் உள்ளத்தினுள் பாரத நாட்டின் இயல்பு தலைதூக்குகிறது. ஒரு பறவையின் சின்னஞ்சிறு இதயத்தினுள்ளும் வாழ்க்கையின் களிப்பு எத்துணை அதிகமாக இருக்கும் என்பது பற்றிச் சிந்திக்காமல் இருக்க என்னால் முடிவதில்லை.*

(சிதறிய பக்கங்கள். *113 ஆம் கடிதம்*)

## வழியிலும் வழிமுடிவிலும்



*16, செப்டம்பர் 1929*

*மரத்தின் கிளையில் பூ மலர்கிறது. அதற்குப் புகலிடம் அதுதான். ஆனால், மனிதன் அதற்குப் பெயரிட்டுத் தன் உள்ளத்தினுள் இடம் அளிக்கின்றான். நமது நாட்டில் மரங்களில் மலரும் பூக்கள் பல உள்ளன. மனிதன் அவை அனைத்தையும் மனத்தினுள் ஏற்றுக்கொள்ளவில்லை.*

*மலரிடம் இவ்வளவு அலட்சிய மனப்பான்மை வேறு எந்த நாட்டிலும் காணப்படுவதில்லை. அதற்குப் பெயர் இருக்கலாம். ஆனால், அது தெரியாததாக இருக்கும். சில மலர்கள் தங்கள் இன்மணத்தின் வலிமையால் புகழ்பெற்றுவிட்டன. அதாவது அலட்சியமாக அவற்றைப் பாராமல் சென்றாலுங்கூட அவை தாமாக முன் வந்து மணத்தினால் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கின்றன. நமது இலக்கியங்களில் அவை தவறாமல் அழைப்பைப் பெறுகின்றன. அவற்றுள் பல மலர்களின் பெயர்களை மட்டுமே நாம் அறிவோம். அவைகளைக் கண்டதுமில்லை. அவற்றைத் தெரிந்துகொள்ளும் முயற்சியையும் நாம் எடுத்துக்கொள்ளவில்லை.*

*பெயரகராதியில் ஜுதீ, ஜாதீ என்றெல்லாம் படிக்கின்றோம். யாப்பு சரிவர அமைந்துவிட்டால் நாம் களிப்பெய்துகின்றோம். ஆனால் 'ஜாதி' என்பது எது, 'ஜுதி' என்பது எது என்றெல்லாம் ஆராய நமக்கு ஆவல் பிறப்பதில்லை. பலவாறு முயற்சி செய்தபின் 'ஜாதீ' என்பது முல்லை வகையில் ஒரு பூ (சமேலி) என்பதைத் தெரிந்துகொண்டேன். ஆனால், 'ஸேவுந்தி' என்பது எந்த மலரின் பெயர் என்பது இன்றுவரையிலும் பலரைக் கேட்டும் பதில் கிடைக்கவில்லை.*

*சாந்திநிகேதனத்தில் ஒரு மரம் இருக்கிறது. அதனைப் 'பியால' என்று அழைக்கிறார்கள். ஆனால், ஸம்ஸ்கிருத காவியங்களில் புகழ்பெற்ற அந்த மரத்தைப்பற்றி எத்தனை பேருக்குத் தெரியுமோ! இன்னொரு விஷயத்தைப் பாருங்கள். ஆறுகள் விஷயத்தில் நமது உள்ளத்தில் இந்த அலட்சியம் இல்லை. மிகவும் சிறிய ஆறுகூட நமது மனத்தில் பிடித்தமாக இடம் பெற்றுள்ளது. புறாக்கண்ணி (கபோதாக்ஷி), மயில் விழியாள் (மயூராக்ஷி), விருப்புடையவள் (இச்சாமதி) என்றெல்லாம்! அவை அன்றாடம் நமக்கு உபயோகப்படுகின்றன. பூஜைக்குத் தேவையான மலர்களைத் தவிர வேறு எந்தப் பூக்களுடனும் நமக்கு அறிமுக அவசியம் எதுவும் இல்லை.*

*நாகரிக வழக்கத்தில் காலத்துக்கேற்றபடி சீக்கிரமே வாடிடும் மலர்களுடன் தொடர்பு உண்டு. தோட்டக்காரனுடைய கைகளில் அவற்றைப் பராமரிக்கும் பொறுப்பு இருக்கும். மலர்ச் செப்பினுள் வழக்கம்போல் போவதும் வருவதும்தான் அவற்றின் வேலை. இதைத்தான் தாமஸிகம் அதாவது 'மெடீரியலிஸம்' என்கின்றோம். ஸ்தூலப் பொருளுக்கு அப்பால் செல்ல இயலாமல் நம் மனம் திகைப்படைந்து நின்றுவிடுகிறது. இது போன்ற பெயரில்லா மலர்களின் நாட்டில் கவிஞரின் நிலை எவ்வளவு மோசமானது என்பதை யோசித்துப் பார். மலர்களின் ராஜ்யத்தில் அவனுடைய பேனாவின் நடமாட்டம் எத்துணைக் குறுகியது!*

*பறவைகள் விஷயத்திலும் இதேமாதிரிதான். காகம், குயில், மைனா, 'பௌ-கதா-கவோ' (இந்தச் சொற்களைப்போல் குரல் பயிற்றும் ஒரு புறா இனம்.) இவைகளை எப்படி விட்டுவிட முடியும்? ஆனால், எத்தனையோ நேர்த்தியான புட்கள் உள்ளன. அவைகளின் பெயர் அநேகமாகச் சாதாரண ஜனங்களுக்குத் தெரிந்திருக்கா. இயற்கையிடம் இந்த அலட்சிய மனப்பான்மைதான் நம்முடைய தோல்விகளுக்கெல்லாம் மூல காரணம். இந்தச் சுபாவம் காரணமாகத்தான் நாட்டு மக்களிடமும் நமது அலட்சிய மனப்பான்மை தீவிரமாகத் தலைதூக்குகிறது.*

*பரீட்சையில் தேறவேண்டின் சரித்திரப் பாடத்தைப் புறக்கணிக்க முடியாது. நமது தேசப்பற்று அந்தப் புத்தக மூட்டையால் உருவானது. தேசத்து மக்களிடம் கொண்டுள்ள பற்றுதலின் காரணமாக உண்டானதல்ல. நமது உலகம் எத்துணை குறுகலானது என்பதை யோசித்துப் பார். அதிலிருந்து எத்தனை பொருள்கள் இடம் பெறவில்லை என்பதையும் நினைத்துப் பார்.*

*(வழியிலும் வழிமுடிவிலும் – 42 ஆம் கடிதம்)*



தாகூரின் கையொப்பம்



நூல்வெளி

'பாரம்பரியத்தில் வேரூன்றிய நவீன மனிதர்' என்றும் 'கிழக்கையும் மேற்கையும் இணைத்த தீர்க்கதரிசி' என்றும் அழைக்கப்பட்ட தாகூர் தம் இளம் வயதிலேயே கவிதைகள் எழுதத் தொடங்கினார். 1913ஆம் ஆண்டு கீதாஞ்சலி என்ற கவிதை நூலுக்கு இலக்கியத்துக்கான நோபல் பரிசு பெற்றார். 1919ஆம் ஆண்டு நடைபெற்ற ஜாலியன்வாலா பாக் படுகொலையால் மனம் வருந்திய தாகூர், ஆங்கிலேய அரசைக் கண்டித்து அவர்கள் வழங்கிய 'சர்' பட்டத்தைத் திருப்பி அளித்தார். இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட இசைப் பாடல்கள், ஆயிரத்துக்கும் மேற்பட்ட கவிதைகள், ஏறக்குறைய இருபது பெரு நாடகங்கள், குறு நாடகங்கள், எட்டு நாவல்கள், எட்டுக்கும் மேற்பட்ட சிறுகதைத் தொகுப்புகள் என இலக்கியத்தின் பல்வேறு வடிவங்களிலும் நூல்களை எழுதியுள்ளார். அவற்றுடன் அவருடைய ஓவியப் படைப்புகள், பயணக் கட்டுரைகள், ஆங்கில மொழிபெயர்ப்புகள் ஆகியவற்றையும் இணைத்துக்கொண்டால் அவருடைய ஆளுமையின் பேருருவை அறிய முடியும். குழந்தைகள் இயற்கையின் மடியில் எளிமையாக வளர்க்கப்பட வேண்டும். தங்கள் வேலையைத் தாங்களே கவனித்துக்கொண்டு, மற்றவர்களுக்கும் தொண்டு செய்ய வேண்டும் என்ற எண்ணம் கொண்டு 1921இல் விஸ்வபாரதி பல்கலைக்கழகத்தை நிறுவினார். 'குருதேவ்' என்று அனைவராலும் அன்புடன் அழைக்கப்படும் தாகூரின் 'ஜனகணமன' என்னும் பாடல் இந்தியாவின் நாட்டுப் பண்ணாகவும் 'அமர் சோனார் பங்களா' என்னும் பாடல் வங்காள தேசத்தின் நாட்டுப் பண்ணாகவும் இன்றும் பாடப்பட்டு வருகின்றன.

சாகித்திய அகாதெமி வெளியிட்டுள்ள தாகூரின் கடிதங்கள் என்னும் நூலைத் தமிழில் மொழியாக்கம் செய்தவர் த.நா. குமாரசுவாமி. அவர் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, வங்கம், பாலி, ஆங்கிலம் ஆகிய மொழிகளைக் கற்றுத் தேர்ந்தவர். வங்க அரசு, தமிழ்–வங்க மொழிகளுக்கு அவர் ஆற்றிய தொண்டைப் பாராட்டி 'நேதாஜி இலக்கிய விருது' அளித்துச் சிறப்பித்துள்ளது.



கற்பவை கற்றபின்...

1. நேரு, இந்திராவிற்கு எழுதிய கடிதம் ஒன்றை வகுப்பறையில் படித்து அது குறித்துக் கலந்துரையாடுக.
2. உங்களது சுவையான பயண அனுபவம் ஒன்றைக் கடிதமாக எழுதுக.

கவிதைப்பேழை

இயல் 8

# ஒவ்வொரு புல்லையும்




## நுழையும்முன்

'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்னும் மகாகவி கூற்றின் நீட்சியே, 'கூவும் குயிலும் கரையும் காகமும் விரியும் எனது கிளைகளில் அடையும்' என்னும் இன்குலாபின் குரலாகவும் ஒலிக்கிறது. தம் எழுத்துகள் எளிய மக்களுக்கானவை என்னும் உறுதியுடன் எண்ணம், சொல், செயல் என்ற மூவகையிலும் நின்று வாழ்ந்தவர். அவர் பெயர் சொல்லி அழைக்க ஆசைப்பட்ட ஒவ்வொரு புல்லும் இந்த உண்மையை நமக்குச் சொல்லிக்கொண்டே இருக்கும்.

ஒவ்வொரு புல்லையும் பெயர் சொல்லி அழைப்பேன்
பறவைகளோடு எல்லை கடப்பேன்
பெயர் தெரியாத கல்லையும் மண்ணையும்
எனக்குத் தெரிந்த சொல்லால் விளிப்பேன்
நீளும் கைகளில் தோழமை தொடரும்
நீளாத கையிலும் நெஞ்சம் படரும்
எனக்கு வேண்டும் உலகம் ஓர் கடலாய்
உலகுக்கு வேண்டும் நானும் ஓர் துளியாய்
கூவும் குயிலும் கரையும் காகமும்
விரியும் எனது கிளைகளில் அடையும்.

போதியின் நிழலும் சிலுவையும் பிறையும்
பொங்கும் சமத்துவப்புனலில் கரையும்!
எந்த மூலையில் விசும்பல் என்றாலும்
என் செவிகளிலே எதிரொலி கேட்கும்.
கூண்டில் மோதும் சிறகுகளோடு
எனது சிறகிலும் குருதியின் கோடு!
சமயம் கடந்து மானுடம் கூடும்
சுவர் இல்லாத சமவெளி தோறும்.
குறிகள் இல்லாத முகங்களில் விழிப்பேன்
மனிதம் என்றொரு பாடலை இசைப்பேன்!

*- இன்குலாப்*



### நூல்வெளி

சாகுல் அமீது என்னும் இயற்பெயருடைய இன்குலாப் கவிதை, சிறுகதை, கட்டுரை, நாடகம், மொழிபெயர்ப்பு என இலக்கியத்தில் விரிவான தளங்களில் இயங்கியவர். அவருடைய கவிதைகள், 'ஒவ்வொரு புல்லையும் பெயர் சொல்லி அழைப்பேன்' என்ற பெயரில் முழுமையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. மரணத்துக்குப் பிறகு அவருடைய உடல், அவர் விரும்பியபடி செங்கை அரசு மருத்துவக் கல்லூரிக்கு அளிக்கப்பட்டது.



### கற்பவை கற்றபின்...

1. மனிதநேயம் பேசும் கவிதைகள் எவையேனும் ஐந்தைத் திரட்டி வகுப்பில் பகிர்க.
2. இயற்கையும் மனிதனும் என்னும் தலைப்பில் கட்டுரை ஒன்றை எழுதுக.

கவிதைப்பேழை

இயல் 8

# தொலைந்து போனவர்கள்




**நுழையும்முன்**

மானுட சமுதாயத்தின் விழிகள் ஒளியிழந்து கிடப்பதைத் தம் கவிதையால் உணர்த்தும் கவிஞர், அவ்விழிகளுக்கு ஒளியூட்ட விழைகிறார். நடக்காததை நடந்ததாகக் கருதிக்கொண்டு மாயையில் வாழும் மக்கள், ஒளியில் உண்மையைத் தேடும் தத்துவம் இக்கவிதை.

*விடிந்ததென்பாய் நீ அனுதினமும் – வான்*
*வெளுப்பது உனது விடியலில்லை*
*முடிந்ததென்பாய் ஒரு காரியத்தை – இங்கு*
*முடிதல் என்பது எதற்குமில்லை.*

*கற்றேன் என்பாய் கற்றாயா? – வெறும்*
*காகிதம் தின்பது கல்வியில்லை*
*பெற்றேன் என்பாய் எதைப்பெற்றாய்? – வெறும்*
*பிள்ளைகள் பெறுவது பெறுவதல்ல.*

*குளித்தேன் என்பாய் யுகயுகமாய் – நீ*
*கொண்ட அழுக்கோ போகவில்லை*
*அளித்தேன் என்பாய் உண்மையிலே – நீ*
*அளித்த தெதுவும் உனதல்ல.*

*உடைஅணிந்தேன் எனச் சொல்லுகிறாய் – வெறும்*
*உடலுக் கணிவது உடையல்ல*
*விடையைக் கண்டேன் என்றுரைத்தாய் – ஒரு*
*வினாவாய் நீயே நிற்கின்றாய்.**

*தின்றேன் என்பாய் அணுஅணுவாய் – உனைத்*
*தின்னும் பசிகளுக் கிரையாவாய்*
*வென்றேன் என்பர் மனிதரெல்லாம் – பெறும்*
*வெற்றியிலே தான் தோற்கின்றார்.**

*'நான்' என்பாய் அது நீயில்லை – வெறும்*
*நாடக வசனம் பேசுகிறாய்*
*ஏன்? என்பாய் இது கேள்வியில்லை – அந்த*
*ஏன் என்னும் ஒளியில் உனைத் தேடு.**



**பா வகை: சிந்து**

*- அப்துல் ரகுமான்*

*ஆப்கானிஸ்தானில் 1207இல் பிறந்த மௌலானா ரூமி ஆன்ம ஞானியாக மாறி சூஃபி பிரிவைத் தழுவினார். அவருடைய மஸ்னவி என்ற உலகப்புகழ் பெற்ற பாரசீக ஞான காவியம் குறிப்பிடத்தக்கது. அப்துல் ரகுமான் இது பற்றி எழுதியிருக்கிறார். புல்லாங்குழலை ஆன்மாவாகக் குறியீடு செய்து கவிதை படைத்திருக்கிறார் ரூமி.*

என்னை
மூங்கிற்காட்டிலிருந்து
வெட்டி வீழ்த்திப்
பிரித்ததற்காக
நான் எழுப்பும்
கூக்குரல் கேட்டு
ஆடவர் பெண்டிர் யாவரும்
அழுது புலம்புகின்றனர்.

*இதை, "தீய குணங்கள் என்ற கறைகள் படியாத தூய உலகம் அது. அப்போது ஆன்மா இறைத்தரிசனம் என்ற பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது. இத்தகைய நிலையிலிருந்த ஆன்மாவைப் போர், பொறாமை, பூசல், அகந்தை, கள்ளம், கபடம், பேராசை, சினம், காமம் நிறைந்த சடவுலகுக்கு அனுப்பினால் அது அழாமல் என்ன செய்யும்?"*

*என ரகுமான் விளக்குகிறார்.*

## இலக்கணக் குறிப்பு

கற்றேன் – தன்மை ஒருமை வினைமுற்று; உடை அணிந்தேன் – இரண்டாம் வேற்றுமைத்தொகை; உரைத்தாய் – முன்னிலை .ஒருமை வினைமுற்று

## பகுபத உறுப்பிலக்கணம்

**வென்றேன் – வெல்(ன்) + ற்+ஏன்**

வெல் – பகுதி (ல், ன் எனத் திரிந்தது விகாரம்)

ற் – இறந்தகால இடைநிலை

ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

**நிற்கின்றாய் – நில்(ற்)+ கின்று+ ஆய்**

நில் – பகுதி (ல், ற் எனத் திரிந்தது விகாரம்)

கின்று – நிகழ்கால இடைநிலை

ஆய் – முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி

**பெற்றேன் – பெறு(பெற்று) + ஏன்**

பெறு – பகுதி (பெற்று என ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டியது)

ஏன்– தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

**அணிந்தேன் – அணி+த்(ந்)+த்+ஏன்**

அணி – பகுதி

த் – சந்தி (த், 'ந்' எனத் திரிந்தது விகாரம்)

த் – இறந்தகால இடைநிலை

ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

### நூல்வெளி



அப்துல் ரகுமான் புதுக்கவிதை, வசனகவிதை, மரபுக்கவிதை என்று கவிதைகளின் பல வடிவங்களிலும் எழுதியுள்ளார். வாணியம்பாடி இஸ்லாமியக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். வானம்பாடிக் கவிஞர்களில் ஒருவர். பால்வீதி, நேயர்விருப்பம், பித்தன், ஆலாபனை முதலான பல நூல்களை எழுதியுள்ளார். பாரதிதாசன் விருது, தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் தமிழன்னை விருது, ஆலாபனை என்னும் கவிதைத் தொகுப்பிற்குச் சாகித்திய அகாதெமி விருது ஆகியவற்றைப் பெற்றுள்ளார். இப்பாடல் 'சுட்டுவிரல்' என்னும் கவிதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

### கற்பவை கற்றபின்...



தமிழ்க் கவிதைகளுக்கான சாகித்திய அகாதெமி விருது பெற்ற கவிஞர்களின் பட்டியலைத் திரட்டி, நூலின் பெயர், ஆண்டு ஆகியவற்றோடு அட்டவணை உருவாக்குக.

கவிதைப்பேழை

இயல் 8

# மனோன்மணீயம்




**நுழையும்முன்**

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய மனோன்மணீயம் மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் வீர உணர்வையும் ஊட்டுவதாகத் திகழ்கிறது. இது, தமிழன்னை பெற்ற நல் அணிகலனாகும். நாடகத்துறைக்குத் தமிழில் நூல்கள் இல்லையே என்ற குறையினைத் தீர்க்க வந்த மனோன்மணீயம் என்னும் இந்நாடக நூல், காப்பிய இலக்கணம் முழுதும் நிரம்பிய நூலாக விளங்குகிறது. இயற்கையில் ஈடுபாடுகொண்டு, அதனில் தோய்ந்து இணையில்லாத ஊக்கமும் அமைதியும் பெற்றவர்கள் தமிழர்கள் என்பதைக் கூறுவதாக உள்ளது இந்நூல்.

*சுந்தர முனிவர் தனது அறையிலிருந்து ஆசிரமம் வரை யாரும் அறியாவண்ணம் சுரங்கம் அமைக்கும் பணியை நடராசனுக்கு அளித்திருந்தார். நடராசனும் அப்பணியை ஓரளவு முடித்துவிட்டான். 'இன்னும் சிறுபகுதி வேலை ஆசிரமத்தில் செய்ய வேண்டியுள்ளது. அதுவும் இன்றிரவு முடிந்துவிடும்' என்று எண்ணிக்கொண்டு காலை வேளையில் ஊரின் புறமாக நடராசன் தனித்திருந்தான். அப்போது தனக்குத்தானே பேசிக்கொள்கிறான்.*

**மூன்றாம் அங்கம், இரண்டாம் களம்**

*இடம் :* ஊர்ப்புறத்து ஒரு சார்

*காலம் :* எற்பாடு

நடராசன் (தனிமொழி)

### இலக்கு வேண்டும்

*காலையில் கடிநகர் கடந்து நமது*
*வேலை முடிக்குதும், வேண்டின் விரைவாய்*
*இன்று இரா முடிக்கினும் முடியும்; ....*
*எவ்வினை யோர்க்கும் இம்மையில் தம்மை*
*இயக்குதற்கு இன்பம் பயக்கும்ஓர் இலக்கு*
*வேண்டும்; உயிர்க்கு அது தூண்டுகோல் போலாம்.*
*ஈண்டு எப்பொருள்தான் இலக்கற்று இருப்பது?*



**சொல்லும் பொருளும்**

கடிநகர் – காவல் உடைய நகரம்

## புல்லின் பரிவு

*இதோ ஓ! இக்கரை முளைத்தஇச் சிறுபுல்*
*சதா தன் குறிப்பொடு சாருதல் காண்டி;*
*அதன்சிறு பூக்குலை அடியொன்று உயர்த்தி*
*இதமுறத் தேன்துளி தாங்கி ஈக்களை*
*நலமுற அழைத்து நல்லூண் அருத்திப்*
*பதமுறத் தனதுபூம் பராகம் பரப்பித்து*
*ஆசுஇலாச் சிறுகாய் ஆக்கி, இதோ! தன்*
*தூசிடைச் சிக்கும் தோட்டியும் கொடுத்தே*
*"இவ்வயின் யாமெலாம் செவ்விதில் துன்னில்*
*தழைப்பதற்கு இடமிலை; சிறார்நீர் பிழைப்பதற்கு*
*ஏகுமின், புள் ஆ எருது அயத்து ஒருசார்*
*சிக்கிநீர் சென்மின்!" எனத்தன் சிறுவரைப்*
*புக்கவிட் டிருக்கும்இப் புல்லின் பரிவும்*
*பொறுமையும் புலனுங் காண்போர், ஒன்றையும்*
*சிறுமையாச் சிந்தனை செயாதுஆங்காங்கு*
*தோற்றுபே ரழகும் ஆற்றல்சால் அன்பும்*
*போற்றுதம் குறிப்பிற்கு ஏற்றதோர் முயற்சியும்*
*பார்த்துப் பார்த்துத் தம்கண் பனிப்ப,*
*ஆர்த்தெழும் அன்பினால் அனைத்தையுங் கலந்துதம்*
*என்பெலாம் கரைக்கும்நல் இன்பம் திளைப்பர்*

### சொல்லும் பொருளும்

காண்டி – காண்க; பூம்பராகம் – பூவில் உள்ள மகரந்தம்; ஆசு இலா - குற்றம் இலாத; தோட்டி – துறட்டி; அயம் – ஆடு, குதிரை; புக்க விட்டு – போகவிட்டு.

## வாய்க்காலின் விசித்திரம்

*தமக்குஊண் நல்கும் வயற்குஉப யோகம்*
*எனப்பலர் கருதும் இச்சிறு வாய்க்கால்*
*செய்தொழில் எத்தனை விசித்திரம்! ஐயோ!*
*அலைகடல் மலையா மலையலை கடலாப்*
*புரட்டிட அன்றோ நடப்பதிச் சிறுகால்!*
*பார், இதோ! பரற்களை நெறுநெறென் றரைத்துச்*
*சீரிய தூளியாத் தெள்ளிப் பொடித்துத்*
*தன்வலிக்கு அடங்கிய மண்கல் புல்புழு*
*இன்னதென்று இல்லை; யாவையும் ஈர்த்துத்*
*தன்னுள் படுத்தி முந்நீர் மடுவுள்*
*காலத் தச்சன் கட்டிடும் மலைக்குச்*
*சாலத் தகும்இவை எனஓர்ந்து உருட்டிக்*
*கொண்டு சென்று இட்டுமற்று "ஐயா,*
*அண்ட யோனியின் ஆணையின் மழையாய்ச்*
*சென்றபின் பெருமலைச் சிகரம் முதலாக்*
*குன்றுவீழ் அருவியாய்த் தூங்கியும் குகைமுகம்*
*இழிந்தும் பூமியின் குடர்பல நுழைந்தும்*
*கதித்தெழு சுனையாய்க் குதித்தெழுந்து ஓடியும்,*
*ஊறிடும் சிறிய ஊற்றாய்ப் பரந்தும்*
*ஆறாய் நடந்தும், மடுவாய்க் கிடந்தும்*
*மதகிடைச் சாடியும், வாய்க்கால் ஓடியும்*
*பற்பல பாடுயான் பட்டங்கு ஈட்டியது*
*அற்பமே ஆயினும் ஆதர வாய்க்கொள்;*
*இன்னமும் ஈதோ ஏகுவன் எனவிடை*
*பின்னரும் பெற்றுப் பெயர்த்தும் எழிலியாய்*
*வந்துஇவண் அடைந்து, மற்றும் இராப்பகல் மறந்து*
*நிரந்தரம் உழைக்கும்இந் நிலைமையர் யாவர்?*
*(நீரைக் கையால் தடுத்து)*
*நிரந்தரம்! ஐயோ! நொந்தனை! நில்! நில்!*
*இரைந்ததென்? அழுவையோ? ஆயின் ஏகுதி*
*நீரே! நீரே! என்னை உன் நிலைமை?*
*யாரே உனைப்போல் அனுதினம் உழைப்போர்?*
*நீக்கமில் அன்பும் ஊக்கமும் உறுதியும்*
*உன்னைப்போல் உளவேல் பிணைப்பேறு என்னை?*

### சொல்லும் பொருளும்

*சீரியதூளி – நுண்ணிய மணல்; சிறுகால் – வாய்க்கால்; பரல் – கல்; முந்நீர் மடு – கடலாகிய நீர்நிலை; அண்டயோனி – ஞாயிறு; சாடு – பாய்; ஈட்டியது – சேகரித்தது; எழிலி – மேகம்.*

### நாங்கூழ்ப்புழுவின் பொதுநலம்

### (நாங்கூழ்ப் புழுவை நோக்கி)

*ஓகோ! நாங்கூழ்ப் புழுவே! உன்பாடு*
*ஓவாப் பாடே. உணர்வேன்! உணர்வேன்!*
*உழைப்போர் உழைப்பில் உழுவோர் தொழில்மிகும்*
*உழுவோர்க் கெல்லாம் விழுமிய வேந்து நீ.*
*எம்மண் ணாயினும் நன்மண் ணாக்குவை*
*விடுத்தனை இதற்கா, எடுத்தஉன் யாக்கை.*
*உழுதுழுது உண்டுமண் மெழுகினும் நேரிய*
*விழுமிய சேறாய் வேதித்து உருட்டி*
*வெளிக்கொணர்ந் தும்புகழ் வேண்டார் போல*
*ஒளிக்குவை உன்குழி வாயுமோர் உருண்டையால்!*
*இப்புற் பயிர்நீ இங்ஙனம் உழாயேல்*
*எப்படி உண்டாம்? எண்ணாது உனக்கும்*
*குறும்புசெய் எறும்பும் கோடி கோடியாய்ப்*
*புழுக்களும் பூச்சியும் பிழைக்குமா றென்னை?*
*ஒழுக்கமும் பொறையும் உனைப்போல் யார்க்குள?*
*(நாங்கூழ்ப்புழு குழிக்குள் மறைதலை நோக்கி)*
*விழுப்புகழ் வேண்டலை. அறிவோம், ஏனிது?*
*துதிக்கலம். உன்தொழில் நடத்துதி. ஆ! ஆ!*
*எங்கும் இங்ஙனே இணையிலா இன்பும்*
*பங்கமில் அன்பும் தங்குதல் திருந்தக்*
*காணார் பேணும் வாணாள் என்னே?*

*அடிகள் 13–85*

*– மனோன்மணீயம் சுந்தரனார்*

### சொல்லும் பொருளும்

*நாங்கூழ்ப்புழு – மண்புழு; ஓவா–ஓயாத; பாடு–உழைப்பு; வேதித்து – மாற்றி.*

### இலக்கணக் குறிப்பு

கடி நகர், சாலத் தகும் – உரிச்சொற்றொடர்கள்; உருட்டி – வினையெச்சம்; பின்னிய,முளைத்த – பெயரெச்சங்கள்; இளமுகம், நல்லூண்,சிறுபுல், பேரழகு, முந்நீர், நன்மண் – பண்புத்தொகைகள்; பூக்குலை – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை; ஆசிலா, ஓவா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்; ஏகுமின் – ஏவல் பன்மை வினைமுற்று; பார்த்துப் பார்த்து, நில் நில், உழுதுழுது – அடுக்குத் தொடர்கள்; வாய்க்கால் – இலக்கணப் போலி (முன் பின் தொக்கியது); செய்தொழில், அலைகடல், வீழருவி – வினைத்தொகைகள்; மலையலை, குகைமுகம் – உவமைத்தொகைகள்; நெறுநெறு – இரட்டைக்கிளவி; புல்புழு, இராப்பகல் – உம்மைத்தொகைகள்; காலத்தச்சன் – உருவகம்; ஏகுதி – ஏவல் ஒருமை வினைமுற்று; புழுக்களும் பூச்சியும்–எண்ணும்மை;தங்குதல்–தொழிற்பெயர்.

### பகுபத உறுப்பிலக்கணம்

**முளைத்த – முளை + த் + த் + அ**

முளை – பகுதி, த் – சந்தி, த் – இறந்தகால இடைநிலை, அ – பெயரெச்ச விகுதி.

**ஏகுமின் – ஏகு + மின்**

ஏகு – பகுதி, மின் – ஏவல் வினைமுற்று விகுதி.

**தமிழ் நாடக இலக்கண நூல்கள் சில**

1. அகத்தியம்
2. குணநூல்
3. கூத்தநூல்
4. சந்தம்
5. சயந்தம்
6. செயன்முறை
7. செயிற்றியம்
8. முறுவல்
9. மதிவாணனார் நாடகத் தமிழ் நூல்
10. நாடகவியல்

**விடுத்தனை – விடு + த் + த் + அன் + ஐ**

விடு – பகுதி, த் – சந்தி, த் – இறந்தகால இடைநிலை, அன் – சாரியை, ஐ – முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி.

**சென்ற – செல் (ன்) + ற் + அ**

செல் – பகுதி, ('ல்' 'ன்' ஆனது விகாரம்), ற் – இறந்தகால இடைநிலை, அ – பெயரெச்ச விகுதி.

### புணர்ச்சி விதி

**காலத்தச்சன் – காலம் + தச்சன்**

மவ்வீறு ஒற்றழிந்து உயிரீறு ஒப்பவும் – கால + தச்சன்

வல்லினம் மிக்குப் புணரும் – காலத்தச்சன்

**உழுதுழுது – உழுது + உழுது**

உயிர் வரின் உக்குறள் மெய் விட்டோடும் உழுத் + உழுது

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே – உழுதுழுது.

**பேரழகு – பெருமை + அழகு**

ஈறு போதல் – பெரு + அழகு

ஆதி நீடல் – பேரு + அழகு

இனையவும் – பேர் + அழகு (உகரம் கெட்டது)

உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே – பேரழகு



### நூல்வெளி

மனோன்மணீயம் தமிழின் முதல் பா வடிவ நாடக நூல். லிட்டன் பிரபு எழுதிய 'இரகசிய வழி' (The Secret Way) என்ற நூலைத் தழுவி 1891இல் பேராசிரியர் சுந்தரனார் இதைத் தமிழில் எழுதியுள்ளார். இஃது எளிய நடையில் ஆசிரியப்பாவால் அமைந்தது. இந்நூல் ஐந்து அங்கங்களையும் இருபது களங்களையும் கொண்டது. நூலின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துடன் தமிழ்த்தாய் வாழ்த்தும் இடம் பெற்றுள்ளது. மனோன்மணீயத்தில் உள்ள கிளைக்கதை 'சிவகாமியின் சரிதம்'.

பேராசிரியர் சுந்தரனார் திருவிதாங்கூரில் உள்ள ஆலப்புழையில் 1855இல் பிறந்தார். திருவனந்தபுரம் அரசுக் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராகப் பணியாற்றி உள்ளார். சென்னை மாகாண அரசு இவருக்கு ராவ்பகதூர் என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளது. இவருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் தமிழக அரசு, இவர் பெயரால் திருநெல்வேலியில் பல்கலைக்கழகம் ஒன்றை நிறுவியுள்ளது.



### கற்பவை கற்றபின்...

1. "இப் புல்லின் பரிவும் பொறுமையும் புலனுங் காண்போர், ஒன்றையும் சிறுமையாச் சிந்தனை செயாது" என்னும் பாடல் அடிகளுடன்,

   "ஆயிரம் மிதிபடல்களிலும்

   நிமிர்ந்து நிற்கும்

   புற்களே உன்

   வழிகாட்டி" – என்ற புதுக்கவிதை வரிகளை ஒப்பிட்டு உங்கள் கருத்துகளை உரைக்க.

2. நாங்கூழ்ப்புழு நடராசனிடம் பேசியிருந்தால்... –ஒருபக்க அளவில் உரையாடலை எழுதுக.

விரிவானம்

இயல் 8

# செவ்வி

– நர்த்தகி நடராஜ்







முத்தமிழ் வளர்த்த மதுரையில் பிறந்து தம் நாட்டியத் திறமையினால் உலகம் முழுவதும் எண்ணற்ற ரசிகர்களைப் பெற்றவர். தன்னம்பிக்கை, உழைப்பு, விடாமுயற்சிகொண்டு நாட்டியக்கலையில் தமக்கெனத் தனியிடத்தைப் பெற்றவர். சிறுபான்மையிலும் சிறுபான்மையினராக வாழும் திருநங்கைகளுக்கு மட்டுமே இருக்கும் தடைக்கற்களையும்கூடப் படிக்கட்டுகளாக மாற்றலாம் என்று உலகுக்குக் காட்டியவர்; அவர், நர்த்தகி நடராஜ்.

அமெரிக்காவில் ஒரு நடன நிகழ்ச்சிக்காகத் தமிழகத்தைச் சேர்ந்த பரதநாட்டியக் கலைஞர் ஒருவரை விழா ஏற்பாட்டாளர்கள் அழைத்திருந்தனர். வந்திறங்கியவரைப் பார்த்து அதிர்ந்த அவர்கள், இரண்டு வாரங்கள் நடைபெறுவதாக இருந்த நிகழ்ச்சியை ஒரே நாள் நிகழ்ச்சியாக மாற்றினர். காரணம் அறிந்த அந்தக் கலைஞர், மனக்கலக்கத்துடன் முதல் நாள் நிகழ்வில் கலந்து கொண்டார். மேடைக்குச் சென்றார்; நடனத்தைத் தொடங்கினார். அவருடைய கால் சலங்கை சப்தம் மேடையை நிறைக்க, அரங்கம் அமைதியானது.

கண்களில் நவரசம், கால்களில் துடிப்பு, உயிரோட்டமான உடல்மொழி என இதுவரையிலும் கண்டிராதவொரு புதுமையான உலகுக்குப் பார்வையாளர்களை, அவருடைய நடனம் விரல்பிடித்து அழைத்துச் சென்றது. அரங்கத்திலிருந்து எழுந்த கரவொலியில் அவருடைய கவலைகள் கரைந்தன. ஒரு நாளோடு முடிவதாக இருந்த அவருடைய நடன நிகழ்ச்சி, இரண்டு மாதங்கள் நீண்டது. அந்த நடனக் கலைஞர் நர்த்தகி நடராஜ்.

அவரைத்தான் நாம் நம்முடைய பள்ளி ஆண்டுமலருக்காக இன்றைக்கு நேர்காணல் செய்யப் போகிறோம். அவரைச் சந்திப்போமா?

**வணக்கம் நர்த்தகி. உங்களைச் சந்திப்பதில் பெருமகிழ்ச்சி. உங்கள் இளமைப்பருவத்தைப் பற்றிச் சொல்லுங்கள்.**

நான் மதுரையில் உள்ள அனுப்பானடியைச் சேர்ந்தவள். என் தோழியின் பெயர் சக்தி. நானும் அவளும் ஒன்றாகவே நடனம் பயின்றோம். ஐந்து வயதில் தொடங்கிய எங்கள் நட்பு இன்றுவரையிலும் தொடர்கிறது.

என் முன்னேற்றத்தைத் தன் முன்னேற்றமாகக் கருதும் சக்தி இல்லையேல் நான் இந்த அளவுக்கு வளர்ந்திருக்க முடியாது.

**நீங்கள் யாரிடம் நடனம் கற்றீர்கள்?**

இளமையில் வைஜெயந்தி மாலாவின் நடனத்தால் ஈர்க்கப்பட்டு, அவருடைய குருவான தஞ்சை கிட்டப்பாவிடம் பரதம் கற்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் சென்று அவரிடம் என் ஆசையைத் தெரிவித்தேன். தொடக்கத்தில் அவர் இசைவு தரவில்லை. ஓராண்டு விடாமுயற்சியுடன் போராடி இறுதியில் வெற்றி பெற்றேன்.

கிட்டப்பா என்னைத் தம் மகளாகவே ஏற்று, தம் இல்லத்திலேயே தங்க வைத்துப் பரதம் கற்றுக் கொடுத்தார். அவரே 'நர்த்தகி' என்று எனக்குப் பெயர் சூட்டினார்.

**நீங்கள் பெண்மையை உணர்ந்ததால் பரதம் கற்றீர்களா? பரதம் கற்றதால் பெண்மையை உணர்ந்தீர்களா?**

இது ரெட்டைச்சடை மாதிரி. ஒன்றோடு ஒன்று பிணைந்தது. பெண்மையை வெளிப்படுத்துவதற்கான ஊடகமாகப் பரதம் இருந்தது. பரதத்தில் ஊறித் திளைத்தபோது பெண்மை புதிதாகப் பிறந்தது. பரதத்தில் பெண்மையை வெளிப்படுத்தும் நொடி இருக்கிறதே, அது வார்த்தைகளில் சொல்ல முடியாத உணர்வு. நதியலையில் விழுந்த இலைபோல, காற்றில் பறக்கும் இறகுபோல, மனம் அதன்போக்கில் செல்லும். எல்லாக் கட்டுகளையும் உடைத்தெறிந்த நிம்மதி அந்த வினாடியில் கிடைக்கும். ஒரு வகை ஆழ்ந்த மயக்கம். கனவுலகின் சஞ்சாரம். அந்த விநாடியில் உலகத்தையே மறந்து பறந்துகொண்டிருப்பேன்.

**நீங்கள் தொடக்கத்தில் ஆடத் தொடங்கியதில் இருந்து இப்போது ஏதேனும் மாற்றத்தை உணர்கிறீர்களா?**

என்னுடைய குழந்தைப் பருவத்திலேயே எனக்குள் மறைந்திருந்த பெண்மையைக் கண்டுகொண்டேன். எந்த மனத்தடையுமின்றி என்னை உணர்த்துவதற்கு நடனம் உதவி செய்தது. தொடக்கத்தில் திரைப்படங்களில் வரும் நடனம் என்னை ஈர்த்தது. அதைப் பார்த்து நான் நடனம் ஆடத் தொடங்கினேன். நிகழ்ச்சிக்காக ஆடத் தொடங்கியபோது ஒவ்வொரு நிகழ்வும் மூன்று மணி நேரம் எடுத்துக் கொள்ளும். இன்றுபோல் அல்லாமல் நாட்டியத்தைவிட அதன் உட்கூறுகளை அறிமுகம் செய்வதற்கு அதிக நேரமும் காலமும் ஆகும். சில சமயங்களில் நாட்டியத்திற்கான கருத்தை ராக தாளத்துடன் அறிமுகம் செய்வேன்.



**உங்களைப் போன்ற திருநங்கையர் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டிய நீங்கள், பரதம் ஆடிக்கொண்டிருக்கிறீர்களே?**

தொன்மை வாய்ந்த தமிழர் மரபில் பிறந்த நான் திருநங்கையர்க்கான இடம் என்ன என்பதை அறிய நினைத்தேன். அதுவே இலக்கியத்தின் பக்கம் என்னைத் தள்ளியது. சங்க இலக்கியத்தில் இருந்து சிற்றிலக்கிய காலம் வரை ஆழ்ந்து படித்தேன். இன்று மட்டுமல்ல எல்லாக் காலகட்டத்திலும் திருநங்கையர் இருந்திருக்கின்றனர். தொல்காப்பியத்திலும் அதற்கான சான்று இருக்கிறது. சிலப்பதிகாரத்தில் 11 வகையான ஆடற்கலைகள் பற்றிய குறிப்புகள் உள்ளன. எனவே தமிழச்சி என்பதில் தாளாத பெருமை கொண்ட நான் பரதத்தின் பக்கம் திரும்பினேன். நம் கலையை நாம் ஆடவில்லையானால் வேறு யார் ஆடுவது? சங்க இலக்கியம் தொடங்கித் தற்போதைய நவீன கவிதை வரையிலும் நடனத்தில் முயல்கிறேன். இதுவும் ஒரு வகை விழிப்புணர்வு ஆயுதம்தான்.

**வெகுசன மக்களின் நேரடித் தொடர்பில் இல்லாத கலைவடிவத்தை நிகழ்த்துகிறோம் என்ற எண்ணம் உங்களுக்கு எப்போதாவது வந்ததுண்டா?**

பரத நாட்டியத்தை, வெகுசன மக்களின் கலை இல்லை என்பதை நான் முற்றிலும் மறுக்கிறேன். பரதம் என்ற சொல்லுக்கு வெறும் எழுபது வயதுதான் என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். பரத நாட்டியம் நிகழ்த்துபவர்களை ஒதுக்கிவிட்டு அவர்களை ஒரு சாரார் எனக் குறுக்கி வைத்தது நம்முடைய தவறு. கலையை எல்லோரும் நுகரவேண்டும். அட்லாண்டாவிலும்

ஆண்டிபட்டியிலும் ஒரே மாதிரிதான் பரதம் நிகழ்த்துகிறேன். மக்களும் அதைச் சரியாக உள்வாங்கிக் கொள்கின்றனர்.

**உங்கள் அபிநயத்தில் வெளிப்படும் நுட்பமான முத்திரைகளை மக்கள் சரியான முறையில் உள்வாங்கிக் கொள்கின்றனரா?**

சமீபத்தில் ஜப்பானிலுள்ள ஒசாகா நகரத்திற்குச் சென்றிருந்தபோது திருவாசக, தேவாரப் பண்ணிசைப் பாடல்களைப் பரதமாக நிகழ்த்தினேன். அங்குத் தமிழர்களும் இல்லை; இந்தியர்களும் இல்லை; முழுக்க ஜப்பானியர்கள். அவர்களுக்குப் பரதம், தேவாரம், திருவாசகம் எதுவும் தெரியாது. ஆனால், அந்த அபிநயத்தில் அவர்கள் கண்கலங்கியதும் அங்கு நிலவிய மௌனமும் எழுந்த கரகோஷமும் என்னால் மறக்க முடியாதது. எந்த அளவுக்குப் பரதத்தை அவர்கள் முழுமையாக உள்வாங்கினர் என்பதை நான் புரிந்துகொண்டேன்.

**உலகமயமாக்கலுக்குப்பின் தமிழகத்தில் பண்பாட்டு மாற்றம் நடந்திருப்பதை மறுக்க முடியாது. காப்பியம், புராணக் கதைகளை மையமாக வைத்து நீங்கள் பரதம் நிகழ்த்துகிறீர்கள். இதன்மூலம், இழந்த பண்பாட்டை மீட்க முடியும் என நினைக்கிறீர்களா?**

நமக்கென்று பெரிய பண்பாட்டு மரபு இருக்கிறது. வாழ்வாங்கு வாழ்ந்தவர் நாம். நம் வேர்களை நாம் புறக்கணிக்கக் கூடாது. ஐரோப்பியப் பண்பாட்டில் ஊறித் திளைத்திருக்கும் நார்வேயில் நிகழ்ச்சி நடத்தும்போது, திருக்குறளை மையமாக வைத்தே மாணவிகளுக்குப் பயிற்சி கொடுத்தேன். அந்த வினாடியில் இருந்து திருக்குறளை ஆர்வமாகப் படித்தனர். அது பற்றி அனைத்துத் தகவல்களையும் விரல்நுனிக்குக் கொண்டு வந்தனர். 'அடுத்த ஜென்மத்தில் நான் தமிழனாகப் பிறந்து திருக்குறள் படிக்க வேண்டும்' என்ற காந்தியின் ஆசையை, வரலாற்றில் இருந்து தோண்டி எடுத்திருந்தனர். கலையின் வழியாகப் பண்பாட்டு மாற்றங்கள் நிகழ்ந்தே தீரும்.



**நர்த்தகி நடராஜ் பெற்ற விருதுகள்**

**தமிழக அரசின் கலைமாமணி விருது, இந்திய அரசின் சங்கீத நாடக அகாதெமி விருது, இந்திய அரசுத் தொலைக்காட்சியின் ஏ கிரேடு கலைஞர், இந்திய வெளியுறவுத் துறை அமைச்சகத்தின் சிறந்த கலைஞர், தஞ்சாவூர் பெரியார் மணியம்மை பல்கலைக்கழகத்தின் மதிப்புறு முனைவர் பட்டம்.**

**நீங்கள் மிகச்சிறந்த நாட்டியக்காரர் என்பதை அறிவோம். அது தவிர்த்து, உங்களுடைய ஆர்வம், விருப்பம் எத்துறைகளில் உள்ளன?**

நான் தமிழ்வழிக் கல்வி பயின்றவள். என்னுடைய ஆசிரியர்கள் எனக்கு மிகவும் உறுதுணையாக இருந்தார்கள். உண்மையில் நான் ஒரு வழக்கறிஞர் ஆவதையே முழுமுதல் லட்சியமாகக் கொண்டிருந்தேன். இன்று நான் இதழ்களில் எழுதுவதோடு பல்வேறு தமிழ் இலக்கிய மேடைகளிலும் பேசுகிறேன். நடனமும் வாசிப்புமே என்னை இன்னும் ஒரு குழந்தையாக வைத்திருக்கின்றன. தமிழ் இலக்கியத்தில் சங்கப் பாடல்கள், திவ்வியப் பிரபந்தம், திருப்புகழ் மற்றும் தேவாரம் ஆகியவற்றை நடனம் மூலம் பரப்புவதோடு இவ்விலக்கியங்களைப் பற்றித் தொடர்ந்து ஆய்வு செய்தும் வருகிறேன்.

**சோதனைகளை, துயரங்களை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

*மற்ற மானுடரைவிட எல்லாச் சோதனைகளையும் இரண்டு மடங்கு அனுபவித்திருக்கிறேன். வலிதான் நான் கொடுத்த விலை. அகிலனின் 'தாமரை நெஞ்சம்' கதைநாயகி துக்கம் பொங்கி வரும்போதெல்லாம் ஒரு சொம்புத் தண்ணீர் குடிப்பாள். நான் ஒரு நாட்டியம் ஆடி விடுவேன். அது என் துயரைத் தீர்க்கும்.*

**உங்களை நெகிழ வைக்கும் தருணம் என்று எதைக் கூறுவீர்கள்?**

*நான் நடத்தும் வெள்ளியம்பலம் அறக்கட்டளை நடனக் கலைக்கூடம் வாயிலாக நூற்றுக்கணக்கான மாணவிகளை உருவாக்கியுள்ளேன். அம்மாவால் புறக்கணிக்கப்பட்ட என்னை இன்றைக்கு என் மாணவிகள் எல்லோரும் 'அம்மா' என்று அழைக்கும்போது எனக்குள் தாய்மை பெருக்கெடுக்கிறது. அதுவே என்னை நெகிழவும் மகிழவும் வைக்கும் தருணமாக உணர்கிறேன்.*

***இன்று நர்த்தகி, தன்னுடைய நடனத் திறமையால் அமெரிக்கா, லண்டன், கனடா உள்ளிட்ட உலக நாடுகள் முழுவதும் பயணித்துத் தம் பரதத்தால் பல்லாயிரம் மேடைகளை அழகாக்கி வருகிறார். இவர்தாம் 'திருநங்கை' என்ற சொல்லை அறிமுகப்படுத்தியவர். திருநங்கைகளுள் முதன்முதலில் கடவுச்சீட்டு, தேசிய விருது, மதிப்புறு முனைவர் பட்டம் பெற்றவர் என்ற பல்வேறு முதல் சாதனைகளுக்குச் சொந்தக்காரரான நர்த்தகி நடராஜ் மேலும் பல உயரங்களை எட்ட நம் பள்ளியின் சார்பாக வாழ்த்துவோம்.***

சேலத்தைச் சேர்ந்த பிரித்திகா யாஷினி மிகுந்த சிரமங்களுக்கிடையில் 2011ஆம் ஆண்டு கணினிப் பாடப்பிரிவு இளநிலைப் பட்டப்படிப்பில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். அவர் தற்போது சென்னையில் காவல்துறையின் சட்டம் – ஒழுங்குப் பிரிவில் பணியாற்றி வருகிறார். இந்தியாவின் முதல் திருநங்கை காவல் உதவி ஆய்வாளர் என்ற பெருமை இவரைச் சாரும்.

மேற்கு வங்கத்தைச் சேர்ந்தவர் திருநங்கையான ஜோயிதா மோண்டல் மாகி. இவர் திருநங்கைகளின் முன்னேற்றத்துக்காகப் பணியாற்றி வருகிறார். வடக்கு தினாஜ்பூர் மாவட்டம் இஸ்லாம்பூரில் லோக் அதாலத் நீதிபதியாக அண்மையில் ஜோயிதா மோண்டல் நியமிக்கப்பட்டார். லோக் அதாலத் நீதிபதிப் பதவிக்குத் திருநங்கை ஒருவர் நியமிக்கப்படுவது நாட்டில் இதுவே முதல்முறையாகும்.

தமிழ்நாட்டில், கல்வித்துறையில் மூன்றாம் பாலினப் பிரிவு உருவாக்கப்பட்ட பின்பு பள்ளிப்படிப்பை முடிக்கும் முதலாமவர் தாரிகா பானு. இவர், திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள அம்பத்தூரில், காமராஜர் அரசு பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் அறிவியல் பாடப்பிரிவில் பயின்றார். 2017ஆம் ஆண்டு நடந்த மேல்நிலைப் பொதுத்தேர்வில் தேர்ச்சி பெற்ற இவர், தற்போது அரசு சித்த மருத்துவக் கல்லூரியில் பயின்று வருகிறார்.



கற்பவை கற்றபின்...

பாலினச் சமத்துவம் என்பதன் விளக்கம் அறிக. இது குறித்த நும் கருத்துகளை வகுப்பறையில் கலந்துரையாடுக.

# மெய்ப்புத் திருத்தக் குறியீடுகள்




மாணவர்கள் பள்ளியில் பயில்கின்றபோதே கூடுதல் திறன்களை வளர்த்துக் கொள்ளவேண்டும். இத்திறன்கள் எதிர்காலத்தில் மாணவர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டும் வகையில் அமையும். தமிழ்மொழியைக் கற்பதோடு நில்லாமல் தமிழ்சார்ந்த பிறபணிகளிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். இந்நிலையில் அச்சுப்படி திருத்தக் குறியீடுகளை அறிந்து பிழைத்திருத்தம் செய்யும் இப்பயிற்சியானது மாணவர்களின் வேலைவாய்ப்பிற்கு உதவும்.

நூல்களையோ, இதழ்களையோ வெளியிடும்போது பிழையின்றி அச்சிடவேண்டும். எழுத்துப்பிழைகள், தொடர்ப்பிழைகள், மயங்கொலிப் பிழைகள், ஒருமை பன்மைப் பிழைகள் ஆகியவை நிறைந்த செய்திகள், படிப்போர்க்குத் தவறான கருத்தை அளித்து, குழப்பத்தில் ஆழ்த்திவிடும். எனவே, நூல்கள் அல்லது இதழ்களை அச்சிடுவதற்கு முன்னர் அச்சுப்படி திருத்துபவர் அப்பணியின்போது பிழைகளைத் திருத்துவதற்குப் பின்பற்றும் முறைகளையும் திருத்தக் குறியீடுகளையும் அறிந்திருத்தல் வேண்டும்.

### அச்சுப்படி திருத்துபவரின் பணிகள்

- மூலப்படியில் (Original Copy) உள்ளபடியே செய்திகள் அச்சாகியுள்ளனவா? என்று ஒவ்வொரு வரியையும் படித்துக் கவனித்தல் வேண்டும்.
- செய்தியின் உள்ளடக்கம், புள்ளிவிவரங்கள், எண்கள், அட்டவணைகள் முதலியன விடுபட்டுள்ளனவா என்பதை மூலப்படியோடு ஒப்பிட்டுக் கவனித்தல் இன்றியமையாதது. ஏனெனில், புள்ளி விவரங்கள் மாறினால் செய்தியின் பொருளில் முரண்பாடு ஏற்படும்.
- அச்சுப்படி திருத்துவோர் செய்தியின் உருவையோ உள்ளடக்கத்தையோ மாற்றுதல் கூடாது.
- பிழை ஏற்பட்ட சொல்லின்மீது எழுதுதல் கூடாது. ஒரு வரியின் இடப்பக்கப் பாதியில் பிழை இருந்தால் இடப்பக்க ஓரமும் வலப்பக்கப் பாதியில் பிழை இருந்தால் வலப்பக்க ஓரமும் திருத்தம் தருதல் அச்சிடுவோர்க்குப் பயனுடையதாக அமையும்.
- பிழைகளை ஓரம்வரை கோடிழுத்துக் காட்டும்போது, மேலும் கீழும் உள்ள வரிகள் பாதிக்கப்படாமல் பார்த்துக்கொள்ளுதல் வேண்டும்.
- ஒரு வரியில் ஒன்றுக்கும் மேற்பட்ட பிழைகள் இருந்தால் பிழைகளைக் குறிக்கும் கோடுகளைத் தெளிவாகக் காட்டல் வேண்டும்.
- ஒரு சொல்லில் பிழைகள் பல இருந்தால் அச்சொல்லையே நீக்கிவிட்டுச் சரியான சொல்லைத் தெளிவாகப் பக்க ஓரத்தில் தருதல் வேண்டும்.
- எண்ணின் (Number) இடையில் பிழையிருந்தால் அந்தத் தொகையை முழுவதுமாகப் பிழையின்றி எழுதிக்காட்டுதல் நல்லது.
- அச்சுப்படியில் இருக்கும் வண்ணத்திற்கு மாறான வண்ணமுடைய மையால் திருத்துதல் வேண்டும். இது பிழைகளைத் தெளிவாகக் கண்டறிய உதவும்.

## குறியீடுகள் இடுதல்

அச்சுப்படியில் இருக்கும் பிழைகளைத் திருத்த உலக அளவில் பொதுவான திருத்தக் குறியீடுகள் என்று சில உண்டு. அத்தகைய திருத்தக் குறியீடுகளை அச்சுப்படி திருத்துவோர் முதலில் படித்தறிதல் வேண்டும். பிழையிருக்கும் இடத்தில் ஒரு சிறு கோட்டினால் குறித்து, அந்த வரிக்கு நேராகப் பக்கத்தின் ஓரப்பகுதியில் (Margin) குறியீடுகளைப் பொருத்தமாக இட்டுப் பிழையின் திருத்தத்தைக் குறிப்பிடுதல் வேண்டும். ஒரே வரியில் பல தவறுகள் வந்தால் அவற்றை வரிசைப்படி பக்க ஓரத்தில் சிறு சாய்வான கோடிட்டுத் திருத்தத்தைக் குறிப்பிடுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டு

பாரதியார் கேளிச்சித்திரத்தை விகடச்சித்திறம் என்று குரிப்பார். /லி /ர /றி

## திருத்தக் குறியீடுகளின் பிரிவுகள்

பிழைகள் உள்ள அச்சுப்படியைத் திருத்துவதற்குக் கையாளப்படும் திருத்தக் குறியீடுகளை ஐந்து வகைகளாகப் பிரிக்கின்றனர். அவை:

1. பொதுவானவை (General)
2. நிறுத்தக்குறியீடுகள் தொடர்பானவை (Punctuations)
3. இடைவெளி தரவேண்டியவை (Spacing)
4. இணைக்க வேண்டியவை (Alignment)
5. எழுத்து வடிவம் (Type/Font) என்பவையாகும்.

### 1. பொதுவானவை

| குறியீடு | குறியீட்டுப் பொருள் |
|---|---|
| Dt | அச்சடித்திருக்கும் சொல்லையோ எழுத்தையோ நீக்குக. |
| ∧ | சொல்லையோ எழுத்தையோ இந்தக் குறிப்பிட்ட இடத்தில் சேர்த்துக் கொள்க. |
| [ | புதிய பத்தி (New Paragraph) தொடங்குக. |

எடுத்துக்காட்டு

• பாரதி தம்மைப் போலவே பிறரை/ /யும் நேசிக்கும் பண்ப்பாளர் . /dt

### 2. நிறுத்தக் குறியீடுகள்

| குறியீடு | குறியீட்டுப் பொருள் |
|---|---|
| , / | கால் புள்ளியைச் சேர்க்கவும். |
| ;/ | அரைப் புள்ளியைச் சேர்க்கவும் |
| ./ | முற்றுப்புள்ளி இடவும். |
| ?/ | வினாக்குறி அடையாளம் இடவும். |
| !/ | வியப்புக் குறியைச் சேர்த்துக் கொள்ளவும். |
| :/ | முக்காற்புள்ளி சேர்க்கவும். |

எடுத்துக்காட்டு

சங்ககாலத்தில் கற்பித்தல் பணியை மன்றம் /சான்றோர் அவை / ,/ ,/ அறங்கூர் அவையம் / சமணப்பள்ளி ,/ போன்ற அமைப்புகள் செய்துள்ளன.

### 3. இடைவெளி தரவேண்டியவை

| குறியீடு | குறியீட்டுப் பொருள் |
|---|---|
| ⁀‿ | சொற்களை அல்லது எழுத்துகளைச் சேர்க்கவும். இடைவெளி விட வேண்டாம். |
| # | பத்திகளுக்கிடையில் வரிகளுக்கிடையில் சொற்களுக்கிடையில் இடைவெளி தருக. |

எடுத்துக்காட்டு

தமிழ்/இதழ்களில் தமிழ்/ஆண்டு /# /# திங்கள், நாள் ஆகியவற்றை முதன் ‿ முதலாகக் குறித்தவர் பாரதியார். /‿

### 4. இணைக்க வேண்டியவை

| குறியீடு | குறியீட்டுப் பொருள் |
|---|---|
| ⊐ | இடப்பக்கம் தள்ளவும் |
| ⊏ | வலப் பக்கம் தள்ளவும் |
| ∼ | பத்திகளை இணைக்கவும் |
| ⋎' | ஒற்றை மேற்கோள் குறியீடு இடுக |
| ⋎" | இரட்டை மேற்கோள் குறியீடு இடுக |

எடுத்துக்காட்டு

கல்வியின் சிறப்பை / கல்வி அழகே அழகு / என நாலடியார் கூறுகிறது.

## 5. எழுத்து வடிவம்

| குறியீடு | குறியீட்டுப் பொருள் |
|---|---|
| Unbold | வழக்கமான எழுத்தில் மாற்றுக |
| Bold | தடித்த எழுத்தில் மாற்றுக |
| Trs | சொற்கள், எழுத்துகளை இடம் மாற்றுக |
| l.c. | எழுத்துருவைச் சிறியதாக ஆக்குக |

எடுத்துக்காட்டு – 1

(சிலப்பதிகாரம்) (மணிமேகலை)/ B/ B/ ஆகிய இரண்டும் தமிழ்மொழியில் தோன்றிய இரட்டைக்காப்பியங்கள்.

எடுத்துக்காட்டு – 2

உள்ளத்துள்ளது கவிதை - /இன்ப உருவெடுப்பது கவிதை trs/

| திருத்தக்குறியீடுகளின் தமிழ்ப்பெயர்கள் | | |
|---|---|---|
| Apostrophe | ( ' ) | – எழுத்துக்குறை |
| Semicolon | ( ; ) | – அரைப்புள்ளி |
| Colon | ( : ) | – முக்காற்புள்ளி |
| Colondash | ( :– ) | – வரலாற்றுக்குறி |
| Ditto mark | ( ,, ) | – மேற்படிக்குறி |
| Dash | ( – ) | – இடைக்கோடு |
| Bar | ( / ) | – வெட்டுக்கோடு |
| Brackets | ( ( ) ) | – பிறைக்கோடு |
| Double Brackets | ( { } ) | – இரட்டைப்பிறைக்கோடு |
| Large Brackets | ( [ ] ) | – பகரஅடைப்பு |



கற்பவை கற்றபின்...

மெய்ப்புத் திருத்தங்களை அறிவது எத்துறை வேலைவாய்ப்புக்கு உதவும்? – வகுப்பில் கலந்துரையாடுக.

## இலக்கணத் தேர்ச்சி கொள்

1. திருத்தக் குறியீடுகளின் வகைகளைக் கூறுக?
2. ஏற்ற இடங்களில் அச்சுத் திருத்தக்குறியீடுகளைப் பயன்படுத்தும் முறையைக் கீழ்க்காணும் பத்தியின் மூலம் அறிக.

அறிஞர் வாழ்வில் நகைச்சுவை

ர| கவிஞர் கண்ணதாசன் கல்லூரி ஒன்றில் கவியரங்கத்தில் கலந்துகொண்டு

d+| கவிதை யை வாசிக்க ஆரம்பித்தார்ர். அரங்கத்தில் உற்சாக ஆரவாரம் எழுந்தது அவர் கவிதை #| வாசிக்கும்போது ஒவ்வொரு வரிக்கும் பலத்த கைதட்டல் எழுந்தது. வாசித்து முடித்தது ம் கரவொலி

⊙| அடங்க வெகு நேரம் பிடித்தது கைதட்டல்கள் முடிந்ததும், கண்ணதாசன் சொன்னார் ,"இன்று | நான் வாசித்த கவிதை நான் எழுதியது அல்ல. உங்கள் கல்லூரி மாணவர் ஒருவர் நேற்று ஒரு

டு|ள| கவிதைய எழுத்துக்கொண்டு வந்து என்னிடம் காண்பித்தார் அது மிக நன்றாக இருந்தது. ⊙|

ய| எனவே நான் எழுதியஅ கவிதையை அவரை வாசிக்கச்சொ சொல்லிவிட்டு அவர் எழுதிய ச்| கவிதையை நான் வாசித்தேன். என்கவிதையை அவர் வாசிக்கும்போது எந்தவித ஆரவாரமும் #| இல்லை. அவர் எழுதிய கவிதையை நான் வாசித்தபோது பலத்த வரவேற்பு. ஆக, சொல்பவன் யார் என்பதைத்தான் உலகம் பார்க்கிறதே ஒழிய சொல்லும் பொருளைப் பற்றிக்

d+| கவலைப்படுவதில்லை என்பதுதான் உண்மை என்று புரிகிறது".




JBB8HG




1. பூஜை, விஷயம், உபயோகம் – என்பவை முறையே........... என்று தமிழில் வழங்கப்படும்.

   அ) வழிபாடு, செய்தி, பயன்பாடு ஆ) பயன்பாடு, வழிபாடு, செய்தி

   இ) வழிபாடு, பயன்பாடு, செய்தி ஈ) வழிபாடு, பயன்பாடு, செய்தி

2. கூவும் குயிலும் கரையும் காகமும் – தொடரில் இடம்பெற்ற மரபு

   அ) பெயர்மரபு ஆ) வினைமரபு இ) ஒலிமரபு ஈ) இவை மூன்றும்

3. யாரே உனைப்போல் அனுதினம் உழைப்போர்? – இது எவர் மொழி?

   அ) வாய்க்கால் ஆ) நாங்கூழ் இ) நடராசன் ஈ) புல்

4. தமிழின் முதல் பாவடிவ நாடகநூல்

   அ) இரகசியவழி ஆ) மனோன்மணீயம்

   இ) நூல்தொகை விளக்கம் ஈ) திருவிதாங்கூர் அரசர் வரலாறு

5. சொற்களை ஒழுங்குபடுத்திச் சொற்றொடராக்குக.

   (அ) நான் எழுதுவதோடு இன்று இலக்கிய மேடைகளிலும் இதழ்களில் பேசுகிறேன்.

   (ஆ) இன்று நான் இதழ்களில் எழுதுவதோடு இலக்கிய மேடைகளிலும் பேசுகிறேன்.

   (இ) இலக்கிய மேடைகளிலும் இன்று எழுதுவதோடு நான் இதழ்களில் பேசுகிறேன்.

   (ஈ) இதழ்களில் பேசுகிறேன் நான் இன்று இலக்கிய மேடைகளிலும் எழுதுவதோடு.

## குறுவினா

1. ஒழுக்கமும் பொறையும் உனைப்போல் யார்க்குள – இவ்வடி எதனைக் குறிப்பிடுகிறது?
2. நாட்டுப்புறத்திலும் பட்டணத்திலும் சிறந்து விளங்குவதாகத் தாகூர் எவற்றைக் கூறுகிறார்?
3. "நீளும் கைகளில் தோழமை தொடரும்
   நீளாத கைகளில் நெஞ்சம் படரும்" – தொடை நயங்களை எடுத்தெழுதுக.
4. "கற்றேன் என்பாய் கற்றாயா?" என்று அப்துல்ரகுமான் யாரிடம் எதற்குக் கேட்கிறார்?
5. பாரம்பரியத்தில் வேரூன்றிய நவீன மனிதர் என்றும் கிழக்கையும் மேற்கையும் இணைத்த தீர்க்கதரிசி என்றும் அழைக்கப்பட்ட தாகூர் தமது 16ஆம் வயதிலேயே கவிதைகள் எழுதத் தொடங்கினார் – நிறுத்தக்குறியிடுக.

## சிறுவினா

1. இன்குலாப், "உலகுக்கு வேண்டும் நானும் ஓர் துளியாய்" எனக்கூறுவதன் நயத்தை விளக்குக.
2. அப்துல் ரகுமானின் கவிதையிலிருந்து வினா-விடை வடிவத்திற்கு ஏற்ற அடிகளைத் தருக.
3. வாய்க்காலின் சிறப்புகளாகக் குறிப்பிடப்படுவன யாவை?
4. தாமஸிகம் என்றால் என்ன?
5. இயற்கையுடன் உரையாடல் ஒன்றைக் கற்பனையாகப் பத்துவரிகளில் எழுதுக.

### நெடுவினா

1. நடராசன் தனிமொழிகளிலிருந்து நீங்கள் அறியும் கருத்துகளை எழுதுக.
2. சிதறிய கடிதங்கள் உணர்த்தும் கருத்துகளைச் சிதறாது விளக்குக.
3. நர்த்தகி நடராஜின் நேர்காணல்வழி அறிந்தவற்றைத் தொகுத்து அளிக்க.



## மொழியை ஆள்வோம்

### சான்றோர் சித்திரம்



திரு.வி. கலியாணசுந்தரனார்
(1883 – 1953)

"பொறுமையைப் பூணுங்கள்; பொறுமையின் ஆற்றலை உணருங்கள்; உணர்ந்து உலகை நோக்குங்கள்; நமது நாட்டை நோக்குங்கள்; நமது நாடு நாடாயிருக்கிறதா? தாய்முகம் நோக்குங்கள்; அவள் முகத்தில் அழகு காணோம். அவள் இதயம் துடிக்கிறது. சாதி வேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை உட்பகை முதலிய நோய்கள் அவளை அரிக்கின்றன; எரிக்கின்றன; இந்நோய்களால் குருதியோட்டங்குன்றிச் சவலையுற்றுக் கிடக்கிறாள். இள ஞாயிற்றொளி நோக்கி நிற்கிறாள். இளஞாயிறுகளே! உங்கள் தொண்டெனும் ஒளியே அவள் நோய்க்குரிய மருந்து. அவ்வொளி வீசி எழுங்கள்; எழுங்கள்" என்று இளமைவிருந்து நூலில் தமிழினைச் செழுமையுறச்செய்ய இளைஞர்களை அழைத்தவர் திரு.வி.க.

திரு.வி.க தம் தந்தையிடம் தொடக்கத்தில் கல்வி பயின்றார். வெஸ்லி பள்ளியில் படித்தபோது, நா. கதிரைவேலர் என்பவரிடம் தமிழ் படித்தார். பிறகு மயிலை தணிகாசலம் என்பவரிடம் தமிழோடு சைவ நூல்களையும் பயின்றார். 'தமிழ்த்தென்றல்' என்று அழைக்கப்படும் திரு.வி.க. பெண்ணின் பெருமை, முருகன் அல்லது அழகு, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், என் கடன் பணி செய்து கிடப்பதே, சைவத்திறவு, இந்தியாவும் விடுதலையும், பொதுமை வேட்டல், திருக்குறள் விரிவுரை முதலிய பல நூல்களை எழுதினார். சிறந்த மேடைப்பேச்சாளராகவும் எழுத்தாளராகவும் விளங்கிய இவர் தேசபக்தன், நவசக்தி இதழ்களுக்கு ஆசிரியராகவும் விளங்கினார்; தமிழ் அறிஞர்களுள் அரசியல் இயக்கங்களில் அதிகமான ஈடுபாடு கொண்டவராக இருந்தார். தொழிற்சங்கத்தைத் தோற்றுவித்துத் தொழிலாளர்களின் உரிமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபட்டார். சென்னை இராயப்பேட்டை வெஸ்லி கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தார். இலக்கியப்பயிற்சியும் இசைப்பயிற்சியும் பெற்றவர்.

### கீழ்க்காணும் வினாக்களுக்கு விடையளி:

1. பொறுமையைப் பூணுங்கள்; பொறுமையின் ஆற்றலை உணருங்கள்; உணர்ந்து உலகை நோக்குங்கள் – ஒரே தொடராக மாற்றுக.
2. எவையேனும் இரண்டு முன்னிலைப் பன்மை வினைமுற்றுச் சொற்களைப் பத்தியிலிருந்து எடுத்து எழுதுக.
3. தமிழ்த்தென்றல் என்று திரு.வி.க அழைக்கப்படுகிறார் – இத்தொடரைச் செய்வினைத் தொடராக மாற்றுக.

4. ஞாயிற்றொளி – புணர்ச்சி விதி கூறுக.

5. எண்ணும்மைத் தொடர்கள் இரண்டனை எடுத்து எழுதுக.

**தமிழாக்கம் தருக.**

*An eye for an eye only ends up making the whole world blind.*

*You must be the change you wish to see in the world.*

*The weak can never forgive. Forgiveness is the attribute of the strong.*

*Nobody can hurt me without my permission.*

*You must not lose faith in humanity. Humanity is an ocean; if a few drops of the ocean are dirty, the ocean does not become dirty.*

– *Mahathma Gandhi*

**கதையைப் படித்துப் பொருளுணர்ந்து நிகழ்வை உரையாடலாக மாற்றுக. கதையில் காணலாகும் எவையேனும் ஐந்து பிறமொழிச் சொற்களுக்கு உரிய தமிழ்ச்சொற்களை எழுதுக.**

அலுவலகத்துக்குள் நுழைகையில் போன் அடித்தது. எடுத்துப் பேசினாள். மறுமுனையில் "உடனே ஆபிஸ்க்கு லீவ் போட்டுட்டு என் ஆபிஸ்க்கு வா கவி. இன்ஷூரன்ஸ் பேப்பர்ல கையெழுத்து போடணும். உன் போட்டோவையும் சஞ்சுவின் போட்டோவையும் எடுத்துட்டு வா" என்று சொல்லி முடித்ததும் போனைத் துண்டித்தான் செந்தில். ஏற்கெனவே தன் ஆபிஸில் நடக்க இருக்கும் ஆடிட்-ஐ நினைத்துக் கொண்டிருந்த அவளுக்குச் செந்திலின் போன் பதற்றத்தையும் குழப்பத்தையும் தந்தது. குழப்பத்துடன் போனை வைக்கையில் மறுபடியும் போன் ஒலித்தது. இம்முறை சஞ்சுவின் பள்ளி நம்பர். ஒரு நொடி பதற்றமாகிவிட்டது. எதற்கு அழைக்கிறார்களோ? என்று பயந்தபடி போனை எடுத்தேன். போனில் சஞ்சுவின் குரல். "அம்மா நான்தான்" என்றான். "என்னடா, உடம்புக்கு எதாவதா?" என்றேன் டென்ஷனை மறைத்தபடி. "அதெல்லாம் ஒன்னுமில்லைம்மா. மிஸ் கிட்ட ஸ்பெஷல் பர்மிஷன் கேட்டு உனக்கு போன் பண்றேன். காலையிலேயே சொல்ல நினைச்சேன். மறந்திட்டேன். ஸாரிம்மா என்றான். எதுக்குடா சஞ்சு ஸாரி என்றேன். இன்னிக்கு உனக்கு பர்த்டேம்மா. மறந்துட்டியா" என்றான். அட ஆமாம். ஜூலை பத்து. இப்படியா மறப்பேன். செந்தில்கூட நினைவில் வைத்து வாழ்த்தவில்லை. சஞ்சு கொஞ்சும் குரலில் "ம்மா நைட்கூட ஞாபகம் இருந்துச்சு காலைல டக்குனு மறந்துட்டேன். சாரிம்மா ஹாப்பி பர்த்டே டூ யூ" என்றான். ஒரு நொடி எதுவும் பேச முடியாமல் திக்கிவிட்டேன். அவனே தொடர்ந்து "அம்மா உனக்காக ஒரு சூரியகாந்திப்பூ வரைஞ்சி வச்சிருக்கேன். ஈவ்னிங் சீக்கிரமா வா தரேன் ஓகேவா?" என்றான். "தாங்க்ஸ்டா செல்லம், தாங்க்யூ ஸோ மச்" என்றேன். அந்த நாளின் சுமைகள் எல்லாம் கரைந்து மனசு நெகிழ்ந்து உருகியது. ரயில், அலுவலகம், செந்தில் என எல்லாம் மறைந்து போய், நானும் சஞ்சுவும் கைகள் கோர்த்து நடப்பதுபோல இருந்தது.

**உரை எழுதுவோம்.**

உங்கள் பள்ளியில் திரு. அப்துல்கலாம் அவர்களின் நினைவுதினம் கொண்டாடப்படுகிறது. பள்ளிக்கு அருகில் உள்ள கல்லூரியின் மாணவர்கள் திரட்டிய நிதியைக் கொண்டு பள்ளியின் உயர்வகுப்பு மாணவர்கள் அனைவருக்கும் திருக்குறள் கையடக்கப் புத்தகம் ஒன்றும், நில வரைபடப் புத்தகம் ஒன்றும் பரிசளிக்கிறார்கள். அவர்களுக்குப் பள்ளியின் சார்பாக நன்றி கூற ஒருபக்க அளவில் நன்றியுரை ஒன்றை எழுதுக.

**இலக்கிய நயம் பாராட்டுக**

# சங்கத் தமிழ் அனைத்தும் தா

இரண்டாயிரமாண்டு நீளமுள்ள கவிதையை ஈன்ற
மூதாயியைத் தேடியலைந்த களைப்பில் பறவை
ஒருகாலத்தில் தன் தாகம் தணித்த
மண்பானையைத்தேடி அல்லலுற்றது.

பாடப்புத்தகத்தில் படம்பார்த்துச் சொன்ன
கதைக்குள்ளிருந்து நீரூற்று எதுவும் பீறிடவில்லை
ஐவகை நிலங்களையும் அலகில் கொத்தி
அடைகாக்க இன்னொரு இடமற்றுப் போக...

நீலவண்ணக் கடற்பரப்பில்
அந்தப் பறவை ஒரு முட்டை இட்டது.
அதன் குஞ்சு பொரிப்பில்
ஆயுதமும் புல்லாங்குழல் மறுகையுமாய்
அணங்கொருத்தி உதித்தெழுந்தாள்.

வயல்வெளியெங்கும் சலசலத்துத் திரிந்த
மருதயாழின் ஓசை வழிந்தோட
கால்கள் சுழன்றாடிய விறலிக் கூத்தின்முன்
பிரபஞ்சமே தன்னைப் புனைந்து கொண்டது.

பாணனின் கோப்பை
இப்போது காலியாயிருந்தது
தன் உடலிலிருந்து கிள்ளிப் பறித்த பூவைக்
குழந்தைக்குத் தந்து வலியில் மூழ்கிய
பச்சைத்தாவரத்தின் கண்களில்
ஒருதுளி ரத்தம் தேங்கியிருந்தது.

________________________

சங்கக் கவிதையின் எழுத்தொன்றைத்திறந்து
காக்கைப்பாடினி வெளியேவந்தாள்.

ஆறாம்நிலத்தில் துளிர்த்த அறிவியல்தமிழி நீயென
அருகே வந்தவள் முத்தம் தருகையில்
பறவைகள் தொலைந்துபோன பூமியில்
குளிரூட்டப்பட்ட அறைக்குள் உட்கார்ந்து
கணிப்பொறித்திரையில்
என் சின்னமகள்
ஒரு காக்கையை வரைந்து கொண்டிருந்தாள்

– ஹெச்.ஜி. ரசூல்.



## மொழியோடு விளையாடு

**எண்ணங்களை எழுத்தாக்குக.**



## குறுக்கெழுத்துப் புதிர்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | 2 | | 3 | 4 |
| 5 | | | | | | | 6 | | |
| | | | | | | | | | |
| | | | | | | | | | |
| | | | 7 | | | | | | |
| | | | | 8 | | | 9 | | |
| | | 10 | 11 | | | 12 | | 13 | |
| 14 | | 15 | | 16 | | | | | |
| | | | | 17 | | | | | 18 |
| | 19 | | | | | | | | 20 |

### இடமிருந்து வலம்

*1. மக்களுக்கு நலம் செய்யும் வாழ்வியல் நெறிகளைக் கூறும் துறை (9)*

*7. தேன் – மற்றொரு சொல் (4)*

*15. புல்லின் இதழ்கள் - நூலாசிரியர் (4)*

*16. கற்ற வித்தைகளை அரங்கேற்றும் இடம் (4)*

*17. சி.சு. செல்லப்பா நடத்திய இதழ் (4)*

*19. ஜி.யு. போப் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பக்தி இலக்கியம் (6)*

### வலமிருந்து இடம்

*6. யானை – வேறொரு சொல் (5)*

*9. வந்தவாசிக்கு அருகில் சமணப்பள்ளி இருந்த ஊர் (3)*

*12. உமறுப்புலவரை ஆதரித்தவர் (5)*

*20. கவிஞர் மீரா நடத்திய பதிப்பகம் (4)*

### மேலிருந்து கீழ்

*2. புதுமைப்பித்தனின் புகழ்பெற்ற சிறுகதை (4)*

*3. பாரதி நடத்த விரும்பிய கருத்துப்பட இதழ் (6)*

*4. இளையராஜா உருவாக்கிய இராகம் (5)*

*5. நற்றிணை 153ஆவது பாடலை இயற்றியவர் (6)*

*6. அணுவைப்போலச் சிறுத்து நிற்கும் ஆற்றல் (3)*

*12. இந்தச் சொல்லின் திரிபே சீறா (3)*

*13. மகாபாரதத்தில் கொடை வீரன் (4)*

*14. பாரதிதாசன் நடத்திய இதழ் (3)*

### கீழிருந்து மேல்

*7. தவறு – வேறொரு சொல் (2)*

*8. தருமு சிவராம் என்னும் புனைபெயரிலும் எழுதியவர் (4)*

*9. மூங்கில் - மற்றொரு சொல் (2)*

*10. மாணிக்கவாசகர் பிறந்த ஊர் (6)*

*11. ஐங்குறுநூறு பாடும் மலர்களில் ஒன்று (2)*

*18. மலை என்றும் சொல்லலாம் (2)*

*19. பத்தாம் திருமுறை (7)*



## நிற்க அதற்குத் தக

மனித இனம் கூடிவாழும் இயல்புடையது. நாம் அன்றாடம் பலருடன் பழகக்கூடிய இன்றைய சூழலில் ஏற்படக்கூடிய சிறிய சிக்கல்களை எவ்வாறு எதிர்கொள்வீர்கள்?

| சிக்கல் | தீர்வு |
|---|---|
| பக்கத்து வீட்டுக்காரர், மிகச் சத்தமாகப் பாடல் கேட்டுக் கொண்டிருக்கின்றார் | |
| நீங்கள் மட்டைப்பந்து போட்டியைப் பார்க்க வேண்டும் என்று விரும்பும் நேரத்தில் உங்கள் தங்கை தொலைக்காட்சித் தொடர் ஒன்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். | |
| உங்கள் அருகில் அமர்ந்திருக்கும் உங்கள் வகுப்புத் தோழர், உங்கள் மேசை மீது உணவினை இறைத்தபடி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். | |
| நீங்கள் அடுத்தநாள் தேர்வுக்காகப் படித்துக்கொண்டிருக்கும்போது, உங்கள் வகுப்புத் தோழர், பாடத்தில் ஏற்பட்ட ஐயத்திற்காக உங்களுக்குத் தொலைபேசியில் அழைப்பு விடுக்கிறார். | |

## கலைச்சொல் அறிவோம்

நாங்கூழ்ப் புழு – Earthworm

உலகமயமாக்கல் – Globalisation

முனைவர் பட்டம் – Doctor of Philosophy (Ph.D.)

விழிப்புணர்வு – Awareness

கடவுச்சீட்டு – Passport

பொருள்முதல் வாதம் – Materialism



### அறிவை விரிவு செய்

1. மனைவியின் கடிதம் – இரவீந்திரநாத தாகூரின் சிறுகதைகள் – மொ.பெ – த. நா. குமாரசுவாமி
2. ஒவ்வொரு புல்லையும் பெயர் சொல்லி அழைப்பேன் – கவிஞர் இன்குலாப்
3. நான் வித்யா – லிவிங் ஸ்மைல் வித்யா




### இணையத்தில் காண்க

*http://www.sothebys.com/en/news-video/videos/2015/03/rabindranath-tagore-indian-art.html* – தாகூர் பற்றிய ஆவணப்படம்

*http://ingulab.blogspot.in/* – கவிஞர் இன்குலாபின் வலைத்தளம்

*http://www.narthakinataraj.com/* – நர்த்தகி நடராஜின் இணையத்தளம்




தமிழ்நாடு அரசு

# மேல்நிலை
# இரண்டாம் ஆண்டு

# பொதுத் தமிழ்

தமிழ்நாடு அரசு விலையில்லாப் பாடநூல் வழங்கும் திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது

## பள்ளிக் கல்வித்துறை

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

# பொருளடக்கம்

*( * ) இக்குறியிட்ட பாடல்கள் மனப்பாடப்பகுதி*



*மின் நூல்*



*மதிப்பீடு*



*இணைய வளங்கள்*

இயல் 1

# உயிரினும் ஓம்பப் படும்

மொழி



இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழ் – பிராம்மி எழுத்துகள் பொறிக்கப்பட்ட பாறை, மாங்குளம், மதுரை.



## கற்றல் நோக்கங்கள்

- கவிஞரின் மொழிப்பற்றைத் தாமும் உணர்ந்து பிறருக்கும் உணர்த்துதல்.
- மொழி வெளிப்படுத்தும் நடையியல் கூறுகளைப் படித்துணர்ந்து தமிழ்மொழியின் நுட்பம் அறிதல்.
- மரபுக் கவிதையினைப் பொருளுணர்ந்தும் சீர்பிரித்தும் படிக்கும் ஆற்றல் பெறுதல்.
- கடித இலக்கியத்தின் வாயிலாகச் சமூக உணர்வை வெளிப்படுத்தும் திறன் வளர்த்தல்.
- மொழியின் அடிப்படை இலக்கணத்தை அறிந்து பிழையின்றி எழுதும் திறன் பெறுதல்.



## பாடப்பகுதிகள்

- இளந்தமிழே! – சிற்பி பாலசுப்பிரமணியம்
- தமிழ்மொழியின் நடை அழகியல் – தி.சு. நடராசன்
- தன்னேர் இலாத தமிழ்
- தம்பி நெல்லையப்பருக்கு – பாரதியார்
- தமிழாய் எழுதுவோம்

கவிதைப்பேழை

மொழி க




# இளந்தமிழே!

– சிற்பி பாலசுப்பிரமணியம்

**நுழையும்முன்**

தமிழ்மொழி நம் அடையாளம்; பண்பாட்டின் நீட்சி; தோன்றிய காலந்தொட்டு மக்களால் பேசப்பட்டு, எழுதப்பட்டு உயிர்ப்போடும் இளமையோடும் இருப்பது. இன்றும் தமிழ்மொழியின் புகழ் எத்திசையும் இலங்குகிறது. அத்தகைய தமிழின் பெருமையைப் பேசாத மரபுக்கவிஞர்கள் இலர் எனலாம். தமிழ் பல புதிய உள்ளடக்கங்களால் தன்னைப் புதுப்பித்துக்கொண்டு பழஞ்சிறப்பைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டும் என்பது கவிஞர்களின் அவா.

*செம்பரிதி மலைமேட்டில் தலையைச் சாய்ப்பான்*
*செந்நிறத்துப் பூக்காடாம் வான மெல்லாம்!*
*தம்கைகள் அதனைப்போல் சிவந்து நோகத்*
*தாமுழைக்கும் தொழிலாளர் வியர்வை வெள்ளம்*
*விம்மு கின்ற தோள்மீதில் முத்துமுத்தாய்*
*வீற்றிருக்கும், அவையெல்லாம் வியந்து பாட*
*எம்மருமைச் செந்தமிழே! உன்னை யல்லால்*
*ஏற்றதுணை வேறுண்டோ? இயம்பி டாயே!*

*மூண்டுவரும் கவிதைவெறிக் குணவாய் எங்கள்*
*முத்தமிழே! நீயுள்ளாய்; முன்னம் ஓர்நாள்*
*பாண்டியரின் சங்கத்தில் கொலுவி ருந்தாய்!*
*பாரிமுதல் வள்ளல்களை ஈன்று தந்தாய்!*
*மீண்டுமந்தப் பழமைநலம் புதுக்கு தற்கு*
*மெய்சிலிர்க்கத் தமிழ்க்குயிலே! கூவி வா, வா!*
*கூண்டதனை உடைத்தெழுந்த சிங்கம் போலக்*
*குளிர்பொதிகைத் தென்தமிழே! சீறி வா, வா!*



